# சைவ சமயத் தோற்றமும் வளர்ச்சியும்





டி.பி.சித்தலிங்கம்

சோமு நூலக வெளியீடு – 2



# சைவ சமயத் தோற்றமும் வளர்ச்சியும்

டாக்டர் டி. பி. சித்தலிங்கம்

சோமு நூலகம்
சாஸ்திரி நகர் அஞ்சல் நிலையக் கட்டிடம்,
சென்னை 600 020

1979 – 8.00

சோமு நூலக வெளியீடு எண் : 2

முதல் பதிப்பு : மார்ச்சு 5, 1979.



விலை ரூ. 8-00

அச்சிட்டோர் : குருகுலம் பிரிண்டர்ஸ், வேதாரண்யம்.

| | | |
|---|---|---|
| Title | : | Saiva Samayat Thotramum Valarchchiyum |
| Subject | : | Saiva Siddhantha Philosophy |
| Language | : | Tamil |
| Author | : | Dr. T. B. Siddhalingam |
| Print | : | First Edition |
| Date of Publication | : | March 5, 1979 |
| Copies | : | 1,000 |
| Price : | : | Rs. 8-00 |
| Library Code | : | R 6, 73 9 |
| Press | : | Gurukulam Printers, Vedaraniam-614 810 |

Published by Somu Noolagam, Sastrinagar P. O. Building
Madras-600-020 (Phone 413701)

# முன்னுரை

*

'கல்வியில் கரையிலாத காஞ்சி மாநகர்' நான் பிறந்த ஊர். அவ்வூரில் உள்ள மெய்கண்டார் கழகம் ஞாயிற்றுக் கிழமை தோறும் வாரவழிபாடு நடத்தி வருகிறது. காஞ்சியில் உள்ள சிவன் கோயில்களுக்குச் சென்று, அவ்வக் கோயிலுக்குரிய காஞ்சிபுராணப் படலத்தை ஓதி அங்குள்ள பெருமானை வழிபாடு செய்வது வழக்கம். வாரவழிபாடு சிவஞானபோதப் பாராயணத்தோடு தொடங்கும். அவ் வழிபாடுகளில் கலந்து கொள்ளும்பேறு சிறுவயதில் எனக்குக் கிடைத்தது.

பின்னர், காசி இந்துப்பல்கலைக் கழகத்தில் பணியாற்றிய போது, பேராசிரியர் டாக்டர் கி. சிவராமன் அவர்களிடம் ஆராய்ச்சி மாணவனாகச் சேர்ந்து சைவசித்தாந்தம் பயிலும் வாய்ப்பு ஏற்பட்டது. கோடைவிடுமுறைகளின்போது சித்தாந்தப் பேராசிரியர் திரு க. வச்சிரவேல் முதலியார் அவர்களிடம் விளக்கம் கேட்கவும் பயிலவும் வாய்ப்பு நேர்ந்தது. இவ்விரு பேராசிரியர்களுக்கும் வணக்கங்களையும் நன்றியையும் கூறிக் கொள்கிறேன்.

டாக்டர் பட்டத்துக்கான ஆராய்ச்சிக் கட்டுரையின் ஒரு பகுதியே இந்நூல் வடிவாக வெளிவருகிறது. சைவ சமயத்தின் வளர்ச்சியை, இலக்கியங்களின் துணை கொண்டும் சமய நூல்களின் அடிப்படையிலும் எடுத்துக் கூற முயல்வதே இந்நூலின் நோக்கம். "குற்றம் களைந்து குணம் பெய்து வாசித்தல் கற்றறிந்த மாந்தர் கடன்".

இந்நூலை வெளிக்கொணருமாறு என்னை ஊக்குவித்தவர், டாக்டர் தமிழண்ணல், எம். ஏ., பி. எச்டி., திரு ச. கங்காதரன்

எம். ஏ., எம் லிட்., திரு ச. சாம்பசிவன், எம். ஏ. முதலிய பலராவர். அனைவர்க்கும் என் நன்றி.

நண்பர் அ. விநாயகமூர்த்தி, எம். ஏ., எம்ஃபில், இந் நூலின் கையெழுத்துப்படியிலிருந்து அச்சுப்படிவரை நன்கு நோக்கித் திருத்தம் செய்தார். ஒவ்வொரு பக்கத்திலும் அவர் கைவண்ணத்தைக் காணலாம் என்பது மிகையாகாது. இந்நூல் உருவாகுங்கால் உடனிருந்து உதவியவர் திரு. வெ. பூமிநாதன், எம். ஏ., ஆவர். இவ்விருவரும் எல்லா நலன்களும் பெற்றுவாழ இறையருளை வழுத்துகின்றேன்.

திருவாளர் சோமலெ நாடறிந்த எழுத்தாளர், தாம் எழுதுவதோடன்றிப் பிறரையும் எழுதுமாறு ஊக்குவிக்கும் பண்பாளர், என்நலனில் நாட்டமுடையவர். இவ்வாய்ப்பைப் பயன்படுத்தி என் அன்பையும் நன்றியையும் அவர்க்குத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

பேராசிரியர் டாக்டர் வ. ஆ. தேவசேனபதி அவர்கள் சென்னைப்பல்கலைக்கழகத்தின் டாக்டர் இராதாகிருஷ்ணன் மேல்நிலை மெய்ப்பொருளியல் மையத்தின் நெறியாளராய் இருந்து, சைவசமயத்துக்கும் மெய்ப்பொருளியல் ஆராய்ச்சிக்கும் பல்லாற்றானும் தொண்டுபுரிந்தவர். சித்தாந்தத்தை மேனாட்டுத் தத்துவநூல்களுடன் இணைத்தும் உறழ்ந்தும் கண்டு பல்வகையால் வெளிப்படுத்தியவர். தமிழிலும் ஆங்கிலத்திலும் சிறந்த தத்துவநூல்களை எழுதிய பேராசிரியர். அவர்கள் புலமைமிக்க அணிந்துரை ஒன்றை இந்நூலுக்கு வழங்கியுள்ளார்கள். அவர்களுக்கு என் வணக்கத்தையும் நன்றியையும்தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூல் குறுகிய காலத்தில் வெளிவருவதற்கு உறு துணையாயமைந்த சோமு நூலகத்தார்க்கும் குருகுலம் பிரிண்டர்ஸாருக்கும் நன்றியுடையேன்.

டி. பி. சித்தலிங்கம்

# அணிந்துரை



தென்னாடுடைய சிவன் எந்நாட்டவர்க்கும் இறைவன் என்பதைப்போலவே தமிழ்நாட்டில் செல்வாக்குடன் விளங்கும் சைவசமயம் நம் நாட்டின் பிறபகுதிகளில் உள்ள சில பல்கலைக் கழகங்களிலும் மேலை நாடுகளிலும் விரும்பிக் கற்கப் பெறுகின்றது. சைவத்தை ஓரளவு தெரிந்து கொண்டவர்கள் அதன் மூலநூல்களை ஆராய்வதற்காக ஸமஸ்கிருதம் தமிழ் ஆகிய மொழிகளைக் கற்க முற்படுகின்றனர். இந்நிலையில் 'சைவ சமயத்தின் தோற்றமும் வளர்ச்சியும்' பற்றிய நூல் வெளியிடப் பெறுவது பலருக்கு மிக உதவியாயிருக்கும் என்பது உறுதி.

இந்நூல் காசிப் பல்கலைக் கழகத்தின் Ph. D பட்டத்திற்காக ஆய்வுக் கட்டுரையாக எழுதப் பெற்றதின் முதற் பகுதி. இதன் ஆசிரியர் டாக்டர் T. B. சித்தலிங்கம் அவர்கள் சென்னைப் பல்கலைக்கழகத்தின் முதுகலைப் பட்டம் (M. A.) பெற்றவர், காலஞ்சென்ற டாக்டர் மு. வரதராசனருடைய மாணக்கர். டாக்டர் மு. வ. அவர்கள் தம் அன்பிற்கும் பாராட்டிற்கும் உரியவர் என இவரைப் பற்றி என்னிடம் கூறியது இவருடைய கல்வித் திறனும் பண்பு நலனும் அவரை மிகவும் கவர்ந்திருந்தன என்பதைப் புலப்படுத்தியது. கல்வியும் ஆராய்ச்சியும் இவருக்குப் பொழுது போக்காகவோ ஊதியம் தரும் தொழிலாகவோ குறுகிவிடாமல் வாழ்க்கையின் கடைப்பிடியாக உள்ளன என்பதை இவருடைய ஆராய்ச்சிக் கட்டுரையைப் படித்தும் இவருடன் பத்து ஆண்டுகளுக்கு மேலாகப் பழகியும் நான் தெரிந்து கொண்டேன்.

ஆய்வுக்கட்டுரை உமாபதி சிவத்தின் நூல்களைப் பற்றிய ஆராய்ச்சியாதலின் ஆசிரியர் அவ்வாராய்ச்சிக்கு முன்னுரையாகச் சைவத்தின் தோற்றத்தையும் வளர்ச்சியையும் சுருக்க விளக்கமாக ஏற்ற பல தலைப்புக்களுடனும் சான்றுகள் மேலும் ஆராய விரும்புவோருக்கு உதவும் வகையில் அமைந்த அடிக் குறிப்புக்களுடனும் தந்துள்ளார்.

இந்நூலை உளமாரப்போற்றி வரவேற்கிறேன். இதன் தொடர்ச்சியாக உள்ள பகுதியையும் ஆசிரியர் விரைவில் வெளியிடுவதுடன் மேலும் பல நூல்களை எழுதித் தமிழ்ப் பண்பாட்டிற்கும் சைவத்திற்கும் நீண்டகாலம் தொண்டு செய்ய இவருக்கு இறைவன் திருவருள் துணைசெய்வதாக!

சென்னை
25—2—1979.

வ. ஆ. தேவசேனபதி,
(டாக்டர் S. இராதாகிருஷ்ணன்
மேல்நிலை மெய்யுணர்வுக் கல்வி நிறுவனத்தின்
முன்நாள் இயக்குநர்)

# பொருளடக்கம்.

# 1. சைவ சமயத்தோற்றம்

"தென்னாடுடைய சிவனே போற்றி; எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி" என்று வாழ்த்துகிறார் மாணிக்கவாசகர்.[1] சிவபெருமான் தென்னாட்டுக்கே ஆதரவு தருவதாகச் சுந்தரமூர்த்தி நாயனார் கூறுகிறார். சிவன் தென்னாட்டவர் என்றும், கிழக்கு மேற்கு வடக்குத் திசைகளில் அவர் கருத்துச் செல்வதில்லை என்றும் அவர் குறிப்பிடுகிறார்.[2] இறைவனுக்குகந்த நாடு தென்னாடு என்பது இதன் பொருளன்று; ஒரே இறைவனைத் தொடர்ந்து எக்காலத்தும் வழிபடும் பெருமை இந்நாட்டுக்கு உண்டு என்பதுதான் இதன் கருத்து. இந்து சமயம் உலகுக்களித்த தெய்வமே சிவன் என்று அறிஞர் பலர் கூறும் கருத்தை இவ்வடிகள் காட்டுகின்றன.[3] வேதங்களில் சிவன் என்னும் சொல் இருக்கு வேதத்தில் பெயர்ச்சொல்லாகப்பயன்படுத்தப்படாமை இந்தக்கருத்தை வலியுறுத்துகிறது. இச்சொல், மங்கலந்தருபவர் என்ற பொருளில் பல்வேறு தெய்வங்களுக்கும் — ஒருமுறை உருத்திரனுக்குமே — பயன்படுத்தப்பட்டுள்ளது. (X. 92. 9.) சினம் மிகுந்த உருத்திரன், இனியவன், மங்கலந்தருபவன் என்று முரண்படக்கூறும் வகையில் இது அமைந்துள்ளது.[4] சைவ சமயத்தின் தோற்றம் கற்பனைக் கெட்டாததாய் அமைந்துள்ளது; வரலாற்றுக் காலத்துக்கு உட்பட்ட சைவம், ஆரியர், ஆரியருக்கு முற்பட்டவர் என்னும் இரு வேறு நெறிகளின் இணைப்பேயாகும் என்று வரலாற்றாசிரியர் கூறுகின்றனர்.[5] மொகஞ்சதரோ, ஹாரப்பா ஆகிய இடங்களில் மேற்கொள்ளப்பட்ட அகழ்வாராய்ச்சிகள், ஆரியருக்கு முற்பட்டதொரு நாகரிகம் — திராவிட நாகரிகம் என்றே கூறத்தக்கது — நிலவி வந்தது என்பதை ஐயமறத் தெரிவிக்கின்றன.[6] இவ்வகழ்வாய்வுகளிலிருந்து, சைவசமயம் பற்றிய — குறிப்பாகச் சிவனுரு அல்லது அதற்கு முற்பட்ட வடிவ வழிபாடு பற்றிய—குறிப்புக்களைப் பெறுகிறோம்.[7]

உலகின் மிகப்பழைய உயிரோட்டமுள்ள சமயம் சைவமே யாகும் என்று சர் ஜான் மார்ஷல் கூறுவது உண்மையே யாம்.[8]

சைவம் வேதகாலத்தில்தான் தோன்றியது என்று கூறுபவர்கள்கூட, அந்த நிலப்பகுதியிலேயே வாழ்ந்து வந்த மக்களின் தெய்வமாகிய சிவனேடு வைதிக சமயத்து உருத்திரன் இணைக்கப்பட்டான் என்பதை ஒப்புக்கொள்கின் றனர்.[9] இந்த இரு கடவுளர்களும் தொடக்கத்தில் ஒருவரா, வேறுபட்டிருந்து இணைந்தவரா என்பது தெளிவாக வில்லையாயினும், சைவசமயம், வேதகாலத்து உருத்திர வழிபாட்டுக்கு முற்பட்டது என்பது இன்று ஒப்புக் கொள்ளப் பட்ட ஒன்ருகும். சிவன் என்னும் பெயரே திராவிடமொழிச் சொல், இது பிற்காலத்தில் வடமொழியில் ஏற்றுக்கொள்ளப் பட்டது என்று ஒப்புக் கொள்ளத்தக்க வகையில் விளக்கப் பட்டுள்ளது.[10]

தென்னுட்டில் வழங்கும் நான்கு திராவிட மொழிகளுள், கிறிஸ்துவுக்கு முற்பட்ட மிகப்பழைய இலக்கியம் தமிழில் தான் உண்டு. எனவே, திராவிடருக்குரிய அனைத்தையும், வேண்டுமளவுக்கும் பொருத்தமாகவும் பிரதிபலிப்பது தமிழேயாகும். சைவ சித்தாந்த நெறியை விளக்கும் திரு முறைகளும் தத்துவங்களும் தமிழில் மட்டுமே[11] கிடைப்ப தால் தமிழ்நாட்டில் வழங்கி வந்த சிவவழிபாட்டையும், அதனேடு வளர்ந்த தத்துவத்தையும் கண்டறிவதற்குத் தமிழ் இலக்கிய வரலாற்றைக் காண்பதே போதுமானதா கும்.

அடிக்குறிப்புகள்

1. திருவாசகம், *போற்றித் திரு அகவல், அடிகள்* 164—5;

2. *''தென்னனைக் குடபாலின் வடபாலின் குணபாற் சேராத சிந்தையான்'*—7. 38. 8.

3. *''சைவம், தென்னிந்தியாவின் மிகப்பழைய, வரலாற்றுக்கு முற்பட்ட சமயம் ஆகும்; அது ஆரியருக்கு முற்பட்ட காலத்திலிருந்தே வழக்கில் இருந்து வருகிறது'' என்று ஜி. யூ. போப் குறிப்பிடுகிருர்.* TIRUVACHAKAM, Reprint, 1959, *ப.* LXXIV.

"காளியும் சிவனும் திருமாலும் வேதகாலத்துக் கடவுளர்களல்லர்; எனவே அவர்கள் ஆரியர்களைச் சேர்ந்தவர்களுமல்லர். அவர்கள் திராவிடர்களைச் சேர்ந்தவர்கள் என்பதைத்தவிர வேறு முடிவுக்கு வருவதற்கில்லை" G. Slater, Dravidian Elements in Indian Culture; p. 50—cited in the Saiva Siddhanta as a Philosophy of Practical knowledge, 1966. p. 38.

"சைவத்தைப் போன்றே யோகமும் ஆரியருக்கு முற்பட்டகாலத்து மக்களிடையே தோன்றி வழங்கி வந்தது. சாம்ராஜ்யங்கள் உருவான காலம் வரை, இந்தோ—ஆரிய சமயத்தில் யோகம் முக்கியமான இடத்தைப் பெருதிருப்பதற்கு இதுவே காரணமாகும். — Sir John Marshall, Mohenjadaro and Indus Civilization, Vol I, 1931, p. 54.

4 K. A. N. Sastri, The Cultural Heritage of India, Vol/IV, 1956, p. 64.

5. மேற்படி நூல், Vol/II, p. 18.

6. கிறிஸ்துவுக்கு முன்பு நான்கு அல்லது மூன்ரும் நூற்ருண்டில் சிந்துநதிக் கரையில் வாழ்ந்த மக்கள் மிகவுயர்ந்த நாகரிகத்தைக் கடைப்பிடித்தனர் என்பதையும், அதில் இந்தோ—ஆரிய நாகரிகத்தின் கூறுகள் எவையுமில்லை என்பதையும் அவை எடுத்துக் காட்டுகின்றன. — மார்ஷல், முற்கூறிய நூல் பகுதி I, முன்னுரை, பக்கம் V. இதனை ஏற்றுக் கொள்ளாதாரும் உண்டு. எடுத்துக்காட்டாக, க. ஆ. நீலகண்ட சாஸ்திரியார் "பொதுவாக ஏற்றுக்கொள்ளப்படுவது போன்று, ஹாரப்பா நாகரிகம் ஆரியருக்கு முற்பட்ட நாகரிகத்தையும், வேதகால நாகரிகம் ஆரிய நாகரிகத்தையும் குறிப்பதாகக் கொண்டாலும், அவற்றின் இணைப்பையே அங்கே காண்கிரும்"—என்று கூறுகிருர்.

Development of Religion in South India, 1963. p. 18.

7. "மொகஞ்சதரோவில் தாய்க் கடவுளோடு ஆண்கடவுளொன்றின் படிமமும் காணக் கிடக்கிறது; வரலாற்றுக் காலத்துச் சிவனுக்கு முற்பட்ட வடிவம் அது என்பதைத் தெளிவாக அறிய முடிகிறது" — மார்ஷல், முற்கூறிய நூல், பகுதி I, ப. 52. மேலும், "வரலாற்றுச் சிவனேடு, ஆரிய காலத்துக்கு முற்பட்ட இந்தக் கடவுளைப் பிணைக்கும் மற்ருென்று யோக வடிவமைப்பு ஆகும்." மேற்படி நூல், பக்கம், 53.

8. "மொகஞ்சதரோ — ஹாரப்பா வெளிக்காட்டும் பலவற்றுள், சைவம் மிகப்பழைய கற்காலத்து—அதற்கும் முற்பட்ட காலத்துச்—சமயம் என்பதும், இந்த வகையில் உலகின் மிகப்பழைய சமயமாகச் சைவம் விளங்குகிறது என்பதும் முக்கியமானவையாகும்" — மேற்படிநூல், பகுதி I, முன்னுரை, ப. VIII.

9. "பிராமணர்கள் புதியதொரு படிமத்தை உருவாக்கினர்கள் என்று எண்ண வேண்டுவதில்லை; அங்கிருந்த மக்களின் பெருங்கடவுளொன்றையே தமக்கேற்றவாறு உருவாக்கிக் கொண்டார்கள். ஆனல் இந்தக் காலத்து உருத்திரன் இருக்கு வேதத்தில் வரும் உருத்திரனின் பரிணமம் என்று கூறுவதற்கில்லை. வேதகாலத்து உருத்திரனேடு முல்லை நில வாழ்க்கையோடு ஒட்டிய ஒரு தெய்வம் இணைக்கப்பட்டது என்றே கொள்ளலாம்." — The Cambridge History of Ancient India, pp. 144—5, cited in the Saiva Siddhanta as a Philosophy of Practical Knowledge, op. cit., p. 30. "இருக்குவேத உருத்திரன் சிவனுக்கு முற்பட்டவன்"—க. ஆ. நீலகண்ட சாஸ்திரி, Development of Religion in South India, p. 18.

10. "சிவன் என்னும் சொல், திராவிடமொழிகளின் 'உரு' என்னும் வேர்ச் சொல்லிலிருந்து பெறப்பட்டது என்று கூறப்படுகிறது. இது சரியா யினும் தவருயினும் ஆரியர்கள் இக் கடவுளுக்குத் தந்த வடமொழி உரிச் சொல்லாகிய 'சிவ' (மங்கலந்தருபவன்) திராவிட மூலச் சொல்லுக்கேற்ற ஒலிவடிவம் கொண்டுள்ளது"—மார்ஷல், முற்கூறியநூல், பகுதி I, பக்கம் 56.

"உருத்திரன், சிவன் என்னும் இரு சொற்களின் மூலப் பொருளும் 'நிறமுடைமை' என்பதிலிருந்தே பெறப்பட்டது. இச்சொற்களைச் சிதைக் காமலே, ஒன்றை 'உரு' என்னும் வேர்ச் சொல்லிலிருந்தும், மற்ருென்றைச் 'சிவன்' என்பதிலிருந்தும் பெறலாம். இரண்டுமே நிறமுடைமையைக் குறிக்கும்"—மறைமலையடிகள், Saiva Siddhanta as a Philosophy of Practical Knowledge, Preface, pp. 34—35

"வினை பயன் மெய்உரு என்ற நான்கே
வகைபெற வந்த உவமத் தோற்றம்"

—தொல்காப்பியம், பொருள், 272

11. "சைவசித்தாந்தம் பற்றிய முறையான மேல்வரிச் சட்டமான நூல்கள் தமிழில் மட்டுமே உள்ளன. வடமொழியில் உபநிடதங்களிலும் வேறு பிற வேதாந்த நூல்களிலும் சைவசித்தாந்தத்தின் அடிப்படைக் கருத்துக் கள் இங்கொன்றும் அங்கொன்றுமாகச் சிதறிக் கிடந்தாலும்கூட வேத காலத்திலோ அதற்குப் பிற்பட்ட காலத்திலோ இந்தத் தத்துவம் பற்றிய நூல்கள் எவையுமில்லை."— மறைமலையடிகள், முற்கூறியநூல், பக். 53-54.

## 2. தமிழ்நாட்டில் சிவ வழிபாடு

"சைவம் சிவனுடன் சம்பந்தமாவது" என்று திருமூலர் சைவத்துக்கு இலக்கணம் கூறுகிறார்.[1] சிவனுடன் ஒன்றி யிருப்பதாகிய ஒரு நிலையை எடுத்துக் கூறும் சமய நெறி யையே 'சைவம்' என்று அவர் குறிப்பிடுகின்றார். சிவ வழி பாடு மிகப் பழைய தமிழ் இலக்கண நூலாகிய தொல்காப பியத்திற்கும் முற்பட்டது எனலாம்.

'மண வாழ்க்கையில் ஈடுபட்டு மக்களைப் பெற்று இன்ப வாழ்வு வாழ்ந்ததும், தலைவனும் தலைவியும் கடவுளைப் பற்றி எண்ண முற்பட வேண்டும். அதுவே வாழ்க்கையின் குறிக் கோளாகும்' என்று தொல்காப்பிய நூற்பா[2] கூறுகின்றது முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்ற நானிலத்திற்கும் உரிய தெய்வங்கள் இவையென மற்றொரு நூற்பா கூறுகின் றது.[3] இவற்றிலிருந்து பழந்தமிழர்கள் கடவுட்கொள்கை உடையவர்கள் என்பதும், எல்லாவற்றையும் கடந்து நின்ற முழுமுதற் கடவுள் ஒருவனைப் பற்றிய கோட் பாட்டினை உடையவர்கள் என்பதும் பெறப்படும்.[4]

"வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவன் கண்டது முதல்நூலாகும்" என்பது மற்றொரு நூற்பா.[5] 'வினையின் நீங்கிய முனைவன் என்பதாலேயே, அவன் என்றுமே வினை யினால் கட்டப்படாதவன் என்பது பெறப்படுகிறது. பழந் தமிழர்கள் முழுமுதற் கடவுளையே தம் கருத்தில் கொண்டிருந் தனர் எனலாம். இன்றும் பேச்சு வழக்கில் தெய்வத்தைக் குறிப்பதாக உள்ள கடவுள் என்னும் சொல் எல்லாவற்றை யும் "கடந்து நிற்பது" என்னும் பொருளைக் காட்டி நிற்கிறது. தொல்காப்பியர் இச்சொல்லை ஆள்கிறார்.[6] திருவள்ளுவர் ஆண்ட இறை[7] என்னும் சொல், இருத்தலையும் எல்லா இடத்திலும் நிறைந்திருத்தலையும் குறிக்கும். இவற்றிலிருந்து

எங்கும் நிறைந்தும் எல்லாவற்றையும் கடந்தும் உள்ள கடவுளைப் பற்றிய கோட்பாடு தமிழர்களிடையே நிலவி வந்தது எனலாம். தொல்காப்பியத்தில் வரும் கந்தழி என்னும் சொல்லும் தெய்வத்தையே குறிக்கும். "இறைவன்" முழுமுதற் கடவுள், சுதந்திரமுடையவன், கடந்து நிற்பவன் என்னும் பொருள்களை இச்சொல் குறிக்கும் என்று நச்சினார்க்கினியர் கூறுகிறார்.[8]

கிறிஸ்துவுக்கு முற்பட்டதாகிய திருக்குறள் தனது முதல் அதிகாரத்தில் இறைவனுடைய இயல்புகளை எடுத்துக் கூறுகிறது. உலகில் நிறைந்தும் அதனைக்கடந்தும் அதனோடு உடனாயும் இருப்பவன் இறைவன்.[9] தூய அறிவினன்,[10] நினைவார் நெஞ்சின்கண் சேர்பவன்,[11] விருப்பு வெறுப்பு அற்றவன்,[12] நல்வினை தீவினைகள் சென்று பற்றாதவன்,[13] புலன்களின் மயக்கத்தில் சிக்காதவன்,[14] ஒப்பற்றவன்,[15] அருள் மிகுந்தவன், அற வடிவினன்,[16] உயர் குணங்களை உடையவன்,[17] எங்கும் நிறைந்திருப்பவன்[18] என்று கூறுகின்றது. மற்றோர் இடத்தில், வினையை வகுப்பவன் என்றும் கூறுகின்றது.[19] இவற்றிலிருந்து சைவ சித்தாந்தத்தின் கருப்பொருளை உய்த்து உணரலாம்.[20]

பழந்தமிழர் நாகரிகம் பொதுநிலையதாகத் தோன்றினும் ஒருவகையில் சமயச் சார்பு உடையதாகவே தோன்றுகிறது. கிறிஸ்துவுக்கு முற்பட்ட சங்ககாலத் தொகை நூல்களுள் சிவன், திருமால் முதலிய கடவுளரைப் பற்றிய குறிப்புக்களைக் காண்கிறோம். காவிரிப்பூம்பட்டினம், மதுரை, வஞ்சி முதலிய பெருநகரங்களில் இக்கடவுளர்க்குரிய கோயில்கள் இருந்தன.[21] எட்டுத்தொகை நூல்களுள் அகநானூறு, புறநானூறு, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, கலித்தொகை ஆகிய ஐந்து நூல்களின் கடவுள் வாழ்த்துப் பாடல்கள் சிவனைப் பற்றியே அமைந்துள்ளன. ஆயின் இப்பாடல்கள் பிற்காலத்தைச் சார்ந்தவை. சங்க நூல்களில் சிவனைப் பற்றிய குறிப்புக்கள் விரிவாக வந்துள்ளன. சடைமுடி உடையவன்,[22] முக்கண்ணன்,[23] நீலமணிமிடற்றன்,[24]

முழுமுதற் கடவுள்,[25] மாதொருபாதியன்,[26] கங்கை அணிந்தவன்,[27] அழித்தற் கடவுள்,[28] ஆலமரத்தின் நிழலில் அமர்ந்தவன்,[29] வாள் ஏந்தியவன்[30] என்றெல்லாம் இந் நூல்கள் குறிப்பிடுகின்றன. இந்தக் கூற்றுக்கள் குறிப்பிடத் தக்கவை. காத்தல் கடவுளாகிய சிவபெருமானே எல்லா வற்றையும் அழிக்கிறான்.[31] அழித்தபிறகு கொடு கொட்டி என்னும் கூத்தினை ஆடுகிறான்[32] என்ற இந்தக் குறிப்புக் கள் — குறிப்பாக, காத்தலும் அழித்தலும் சிவபெருமானா லேயே நடைபெறுகின்றன என்னும் கருத்து — சிவபெருமான் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்தொழில்களைச் செய்கிறான் என்ற சைவசித்தாந்தக் கருத்தைக் குறிப்பால் உணர்த்தும்.

கிறிஸ்துவுக்குப்பின் தோன்றிய சிலப்பதிகாரம், மணிமேகலை என்னும் இரண்டு காப்பியங்களும், சங்க இலக்கியமாகிய பத்துப் பாட்டுள் ஒன்றான மதுரைக்காஞ்சி யும் பல்வேறு தெய்வங்களுக்கிடையில் சிவபெருமானுக்கே முதலிடத்தை வழங்குகின்றன. “பிறவா யாக்கைப் பெரியோன்” என்று சிலம்பும்,[33] “நுதல்விழி நாட்டத்து இறைவன்” என்று மணிமேகலையும்[34] கூறுகின்றன. மதுரைக்காஞ்சி சிவபெருமானுக்கு முதன்மை தந்து அவனே ஐந்து பூதங்களைத் தோற்றியவன் என்று கூறுகிறது.[35] நான்கு பிரிவுகளையும் ஆறு அங்கங்களையும் கொண்ட வேதங் கள் சடைமுடியனாகிய தனிமுதற் கடவுளின் வாயிலிருந்து தொடர்ந்து வெளிவருகின்றன என்று ஆவூர் மூலங்கிழார் குறிப்பிடுகிறார்.[36] இதிலிருந்து, பழந்தமிழர்களுக்கு நான்கு வேதங்களைப் பற்றியும் ஆறு அங்கங்களைப் பற்றியும் தெரியும் என்றும், அவை சிவபெருமானின் வாயிலிருந்து வெளி வந்தவை என்று அவர்கள் கருதினார்கள் என்றும் நாம் அறி கிறோம்.

ஐந்தெழுத்து மந்திரத்தைப் பற்றி முதன்முதலில் குறிப்பிடும் தமிழ்நூல் சிலப்பதிகாரம் ஆகும். இவ்வைந் தெழுத்து, மந்திரம் என்றும், அது வேதத்தில் வருவதாகவும்

சிலம்பு கூறுகிறது.[37] செங்குட்டுவன் "செஞ்சடை வானவன் அருளின் விளங்க வஞ்சித் தோன்றிய வானவன்"[38] என்றும் அவன் சிவனடியைப் போற்றினன்[39] என்றும் அது குறிப்பிடுகிறது. செங்குட்டுவன் அவையில், சாக்கையன் ஒருவன் இறைவன் ஆடிய கொடுகொட்டி என்னும் கூத்தினை ஆடிக் காண்பித்தான்.[40] திரிபுரங்களை எரித்த பின்பு இறைவன் ஆடிய ஆடலே கொடுகொட்டி எனப்பட்டது.

சங்க இலக்கியத்தில் சிவன் என்னும் பெயரை எங்கும் காண்பதற்கில்லை. சிவனுடைய உருவ அமைப்பையும், இயல்பையும், தன்மையையும் குறிக்கும் வகையில் முது முதல்வன்[41] இறைவன் (எங்கும் நிறைந்திருப்பவன்),[42] இமையவன்,[43] ஆலமர் கடவுள்[44] போன்ற விளக்கங்களையே காண்கிறோம்.

சிவன் என்னும் சொல் "எளிதில் நலம் தருபவன்" என்று பொருள்படும். இது செம்மை என்னும் பகுதியிலிருந்து பிறந்தது. செம்மை, செந்நிறம், நேர்மை, நீதி, ஒழுங்கு, முழுமை, நன்மை முதலிய பல பொருள்களைக் குறிக்கும் ஒரு சொல்லாகும். பிற்காலத்தில் சிவபெருமான் மகனாகிய முருகனையும் இச்சொல் குறித்தது.[45] முழுமுதற் கடவுளைச் 'சிறந்தது' என்னும் சொல்லால் தொல்காப்பியர் குறிப்பிட்டதை முன்பே கண்டோம். 'சிவ' என்பது சிவப்பு நிறத்தைக் குறிக்கும் உரிச்சொல்லாகும். ஆகவே 'சிவன்' சிவந்த நிறமுடையவன். அவனுடைய சடைமுடியும் சிவப்பு நிறத்தை உடையது.[46]

ஆகவே தமிழ்ச் சொல்லாகிய சிவம் வேதத்தில் இடம் பெற்றது என்னலாம்.[47] இருக்கு வேதத்தில் உருத்திரன் சிவன் என்றே அழைக்கப்படுகிறான்.[48] வேதநூல் வழக்கு ஏற்பட்ட பிறகு சிவன் என்னும் பெயர் அடைமொழியாக அன்றி, ஒரு பெயராகவே நிலைத்து விட்டது. மணிமேகலை காலத்துக்குள் சிவன் என்னும் சொல்லும் அதனோடு தொடர்புடைய சைவம், சைவவாதி (27. அடி 87) முதலிய சொற்களும் நடைமுறையில் நன்கு பயின்றிருந்தன.

இறைவன் எட்டு வடிவங்களை உடையவன். கதிரும் நிலவும் ஐந்து பூதங்களும் உயிரும் சிவனுடைய வடிவங்கள். பல்வகை அறிவு அவனுடைய உடலாக அமைந்துள்ளது. உலகத்தைப் படைப்பதும், அழிப்பதும் அவனுக்கு விளையாட்டு. பிறப்பு இறப்புக்களினால் உயிர்கள் அடையும் இளைப்பை அவன் மாற்றுகிறான். அவனினும் உயர்ந்தவர் யாரும் இல்லை. அவன் பெயர் ஈசானன் என்பதாகும்.[49]

திருமந்திரத்தின் ஆசிரியராகிய திருமூலர் பல்லவர் காலத்தின் தொடக்கத்தில் வாழ்ந்திருந்தார் என்று கொள்ளலாம்.[50] திருமந்திரத்தினைப் பற்றி விரிவாகப் பக்தி இலக்கியம் என்னும் தலைப்பில் பின்னர்க் காணலாம். சித்தாந்தம் என்னும் சொல்லையும், சித்தாந்த தத்துவங்களின் கருத்துக்களையும்[51] விரிவாக முதன் முதலில் எடுத்துக் கூறியவர் திருமூலர் ஆவார்.[52] மேலும், திருமந்திரத்தின் ஐந்தாம் தந்திரத்தில் அவர் சைவப் பிரிவுகள் பலவற்றையும் குறிப்பிடுகிறார். 'அசுத்த சைவம்',[53] 'கடுஞ்சுத்த சைவம்',[54] 'மார்க்க சைவம்',[55] 'சுத்தசைவம்'[56] என்று அவற்றை வகைப்படுத்தித் தருகின்றார். இவற்றிலிருந்து பல்லவர் ஆட்சியின் தொடக்க காலத்திலேயே சிவவழிபாடு இருந்தது என்பதும், வழிபாட்டில் பல்வேறு வகைக்ள் இருந்தன என்பதும், வகைகளை ஒட்டி அவ்வழிபாடுகள் பல்வேறு பெயர்களைப் பெற்றன என்பதும் பெறப்படுகின்றன. பிற்காலத்தில் சைவ சித்தாந்த சாத்திரம் வளர்வதற்குத் திருமந்திரம் ஓர் ஊற்றுக்கண்ணாக அமைந்தது. தமிழகத்தின் வரலாற்றில் இருண்ட காலமாகக் கருதப்படுகின்ற நான்கு, ஐந்து, ஆறு ஆகிய நூற்றாண்டுகளில் சைவத்தின் வளர்ச்சியைத் திருமந்திரத்தைக் கொண்டே அறிய முடிகிறது.[57] இதனை அடுத்துப் பிற்காலப் பல்லவர்கள் ஆட்சிக்கு வந்தார்கள். அவர்களுடைய ஆட்சி, முதலாம் மகேந்திரவர்மன் (கி. பி. 600—630) கால முதல் அபராஜிதவர்மன் (கி. பி. 875—883) காலம் வரை நீடித்தது. அவர்கள் சிவனுடைய வாகனமாகிய நந்தியை

அரச இலச்சினையாக ஏற்றுக் கொண்டார்கள். பிற்காலப் பல்லவர்களில் சிலர் வைணவ சமயத்தைச் சேர்ந்தாலும்[58] பல்லவர் ஆட்சிமுடியும்வரை நந்தி முத்திரையே அரச இலச்சினையாக இருந்து வந்தது. எனவே, சைவமே பல்லவர் காலத்து அரசாங்கச் சமயமாக இருந்து வந்தது எனலாம்.[59]

பல்லவ மன்னனாகிய மகேந்திரவர்மன் முதலில் சமணனாக இருந்து பின்னர்ச் சைவனாக மாறியவன். சைவ சமயாசாரியர்கள் நால்வருள் ஒருவராகிய திருநாவுக்கரசரே அவனைச் சைவத்துக்கு மாற்றியவர். அவ்வரசன் சமய மாற்றத்திற்குப் பிறகு பல கோயில்களை எழுப்பினான். அவனே சைவத்தை அரசாங்கச் சமயமாக மாற்றியவன். அவனுடைய கொள்ளுப் பேரனாகிய பரமேசுவரன் (கி. பி. 660—680) கூரம் என்னும் ஊரில் ஒரு சிவன் கோயிலை உருவாக்கினான். மாமல்லபுரத்தில் கணேசர் கோயிலிலுள்ள அவனது கல்வெட்டு, "சிவன் தனக்கு மேலாக எவரும் இல்லாதவன்; அவன் பிறப்பிலி; ஸ்ரீ நிதி;[60] சிவனை உள்ளன்புடன் வழிபடுபவன். உருத்திரனை[61] வணங்காத நெஞ்சினர் ஆறுமுறை சபிக்கப்பட்டவராவர்" என்று கூறு கிறது.

அவனுடைய மகனாகிய இராஜசிம்மனே (கி. பி. 680—700) காஞ்சிபுரத்தில், புகழ் பெற்ற கைலாசநாதர் கோயிலைக் கட்டியவன். அக்கோவிலில் கல்வெட்டுக்களும், புராணக் கதைகளை விளக்கும் சிற்பக் காட்சிகளும் நிறைந்துள்ளன. அதிலுள்ள கல்வெட்டுக்களில் ஒன்று, அவனைப் பற்றிச் "சிவ சூடாமணி; சங்கரபக்தன்; ஆகமப் பிரியன்; சிவபெருமானைத் தனக்கு அடைக்கலமாகக் கொண்டவன்; சைவ சித்தாந்த நெறியில் நிற்பவன்; அதையே தனக்குத் துணையாகக் கொண்டவன்; சிவபெருமானைத் தலையில் சூடியவன்"[62] என்று குறிப்பிடுகிறது. இராசசிம்மனை அடுத்து வந்த வேறு பல்லவ மன்னர்களும் வேறு சில கோயில்களை எழுப்பி வந்தனர். இந்த உண்மையைக் கல்வெட்டுக்களிலிருந்து அறிகிறோம்.

பல்லவர் காலத்தில் சிவநெறியே அரசாங்கச் சமயமாக இருந்தது. அவர்கள் சிவன் கோயில்களைக் கட்டினார்கள்.[63] அதன் மூலம் சைவசமயத்தைப் பரப்பினார்கள். முதன் முறையாகப் பல்லவர்களது கல்வெட்டில் "சைவ சித்தாந்தம்" என்னும் தொடரைக் காண்கிறோம். சிவனடியார்களாகிய நாயன்மார்களுள் பெரும்பாலோர் பிற்காலப் பல்லவர் காலத்திலேயே வாழ்ந்தனர். எனவே அந்தக் காலத்தில் சிவ வழிபாடு பரவியிருந்தது என்றும், மக்களிடையே சைவ சித்தாந்தக் கருத்துக்கள் பரவியிருந்தன என்றும் கொள்ள லாம். பிற்காலத்தில் 13–ஆம் நூற்றாண்டில் மெய்கண்டாரால் வகுத்தளிக்கப்பட்ட சைவ சித்தாந்தக் கருத்துக்களின் விதை பல்லவர் காலத்தில் தூவப்பட்டது எனலாம்.

இதுகாறும், கிறிஸ்துவுக்கு முன்பே தமிழ்நாட்டில் சிவ வழிபாடு இருந்தது என்றும், சிவபெருமானை முழுமுதற் கடவுளாகவும் ஆடல் வல்லானாகவும் தமிழர்கள் கொண்ட னர் என்றும், இறைவனுடைய புகழைப் பாடிப் பரவும் அடியார் இருந்தனர் என்றும், பிற சமய நெறிகளோடு சைவ சமய நெறியும் தழைத்திருந்தது என்றும், பல்லவர்கள் கற்கோயில்களை எழுப்பினார்கள் என்றும், அவர்களுக்கு முன்பே திருமூலர் தமது நூலில் சைவ சித்தாந்தத்தை ஒரு தத்துவ நெறியாகக் காட்டியிருந்தார் என்றும், அந்தநெறி ஆகமாந்தம் என்று வழங்கப்பட்டது என்றும், அது இராசசிம்ம பல்லவன் கல்வெட்டு ஒன்றில் இடம் பெற்றது என்றும் கண்டோம்.

பிற்காலப் பல்லவர்கள் காலத்தில் வாழ்ந்த பெரும் பாலான நாயன்மார்கள் சிவபெருமானிடம் தாம் கொண்டி ருந்த அன்பையும் சிவவழிபாட்டில் மேற்கொள்ள வேண்டிய நெறி முறைகளையும் தம் பாடல்களில் காட்டியிருந்தனர். இந்தப் பாடல்கள் திருமுறைகளாகப் பின்னர்த் தொகுக்கப் பட்டன. சைவ சித்தாந்தத்தை 'முடிந்த முடிபாக, எடுத்துக்காட்டி நிலைநிறுத்திய மெய்கண்டார் காலம்வரை சைவ சமயம் எப்படியிருந்தது என்பதை இந்தத் திருமுறை கள் தாம் காட்டுகின்றன.

## அடிக்குறிப்புகள்

1. திருமந்திரம், 1486

2. 'காமஞ் சான்ற...சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே' (பொருள். 90). 'சிறந்தது' உயர்ந்தது என்னும் பொருளதாகும். இதே பொருளில் பிறரும் வழங்கியுள்ளனர். எடுத்துக்காட்டாக, 'சிறப்பென்னும் செம்பொருள்' (குறள், 36.8), 'செம்பொருட்டுணிவே' (திருவாசகம், பிடித்த பத்து, 1).

3. தொல். பொருள். 5

4. மேற்படி, 640

5. தொல். பொருள். 640

6. 'காமப்பகுதி கடவுளும் வரையார்' — தொல். பொருள். 81; 'கொடிநிலை கந்தழி வள்ளி...கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே'— மேற்படி, 85.

7. 39. 8; இறைவன் — மேற்படி 1.5; 10.

8. பொருள், 85 — நச்சினார்க்கினியர் உரை.

9. 1.1.

10. வாலறிவன் 1. 2.

11. மலர்மிசை ஏகினான் 1. 3.

12. வேண்டுதல் வேண்டாமையிலான் 1. 4.

13. இருவினையும் சேரா 1. 5.

14. பொறிவாயில் ஐந்தவித்தான் 1. 6.

15. தனக்குவமை யில்லாதான் 1. 7.

16. அறவாழி அந்தணன் 1. 8; அந்தண்மை — செந்தண்மை (அருள்) - 3. 10.

17. எண் குணத்தான் 1. 9. இக்குறளுக்குப் பரிமேலழகர் சைவாகமங்களிற் கூறும் குணங்களையே குறிக்கிறார்.

18. இறைவன் 1. 10.

19. வகுத்தான் 38. 7.

20. 'திருக்குறளின் உட்கிடை சைவசித்தாந்தமே' — என்னும் நூலில் க. வச்சிரவேல் முதலியார், திருக்குறள் பொதுமையான சொற்களைப் பயன்படுத்தினாலும் சித்தாந்தக் கருத்துக்களையே கூறுகிறது என்று குறிப்பிடுகிறார்.

21. டாக்டர் மா. இராசமாணிக்கம், சைவசமயம், 1959, பக்கம் 28.

22. தாழ்சடைப் பொலிந்த அருந்தவத்தோற்கே. புறநானூறு, 1; ஈர்ஞ்சடை யந்தணன் — கலித்தொகை - 38.

23. முக்கண்ணன் — கலி. 2.

24. கறைமிடறு — புறம், 1; கறைமிடற்றண்ணல் — மேற்படி 55; மணிமிடற்றோன் — மேற்படி, 56; நீலமணிமிடற்றொருவன் — மேற்படி, 91; மறுமிடற்றண்ணல் — பரிபாடல், 8; மணிமிடற்றண்ணல் — மேற்படி, 9.

25. முது முதல்வன் — புறம், 166.

26. நீலமேனி வாலிழை பாகத்து ஒருவன் — ஐங்குறுநூறு, கடவுள்வாழ்த்து.

27. தேறுநீர்ச் சடைக்கரந்து — கலித்தொகை, கடவுள்வாழ்த்து; பெண்ணுரு ஒருதிறனாகின்று — புறம், கடவுள்வாழ்த்து; உமையமர்ந்து விளங்கும்......செல்வன் — திருமுருகாற்றுப்படை, வரிகள் 93 — 4.

28. கூற்று — புறம், 56

29. ஆலமர் செல்வன் — கலித்தொகை, 81; ஆலமர் செல்வன் — சிறுபாணாற்றுப்படை, 96 - 7; ஆலமர் கடவுள் — புறம் 198, அகம் 181.

30. கணிச்சியோன் — கலி, 103; சிவனைப்பற்றிய பிற குறிப்புக்களுக்கு; புறம், கடவுள் வாழ்த்து 1,55,56,166;

கலித்தொகை — 1,2,38,81,83,100,101,103; பரிபாடல் 5,9.

திருமுருகாற்றுப்படை — அடிகள் 153 — 154, 256; சிறுபாணாற்றுப்படை — அடிகள் 96 — 7.

31. எல்லாவுயிர்க்கும் ஏமமாகிய — புறம், கடவுள் வாழ்த்து; கூற்று — மேற்படி 56.

32. கொடுகொட்டி யாடுங்கால் — கலித்தொகை, கடவுள் வாழ்த்து; நச்சினார்க்கினியர் உரை.

33. —5: அடிகள் 169-7

34. நுதல்விழி நாட்டத்து இறையோன் — மணிமேகலை 1, அடி 54.

35. நீரும் நிலனும் தீயும் வளியும் மாக விசும்பொடு ஐந்துடன் இயற்றிய மழுவாள் நெடியோன் தலைவனாக — அடிகள் 453—5

36. முது முதல்வன் வாய்போகா தொன்று புரிந்த ஈரிரண்டின் ஆறுணர்ந்த ஒருமுது நூல் — புறம், 166.

37. அருமறை மருங்கின் ஐந்தினும் எட்டினும்..........மந்திரம் இரண்டும் 11, அடிகள் 128—130.

38. மேற்படி. 26, அடிகள் 98—9.

39. நிலவுக் கதிர் முடித்த நீளிருஞ் சென்னி...... உயர்ந்தோன் சேவடி......... சென்னியிறைஞ்சி வலங்கொண்டு — மேற்படி, அடிகள் 54-7.

40. இறைவனாடிய கொட்டிச் சேதம் — மேற்படி 28, அடிகள் 67-75 கொட்டிச் சேதம் —கொடு கொட்டி; இமையவனாடிய கொடுகொட்டி யாடலும், மேற்படி 6, அடிகள் 40-43; இறைவன் ஆடிய பாண்டரங்கம் என்னும் மற்றோர் ஆடல் வகையின் குறிப்பும் இங்கே கூறப்படுகிறது. "தேர்முன் நின்ற திசைமுகன் காணப் பாரதி ஆடிய வியன் பாண்டரங்கம்"— மேற்படி, அடிகள் 44-45; "கொடுகொட்டி யாடுங்கால் .........பாண்டரங்க மாடுங்கால்"-கலித்தொகை, கடவுள் வாழ்த்து.

41. புறநானூறு, 166.

42 மணிமேகலை, 27, அடி 95.

43. சிலம்பு, 6, அடி 40—43.

44. கலித்தொகை, 81.

45. செய்யன் சிவந்த ஆடையன் — திருமுருகாற்றுப்படை, அடி 206. தொல்காப்பியத்தில் வரும் வருணன் (பொருள். 5) வேதக் கடவுளாகிய வருணனாவான். எனினும் இச்சொல் வண்ணன் என்னும் தமிழ்ச் சொல்லிலிருந்து வந்தது என்று கருதுவோரும் உண்டு. (இலக்கிய வரலாறு, பகுதி 1,

பக். 73-74) இவ் 'வண்ணன்' என்னும் சொல் சிவனைக் குறிப்பதாகலாம்; ஏனெனில் சிவனைச் சிவந்த நிறமுடையவன் என்னும் பொருளில் 'செவ்வண்ணன்' என்றே கூறலின்.

46. எரிமருளவிர்சடை-புறம், 56; சிவன் தீயில் வெளிப்படுகிருன்; எனவேதான் இருக்கு வேதம் உருத்திரனை 'அக்னி' என அழைத்தது. (த்வம் அக்னே ருத்ர-II, 1. 6) சமயாசாரியர்களும் தீயைச் சிவனின் ஒரு சிறப்புருவாகக் கொண்டு பாடியுள்ளார்கள். தீ கண்ணுக்குப் புலப்பட்டும் புலப்படாதும் உள்ளது. (புலப்படாமை விறகில் தீ உள்ளது போல) ஆகவே தீ, இறைவனின் இயல்பைக் காட்டுவதாகக் கொள்ளப்படுகிறது. இறைவன் தோற்றம் உடையவன்; அதே போதில் அண்டங்களில் எல்லாம் கரந்து நின்று உருவற்றுத் திகழ்கிருன். தமிழர்கள் இறைவனைத் தீயில் கண்டார்கள். தீயின் நிறத்தையும் ஒளியையும் இறைவனுக்கு ஏற்றி வழிபட்டார்கள். "சிவன் எனும் நாமம் தனக்கேயுடைய செம்மேனி எம்மான்"—அப்பர், 4. 112. 9; "முழுத்தழல் மேனித் தவளப் பொடியான்"—சுந்தரர் 7. 24. 1; "சுடர்கின்ற கோலம் தீயே என மன்னும் சிற்றம்பலவர்—மாணிக்கவாசகர், திருக்கோவையார்.

47. "இக்கடவுளுக்கு ஆரியர்கள் அடையாக வழங்கிய 'சிவ' (மங்கல முடைய) என்னும் வடசொல், சிவனுடைய மூலமொழிச் சொல்லின் ஒலியை ஒத்திருக்கிறது என்று கொள்ளல் தவருகாது"—சர் ஜான் மார்ஷல், முந் நூல், பக். 56.

48. X, 92. 5. நல்லசாமிப்பிள்ளை—கூறுவதாவது: 'சிவஹ' என்னும் சொல்லைச் சாயனர் பெயராகவே கொண்டார்; கீழ்க்கலை வல்லுநர் பலர் மொழி பெயர்த்ததைப்போல அடைமொழியாக அல்ல—Studies in Saiva Siddhanta, 1962, பக். 39. (அடிக்குறிப்பு)

49. **மணிமேகலை**, 27, அடிகள் 86—95.

50. டாக்டர் மா. இராசமாணிக்கம், Development of Saivism in South India, 1964, பக். 34. பிரத்தியா பிஞ்ஞ தத்துவ நெறிபற்றிப் பல நூல்கள் இயற்றியுள்ள அபிநவ குப்தருக்கும் முற்பட்டவர் திருமூலர்—டாக்டர் ரமணசாஸ்திரி—மேற்குறித்த நூலில் கண்டுள்ள மேற்கோள், பக். 60.

51. **திருமந்திரம்**—2329, 2331, 2332, 2343, 2346, 2354—56 2361, 2363—65.

52. திருமந்திரம்—2366, 2367, 2371, 2373, 2374, 2380—4 முதலியன.

53. 1394—97;

54. 1398—1401;

55. 1402—11;

56. 1412—16;

57. Development of Saivism in South India, பக். 86.

58. மேற்படி நூல், பக். 89.

59. மகேந்திரவர்மனுக்கு முற்பட்ட, முற்காலப் பல்லவர்களில் சிலர் வைணவர்களாயிருந்தனர் என்பது கல்வெட்டுக்களால் தெரியவருகிறது.

60. பரமேசுவரவர்மனின் பட்டங்களுள் ஒன்று.

61. தென்னிந்தியக் கல்வெட்டுக்கள் I, 18 - மேற்கோள், மேற்படிநூல், பக். 94.

62. தென்னிந்தியக் கல்வெட்டுக்கள், I, 23, 24, 25; Epigraphica Indica 18, P. 150.

63. பல்லவர்கள் கற்றளிகளை அமைத்தனர்; தூங்கானை மாடக் கோவில்கள் வந்த காலம் இதுவே எனலாம். பல்லவர்களுக்கு முற்பட்ட காலத்திலும் கோவில்கள் இருந்தன. அவை மண், மரம், செங்கல், சுண்ணம்பு முதலியவற்ருல் கட்டப்பட்டிருந்தன.

'காடமர் செல்வி கழிபெருங் கோட்டமும்......
குறியவும் நெடியவும் குன்றுகண் டன்ன
சுடுமண் ஓங்கிய நெடுநிலைக் கோட்டம்'— என்னும்

மணிமேகலை அடிகள் (6, அடிகள் 53—59) இதனை நிறுவுகின்றன. 'கோயிலொடு குடிநிறீஇ'—என்னும் பட்டினப்பாலை அடி (286) அக்காலத்தில் கோயில் இருந்தமையையும், புதிதாகக் கோயில் கட்டப்பட்டதையும் குறிப் பிட்டுக் காட்டுகிறது.




## 3. பக்தி இலக்கியம்

கிறிஸ்துவுக்கு முற்பட்ட தமிழகம் மிக வளர்ந்த நாகரிகத்தையும் இலக்கியத்தையும் கொண்டிருந்தது. கடவுள், உலகங்கள், அவற்றின் அமைப்பு போன்றவற்றைப் பற்றிய கோட்பாடுகளோடு வேறுபல உயரிய குறிக்கோள்களும் அவற்றில் நிரம்பியிருந்தன. அறிவு முதிர்ச்சியும், நாகரிக வளர்ச்சியும் பெற்ற தமிழ் மக்கள் இலக்கியத்தை அகத்திணை என்றும், புறத்திணை என்றும் பிரித்தனர். அகத்திணை காதலைப் பற்றிக் கூறுகிறது.[1] தொல்காப்பியம் இதற்கு இலக்கணம் வகுத்துக் கூறுகிறது. பண்டை இலக்கியங்கள் கடவுளரைப் பற்றியும் வழிபாடுகளைப் பற்றியும் கூறுகின்றன. சிலப்பதிகாரமும், மணிமேகலையும் தமிழகத்தில் பல்வேறு சமயங்கள் நிலவியிருந்தமையைக் காட்டுகின்றன. தொடர்ந்து நடந்த போர்களாலும் பிரிவினைகளாலும் தளர்ந்து போயிருந்த மக்களின் மனத்தைச் சமண, பௌத்த சமயக் கருத்துக்கள் ஈர்த்தன. சமண நூலாகிய சிலப்பதிகாரம் சமயக் காழ்ப்பின்றி, கண்ணன், சிவன் போன்ற கடவுளர்களையும் போற்றுகின்றது. ஏறக்குறைய அதே காலத்தில் தோன்றிய மணிமேகலை சமயக் காழ்ப்புடையதாக விளங்குகிறது.

வடக்கிலிருந்து தமிழகத்தில் புகுந்த களப்பிரர்கள் பாண்டிய மன்னர்களை வெற்றிகொண்டு பாண்டி நாட்டுக்குரியவற்றையெல்லாம் அழித்து, தம்முடைய சமயத்தையும், பண்பாட்டையும் புகுத்தினர். அவர்களுடைய அரசாங்கச் சமயமாகிய சமணம் தமிழகத்தில் நன்கு வேரூன்றியது.[2] ஏறக்குறைய மூன்று நூற்றாண்டுகள் வரை நீடித்த அவர்களுடைய ஆட்சி நாட்டில் முன்னமே பரவியிருந்த வைதிக நெறிகளையும், நம்பிக்கைகளையும் அறவே அழித்து விட்டது. காதலே வாழ்க்கை என்றிருந்த தமிழ் மக்களுக்கு சமண, பௌத்தக் கோட்பாடுகள் வரவேற்கத் தக்கனவாயிருந்தன.

புதுமை, அவர்களைப் பெரிதும் கவர்ந்தது. எனினும், சாதாரண மனிதனுக்கு அதில் பற்று ஏற்படுவதற்கு வழி இல்லாம லிருந்தது. துறவு பூணுதலின்றி, குறிக்கோளை எட்ட உதவும் வழி வேறில்லை என்னும் விதி ஏற்றுக் கொள்வதற்கு ஏற்றதா யில்லை. மேலும் அரசு இந்த வகையில் வற்புறுத்தலை மேற் கொண்டது. வழிபாட்டுமுறையில் தாராளமான சுதந்திரத்தை அனுபவித்துப் பழகிய மக்களுக்கு இந்தக் கட்டாயமும் திணிப்பும் வெறுப்பை ஊட்டின. எனவேதான் களப்பிரர் களின் ஆட்சி முடிவடையும் காலத்தில் தோன்றிய சைவ சமய குரவர்களுக்கு வரவேற்பு இருந்தது. அவர்கள் துறவினுடைய சிறப்பை ஒரு சிறிதும் குறைக்காமலேயே. 'இறைவன் துறவியர்க் கெல்லாம் துறவி' என்று கூறியும், அதே நேரத்தில் 'பாகம் பெண்ணுருவானவன்' என்று கூறியும் இறைவனைப் பாடினார்கள். அதாவது துறவியாய் உள்ள அஃதே இறைவன் காதல் வாழ்க்கைக்கும் கடவுளாக அமைகிறான். துறவு என்பது அன்புக்கு மாறானது அன்று. சமண, பௌத்த சமயங்கள் வெறுத்து ஒதுக்கிய பல்வேறு கலைகளும் சமயகுரவர்களால் புத்துயிர் பெற்றன. இறைவன் புகழைப் பாடுவதற்கும் பரப்புவதற்கும் அவர்கள் இசையைப் பயன்படுத்தினர். இதன் விளைவாகச் சமயச் சூழலில் ஒரு மாறுதல் ஏற்பட்டது. பெருங்கோயில்கள் எழுந்தன. அவை கலைகளின் கருவூலங்களாக அமைந்தன.

சமயகுரவர்கள் வாழ்க்கையில், அவர்கள் சமணர் களையும் பௌத்தர்களையும் வாதில் வென்றதாக நிகழ்ச்சி கள் காணப்படுகின்றன. இந்நிகழ்ச்சிகள் பழைய நெறி முறைகள் புத்துயிர் பெற்றன என்பதையம், வழிபாட்டுச் சுதந்திரம் மீண்டும் கிடைத்தது என்பதையும் குறிக்கின்றன. இந்த மறுமலர்ச்சி கி. பி. 12 - ஆம் நூற்றாண்டுவரை தொடர்ந்தது. அந்த நூற்றாண்டில் தோன்றிய பெருங் காப்பியமாகிய பெரியபுராண நூல், 13 - ஆம் நூற்றாண்டில் சைவ சித்தாந்தம் ஒரு தத்துவ நெறியாக வளர்வதற்கு அடிப்படையாக அமைந்தது.

இந்த மறுமலர்ச்சிக் காலத்தில் தோன்றிய பக்தி இலக்கியத்தைப் பத்தாம் நூற்ருண்டில் வாழ்ந்த நம்பியாண்டார் நம்பி வகுத்தும் தொகுத்தும் தந்தார். அவை திருமுறைகள் எனப்பட்டன. தமிழிலுள்ள சைவ இலக்கியங்கள் தோத்திரம் (இறைவன் புகழைப் பரவுதல்) என்றும், சாத்திரம் (தத்துவ விளக்கங்கள்) என்றும் இரு வகைப்படும்.[3] தோத்திரங்கள் பல்வேறு காலங்களில் வாழ்ந்த அடியார்களுடைய பாடல்களின் தொகுப்புக்கள். இவையே சைவ சித்தாந்த தத்துவத்தின் ஊற்றுக்களாக வும் அமைந்தன. இவற்றின் பொதுப்பெயர் திருமுறை என்பது ஆகும்.

திருமுறைகள் பன்னிரண்டு ஆகும்.[4] அவை முதல் திருமுறை, இரண்டாந் திருமுறை, மூன்ருந் திருமுறை என எண்ணிக்கையின் பெயர் வைத்து வழங்கப்படும்.

பன்னிரண்டாந் திருமுறையாகிய பெரியபுராணம், அதன் ஆசிரியர் காலத்திலேயே ஒரு திருமுறையாக ஏற்றுக்கொள்ளப்பட்டிருத்தல் வேண்டும்.[5]

'முறை' என்னும் சொல், உறவு, ஒழுக்கம், இடைச்சொல், ஒழுங்கு, கிராமம், குணம், தரம், பழமை, புத்தகம், முறைமை முறையீடு, வரிசை எனப் பன்னிரண்டு பொருள்களைக் கொண்டது.[6] வேதங்களும் (மறைகள்) முறைகள் என்று அழைக்கப்பட்டன.[7] 'திரு' என்னும் சொல் பல்வேறு பட்ட, பலவாறு விரிந்த பொருள்களைக் கொண்டது. அது சிவனையும், அவன் அருளையும் அவ்வருளால் கிடைக்கும் இனப நிலையையும் குறிக்கும். இவை மூன்றும் வெவ்வேறு நிலையினவாகத் தோன்றினும் ஆன்மா அவற்றைப் பெறும் பொழுது ஒன்றேயாகத் திகழ்கின்றன.[8]

திருஞான சம்பந்தருடைய பாடல்கள் முதல் மூன்று திருமுறைகளாக இடம் பெற்றன. திருநாவுக்கரசருடைய பாடல்கள் நான்கு, ஐந்து, ஆறு திருமுறைகளாக எண்ணப்

பட்டன. இவ்விருவரும் ஏழாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர்கள். சுந்தரமூர்த்தி நாயனாருடைய பாடல்கள் ஏழாந் திருமுறையாக வைக்கப்பட்டன. சுந்தரர் 9-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவர். இவ்வேழு திருமுறைகளும் 'தேவாரம்' என்றும், 'அடங்கன் முறை' என்றும் வழங்கப் பட்டன.[9]

'அடங்கன் முறை' என்பது சிதம்பரத்தைப் பற்றிய தேவாரப் பாடல்களைக் கொண்ட தொகுப்பு ஆகும். 'அடங்கல்' என்பது கிராமங்களில் கிராம அதிகாரிகள் பயன்படுத்தும் ஒரு பதிவேடு ஆகும்.[10]

எட்டாந்திருமுறை மாணிக்கவாசகர் அருளிய திருவாசகமும் திருக்கோவையாரும் ஆகும்.[11] இவர் 8-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவர்.[12]

ஒன்பதாந்திருமுறை ஒரு தொகுப்பு நூலாகும். இந்நூல் 'திருவிசைப்பா — திருப்பல்லாண்டு' எனவும் வழங்கப் பெறும். திருமாளிகைத் தேவர், சேந்தனார், கருவூர்த் தேவர், பூந்துருத்தி நம்பிகாடநம்பி, கண்டராதித்தர், வேணாட்டடிகள், திருவாலிஅமுதனார், புருடோத்தமநம்பி, சேதிராயர் ஆகிய ஒன்பது சிவனடியார்கள் இயற்றிய பாடல்களின் தொகுப்பு இது இவர்கள் வெவ்வேறு காலங்களில் வாழ்ந்தவர்கள்.

திருமந்திரம் பத்தாந் திருமுறையாகும். இதன் ஆசிரியர் திருமூலர். அவர் பல்லவர் ஆட்சியின் தொடக்கத்தில் வாழ்ந்தவர் என்பது முன்பே கூறப் பட்டது.

பதினொராந்திருமுறையும் தொகுப்பு நூலே ஆகும். திருவாலவாயுடையார், காரைக்கால் அம்மையார், ஐயடிகள் காடவர்கோன், சேரமான் பெருமாள், நக்கீரர், கல்லாட தேவர், கபில தேவர், பரண தேவர், இளம்பெருமான் அடிகள், அதிரா அடிகள், பட்டினத்துப்

பிள்ளையார், நம்பியாண்டார் நம்பி ஆகியோர் இந்நூலில் இடம்பெறும் ஆசிரியர்களாவர். இறுதியாகக் குறிப்பிடப் பட்ட நம்பியாண்டார் நம்பியே இப்பதினொரு திருமுறை களையும் தொகுத்தார்.[13]

சேக்கிழாருடைய பெரியபுராணம் பன்னிரண்டாந் திருமுறை ஆகும் அவர் 12-ஆம் நூற்றுண்டின் முற்பகுதி யில் வாழ்ந்தவர்.[14] சேக்கிழார் காலத்துக்கு முன்னர் வாழ்ந்த பல்வேறு சிவனடியார்களின் (அவர்களிலே சிலர் திருமுறை ஆசிரியர்களும் கூட) வரலாறுகளைப் பெரியபுராணம் விளக்குகிறது.

இனி, ஒவ்வொரு திருமுறையாக எடுத்துக்கொண்டு, பின்னல் வளர்ந்த சைவ சித்தாந்த தத்துவங்களுக்கு அது எப்படி அடிகோலியது என்பதைக் காணலாம்.

## சமய குரவர்

முதல் எட்டுத் திருமுறைகளின் ஆசிரியர்களாகிய திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி, மாணிக்கவாசகர் ஆகிய நால்வரும் சைவர்களால் பெரிதும் மதித்துப் போற்றப் பெறுகிருர்கள். அவர்கள் 'சமயாசாரியர்' என்றும், 'சமய குரவர்' என்றும் குறிப்பிடப்படுகிருர்கள். அவர்களுடைய பாடல்கள் இறைவனைப் போற்றியும், போற்றும் வகையிலும், அவனது இயல்பு, அவன் உயிர் களுக்கு அருளும் பண்பு, உயிர்கள் மேற்கொள்ள வேண்டிய நெறி முதலியவற்றைப் பற்றிப் பேசுகின்றன. தமிழகத்தில் வெவ்வேறு சமயங்கள் பல்கிப் பரவி ஆட்சி செலுத்திய காலத்தில், சிவநெறியை மீண்டும் நிலை நிறுத்துவதற்காக இந்தச் சமயாசாரியர்கள் தோன்றினுர்கள். திருஞானசம்பந்தருடைய வாழ்க்கையைப் பற்றிக் கூறும் போது அவர் வேதநெறி பரவி வளரவும், சிவ வழிபாடு மீண்டும் மலரவும், சிவனடியார்களின் மரபு பொலிவுறவும் அவதரித்ததாகச் சேக்கிழார் கூறுகிருர்.[15]

திருநாவுக்கரசரோ உலகைக் கவ்வியிருந்த இருளை நீக்கும் கதிரவனைப் போலத் தோன்றினாராம்.[16] அவர்பெயரே 'மயக்கத்தை நீக்குபவர்' (மருள் நீக்கியார்) என அமைந்தது திருநாவுக்கரசர் எதற்காகத் தோன்றினர் என்பதை அவருக்குப் பெற்றோர் இட்ட பெயரே உணர்த்து கின்றது சுந்தரமூர்த்தி நாயனரும், அதுபோலவே உலகம் தீமையிலிருந்து விடுபட்டு உய்வதற்காகத் தோன்றினர் என்று சேக்கிழார் குறிப்பிடுகிறார்.[17]

அன்றிருந்த தமிழகத்தின் நிலைமையைக் கருத்தில் கொண்டு பார்க்கும்பொழுது சமய குரவர்களுடைய பிறப்பின் சிறப்பு நன்கு புலப்படும். ஏறக்குறைய ஒரேவிதமான கருத்தைத் தெரிவிக்கும் வகையில் சேக்கிழார் அவர் களுடைய பிறப்புக்களின் பெருமையை எடுத்துரைக்கிறார். தமிழ்நாட்டில் சமண, பௌத்த நெறிகளை எதிர்த்து வைதிக நெறி மீண்டும் ஓங்கி வளர்வதை அவர்களுடைய வருகை தெரிவித்தது.

சமயாசாரியர்கள் நால்வரும் நான்கு வகை ஆன்மீக நெறிகளைத் தம் வாழ்க்கையில் பின்பற்றினர்கள்; அவற்றையே தம் பாடல்களில் எடுத்துரைத்தார்கள் என்று மரபு வழியாகக் கூறப்பட்டுள்ளது. சம்பந்தர் மகன்மை நெறியையும் (சத்புத்திர மார்க்கம்), அப்பர் தொண்டு நெறியையும் (தாசமார்க்கம்), சுந்தரர் தோழமை நெறியை யும் (சகமார்க்கம்), மாணிக்கவாசகர் மெய்ந்நெறியையும் (சன்மார்க்கம்) பின்பற்றினர்கள். இந்த நெறிகள் பிற்காலத்து வந்த சித்தாந்த சாத்திரங்களில் விரிவாகவும், விளக்க மாகவும் எடுத்துக் கூறப்படுகின்றன.[18] சைவ ஆகமங் களில் குறிப்பிடப்படும் நால்வகை நெறிகளாகிய சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகியவற்றிற்கு அடிப்படையாக அமைந்துள்ளன.

அப்பர் பாடல்களில் காணப்படும் கருத்துக்களும், கோயில்களில் புல்லைச் செதுக்கிச் செப்பனிட, அவர் மேற்

கொண்ட உழவாரத் திருப்பணியும் சரியைநெறியை விளக்குகின்றன.[19] சம்பந்தர் இறைவனைத் தம் தந்தையாகக் கொண்டார். இறைவன் புகழைப் புறத்தே பாடுதலும் அகத்தே நினைத்தலும் கிரியை நெறியாக அமைந்தன.[20] சுந்தரமூர்த்தி நாயனார் எப்பொழுதுமே சிவனோடு கருத்தால் ஒன்றியிருந்தார். இரு நண்பர்களுக்கு இடையே கருத்து ஒருமிப்பே யோகம் ஆகும். அவருடைய திருமண வாழ்க்கையைப் பற்றிக் கூறும் சேக்கிழார், 'அவர் தொடர்ந்து யோகம் பயின்றதாகக்' குறிப்பிடுகின்றார்.[21] மேலும் சுந்தரர் தம் காதலியைக் காணும் போதும் இறைவன் அருளையே கண்டார்.[22] மாணிக்கவாசகர் முறைப்படி தீக்கை (தீக்ஷை) பெற்றவர்; சாத்திரங்களில் குறிப்பிட்டபடியே மனித வடிவில் குருவாக வந்த இறைவனிடம் ஞானதீக்கை பெற்று ஞான நெறிக்கு எடுத்துக்காட்டாக இலங்கினார்.

சம்பந்தர், அப்பர், சுந்தரர் ஆகிய மூவருடைய இசைப் பாக்களும் முதல் ஏழு திருமுறைகளாக அமைந்துள்ளன. இவ்வேழு திருமுறைகளும் 'தேவாரம்' என்னும் பொதுப் பெயரால் குறிக்கப்படுகின்றன. இவ்வேழு திருமுறைகளுக்கு மாகத் தேவாரம் என்னும் பொதுப் பெயரை முதன் முதலில் வழங்கியவர் உமாபதிசிவம் ஆவார்.[23] கி. பி. 14-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த இரட்டைப் புலவர்களும்[24] தேவாரம் என்பதைத் தம்நூலில் பயன்படுத்துகின்றனர்.[25] இவர்களைத் தொடர்ந்து சைவ எல்லப்ப நாவலரும் (கி. பி. 17-ஆம் நூற்றாண்டு) தமது திருவருணைக்கலம்பகத்தில் 'வாய்மை வைத்தசீர்திருத் தேவாரமும்' என்று குறிப்பிடுகிறார்.

தேவாரம் தே+வாரம் எனப் பிரியும். தே—தெய்வம், வாரம்—இறைவன் புகழைப் பாடுதல்.[26] தேவாரம் என்னும் தொடர் 'தேவபாணி' என்பதிலிருந்து பெறப் பட்டிருக்கலாம். தேவபாணி என்பது இறைவனை முன்னிலைப் படுத்திப் போற்றுவது ஆகும்.[27]

தேவாரப் பாடல்கள் இசைக்கருவிகளின் துணையொடு பாடப்பட்டன. சிவன் இசையின் உயிர்; எல்லாக் கலைகளுக்கும் உயிராய் அமைந்தவன். எனவே பாடுவதே ஒரு வகை வழிபாடாக ஏற்றுக் கொள்ளப்பட்டது.[28] சிவபெருமான் இசையாகவும், இசையின் பயனாகவும் விளங்குபவன்.[29] கலைக்கெல்லாம் பொருளாய் அமைந்தவன் இறைவன் (7.59 3). சம்பந்தர் இசைமூலம் இறைவனை வழிபட்டதாகச் சுந்தரமூர்த்தி குறிப்பிடுகிறார் (7 62. 8). சம்பந்தரும் தம்மைப் பற்றி இதையே கூறுகிறார்.[30] 'தமிழோடிசைபாடல் மறந்தறியேன்' எனக் கூறும் அப்பர் (4.1.6) அடியார்கள் பாடும்பொழுது இறைவன் மகிழ்வதாக எடுத்துரைக்கிறார் (4.5.4). இசையே வழிபாட்டின் ஓர் அங்கமாக ஏற்றுக் கொள்ளப் பட்டது.[31] இவ்வாறு இசையையும் பிற கலைகளையும் இறைவனின் வடிவமாகவும், இறைவனை வழிபடும் நெறி யாகவும் சைவம் போற்றியது. இந்நிலை, அக்காலத்துச் சமணர் கலைநிகழ்ச்சிகளை ஆன்மீக நெறிக்கு எதிரியாகக் கருதியதற்கு முரணானதாகும்.[32]

கலப்பற்ற பக்தியும் ஒழுக்கமுமே ஆன்மீக நெறியின் அடிப்படை என்று தேவாரம் கூறுகிறது. அடியவரின் பக்தியைவிட இறைவனுக்கு வேறொன்றும் உகந்ததன்று. குரல் இனிமையோ, இசை அறிவோ இல்லாவிட்டாலும் கூட அடியவரின் பக்தியே இறைவனுக்கு மகிழ்ச்சி அளிக்கும்.[33] இறைவனை வணங்கும்பொழுது உயிர் கரைகிறது; ஊன் உருகுகிறது.[34] அன்பே அதற்கு அடிப்படையாக அமைந்திருந்தது.

'அன்போ டுருகி அகங்குழைவார்க் கன்றி
என்பொன் மணியினை எய்த ஒண்ணாதே'

என்று திருமூலரும் (திருமந்திரம் 259) பாடுகிறார். 'ஒன்றி யிருந்து நினைமின்கள் உந்தமக்கு ஊனம் ஏதும் இல்லை,[35] தம்மை மறந்து இறைவனை நினைந்திருந்த அடியார்களின் பெருமையைச் சுந்தரமூர்த்தி நாயனார் திருத்தொண்டத் தொகையில் எடுத்தோதுகிறார்.

சமயகுரவர் நால்வரும் சிவநெறி மீண்டும் தழைக்க உலகில் வந்து தோன்றியவர்கள். சிவநெறி வேதத்தின் மையக் கருத்தாகும். எனவே சிவநெறி மீண்டும் தமிழகத்தில் மலர்வது வைதிகத்தின் மலர்ச்சியாகும். சம்பந்தர் வேள்வியைப் பற்றியும் அந்தணர்கள் வேதமோதி அழல் ஓம்புதல் பற்றியும் குறிப்பிடுகிறார்.[36] சீகாழியிலுள்ள அந்தணர்களும் தம் தந்தையாரும் வேள்வி செய்வதற்காகச் சம்பந்தர் திருவாவடுதுறை இறைவனிடமிருந்து பொன் பெற்றுத் தருகிறார்.[37]

வேதம் சிவபெருமானுடைய வாய்மொழி ஆகும். சைவசித்தாந்த தத்துவத்தில் இஃது ஓர் அடிப்படைக் கொள்கையாகும். சிவபெருமான் வேதங்களையும் அவற்றின் அங்கங்களையும் எடுத்தோதி அவற்றின் மூலம் வழிபாட்டு முறையையும் வாழ்க்கை முறையையும் விளக்கியுள்ளார்.[38] வேதத்தின் பொருள் சிவபெருமானே.[39] ஏனெனில் சிவபெருமானே இறுதியாக அடையப் பெறும் ஞானம் ஆகும். வைதிக நெறியிலமைந்த வழிபாடு மறைவழக்கம்[40] எனவும், வைதிகம்[41] எனவும் வழங்கப்பட்டது.

மறை யோதுதலே ஒரு வழிபாட்டு வகையாகும். இதனைத் திருஞான சம்பந்தர் பல இடங்களில் குறிக்கிறார்.[42] யசுர் வேதத்தில் ஸ்ரீருத்ரம் என்னும் பகுதியை இடைவிடாது ஓதியதன் மூலமே இறைவன் அடி அடைந்த ஓர் அடியவரைச் சுந்தரமூர்த்தி நாயனர் தமது திருத்தொண்டத் தொகையில் குறிப்பிடுகிறார்.[43]

தேவாரம் இறைவனிடம் அன்பு பூண்டு ஒழுகுவதைப் பற்றிப் பேசுகிறது. அதேபோல உருத்திராக்கம் அணிவதையும், திருநீறு பூசுவதையும் வற்புறுத்துகிறது. திருநீறு தானே மந்திரமாக இலங்குகிறது; வானவர்கள்மேல் திகழ்கிறது. அழகாகிய அது வணக்கத்துக்குரியது. தந்திரமும் (ஆகமம்) அதுவேயாகும். அது இறைவன் தந்தது.[44] சிவனுடைய அருளாகவும் சக்தியாகவும் அது விளங்கு

கிறது.[45] முத்தியளிப்பதும் உண்மையாவதும் பற்றினை அழிப்பதும் திருநீறேயாம். திருநீறணிந்தவர் யாவராயினும் அவரை வணங்குதல் வேண்டும்.[46] ஏனெனில் சிவ பெருமானும் வெண்ணீறு பூசி மகிழ்கிறான்.[47] நீறு பூசாதவர்கள் நோய்க்காளாகி வருந்துவர். இறப்பும் அவர் களுக்குத் துணை செய்யாது. அவர்கள் இறப்பதும் மீண்டும் பிறப்பதற்காகத்தான்.[48] திருநீறு வினையை ஒழிக்கும்; நோயை நீக்கும்.[49] திருநீற்றின் பெருமையை, 'முழுநீறு பூசிய முனிவர்க்கும் அடியேன்' என்பதன் மூலம் சுந்தரமூர்த்தி நாயனார் தெரிவிக்கிறார்.[50]

திருநீற்றைப்போலவே ஐந்தெழுத்து மந்திரமும், இன்றி யமையாததாகும். ஐந்தெழுத்து வேதமாகும்; காலை மாலை களில் அந்தணர் ஓதும் மந்திரமுமாகும்.[51] திருமாலும் பிரமனும் காணாத இறைவன் திருவடிகளை அடையச் செய் வது இவ்வைந்தெழுத்து (3. 22. 2.). அதுவே தஞ்சமாகும்; நாவுக்கு அணிகலமாகும்; பாவத்தைத் தேய்க்கும்; ஞானம் பெறுவதற்கு வழியாகும்.[52] அதுவே ஞானமும் கல்வியு மாகும். தீவினையைப் போக்கும் (5. 90. 2; 5. 43. 6). ஒருவனுக்கு வேறு எவ்வகைச் சிறப்பும் இல்லாவிடினும் ஐந்தெழுத்தை ஓதுவதன் மூலமே இறைவனை அடைய முடியும்.[53] திரு வைந்தெழுத்தின் பெருமையை விளக்கும் வகையில் சுந்தரர் ஒரு பதிகமே பாடி இருக்கிறார் (7. 48). நான்கு வேதங் களின் பிழிவாக அமைவது ஐந்தெழுத்து (3. 49 1). எனவே இதனைக் காலை, நண்பகல், மாலை என்னும் மூன்று பொழுதி லும் ஓத வேண்டும் என்கிறார் அவர்.[54] ஐந்தெழுத்தினைச் சொல்லிச் சொல்லி நாத் தழும்பேறிய நிலையில் 'நான் மறக்கி னும் சொல்லும் நா நமச்சிவாயவே'[55] என்கிறார் சுந்தரர். பெரியபுராணம் கூறும் அடியார்களில் ஒருவராகிய ஆனாய நாயனார் ஆநிரைகளை மேய்க்கும்பொழுது திருவைந் தெழுத்தைப் புல்லாங்குழலில் இசைத்தார்.[56]

தேவார ஆசிரியர்கள் பல்வேறு வகைப்பட்ட வழிபாடு களையும் குறிப்பிடுகிறார்கள். தில்லைவாழ் அந்தணர்கள்

வேதமோதி, அழலோம்பி இறைவனை வழிபட்டார்கள். (1. 80. 1; 1. 6. 1). பூக்களைக் கொண்டும் ஆனஞ்சு கொண்டும் வழிபாடு செய்வதுண்டு.[57] வழிபாட்டுக்குரிய இன்றியமையாப் பொருள் தண்ணீர் ஆகும் (4. 62. 8). சிவலிங்கத்தின் மீது மலரிடுவார் வினையை இறைவன் ஓட்டுவார்.[58] வழிபாடு என்பது சிவபூசை மட்டுமன்று. திருக்கோவிலைக் கூட்டி, அலகிட்டு, அழகுபடுத்துவதும் மாலை தொடுத்தலும் முதலான பிற தொண்டுகளும் கூட வழிபாடேயாகும். (6. 31. 3). கோவிலில் பூசை செய்கிறவர்களையும் அடியவர்களாகவே கொண்டு வணக்கம் கூறுகிறார் சுந்தரமூர்த்தி நாயனார்.[59]

சிவனடியார்களைச் சிவபெருமானாகவே கருதி வழிபட வேண்டும். திருத்தொண்டத் தொகையின் பதினொரு பாடல்களும் இதனையே குறிக்கின்றன. விறன்மிண்டர் ஒரு சிவனடியார்; 'மெய்ப்பத்தர்கள்பால் பரிவுடையார்' (பெரியபுராணம் 6. 4.) சுந்தரமூர்த்தி நாயனார், திருவாரூர்ப் பூங்கோயிலில் ஒரு மண்டபத்தில் கூடியிருந்த சிவனடியார்களை மதிக்காமல் சென்றார் என்பதற்காக அவரைப் 'புறம்பு' என்று ஒதுக்கி வைத்தார் விறன்மிண்டர். அதன் விளைவாக எழுந்ததே திருத்தொண்டத்தொகை. சிவனடியார்களை மதித்து வணங்குதலும் அவர்களைச் சிவனெனவே கொண்டு வழிபடுதலும் அவர்களுடைய தேவைகளை அறிந்து வேண்டுவன கொடுத்தலும் சைவர்க்குரிய கடமைகளாகும்.[60] திருஞானசம்பந்தர் அடியார் திருக்கூட்டத்தோடு பல்வேறு தலங்களுக்கும் சென்று வழிபட்டார். அடியார்களுக்கு அமுதூட்டுவது ஒருவரது வாழ்க்கையின் குறிக்கோளாக அமைய வேண்டும்[61] என்று அவர் கூறுகிறார். திருஞான சம்பந்தரும் திருநாவுக்கரசரும் அடியார் திருக்கூட்டத்தோடு தமிழகத்தில் வலம் வந்தார்கள். இவ்வாறு வலம் வரும் அடியார்களை வானவர்களும் வணங்குவார்கள்.[62] சிவனடியாரின் அடியார்களுக்கு அரியது ஒன்றில்லை.[63] அவர்கள் வினை அற்றுச் சிறந்து நிற்பவர்கள்.[64] இறைவன்

அடியவர்க்குத் தொண்டராகும் பேறு பெறுதற்கரிய ஒன்று.[65] சிவனடியார்களின் திருவடித்துகள் தம் மீது விழவேண்டும் என்று தாம் விரும்புவதாகத் திருநாவுக்கரசர் கூறுகிறார்.[66] அடியார்கள் இறைவனை இருந்தும் நடந்தும் எப்போதும் எண்ணுவதனாலேயே பெரியர் ஆகின்றனர்.[67] சுந்தரமூர்த்தி நாயனார் தம்மை 'அடியார்க் கடியேன்' என்று கூறிக்கொள்கிறார். திருத்தொண்டத் தொகைப் பதிகம் முழுவதும் இதையே குறிப்பிடுகிறது. தொண்டர்கள் என்னும் ஒரு புதிய கோட்பாடு சுந்தரருக்கே உரியது. அடியார்களை மதித்து வழிபடும் முறை, சுந்தரர் காலத்திலிருந்தே சைவ சித்தாந்தத்தின் ஒரு பகுதியாக அமைந்து விட்டது. இதனால் சிவனடியார் திருக்கூட்டம் என்ற ஒன்றினையே ஒருவன் காண முடியும்; அடியார் திருக்கூட்டத்தைச் சேர்ந்தவர் என்பதைத் தவிர, அவருடைய சாதி, குலம் முதலியவை கண்ணில் படாமல், எல்லாக் காலத்துக்கும் பொருந்தக்கூடிய அடியார் குடியரசு ஒன்றைச் சுந்தரர் இதன் மூலம் உருவாக்கித் தந்துள்ளார்.[68] 'அப்பாலும் அடிச் சார்ந்தார்' என்னும் கோட்பாட்டில் இதைக் காண்கிறோம். 'சுந்தரர் காலத்துக்கு முன்னும் பின்னும் தமிழகத்துக்கு வெளியிலும் வாழ்ந்த சிவனடியார்களை இது குறிக்கிறது' என்று சேக்கிழார் கருதினர். இவ்வாறு எல்லாக் காலத்துக்கும் பொருந்திய உலகத்துக்குப் பொதுவான 'அடியார்கள் குடியரசு' ஒன்று உருவாகியது.[69] பௌத்தராகிய சாக்கியரையும் 63 நாயன்மார்களில் ஒருவராக ஏற்றுக் கொண்டனர். இந்தக் கோட்பாடு சமயத்தளவில் கூட ஒரு கட்டுப்பாட்டை விதிக்கவில்லை என்று கொள்ளலாம். வேறு சமயத்தைச் சார்ந்தவர்களாயினும் இறை வழிபாடு செய்பவர்கள் தொண்டர்களே ஆவர். சைவர்களின் பரந்த மனப்போக்கிற்கு இஃது ஓர் எடுத்துக்காட்டு. உலகிலுள்ள எல்லாச் சமயங்களையும் படைத்தவன் சிவபெருமானே ஆவான்.[70] ஆகவே எந்த ஒரு சமயத்தையும் குறைத்துப் பேசவேண்டுவதில்லை. ஏனெனில் அந்தச் சமயமும் தன்னைச் சேர்ந்த அடியார்களை இறுதியாகச்

சிவனிடமே கொண்டு சேர்க்கும், இந்தக் கொள்கைதான் எந்தச் சமயத்தைச் சேர்ந்தவராயிருப்பினும், அந்தச் சமயத்தின் கடவுளாகவே சிவபெருமான் தோன்றி அருள் செய்வன் என்னும் சைவசித்தாந்தக் கருத்துக்கு அடிப்படையாய் அமைந்தது.[71]

தேவாரம் பாடிய மூவரில் திருஞானசம்பந்தர் அதிகமாகப் போற்றப்படுகிறார். நம்பி ஆரூரர் (சுந்தரர்) சம்பந்தரை 'எம்பிரான் சம்பந்தன்' என்று குறிப்பிடுகிறார். அதாவது இறைவனுடைய புகழைப் பாடி வழிபடும் அடியார்களின் தலைவராகச் சம்பந்தரை ஏற்றுக்கொள்கிறார். சம்பந்தரும் திருநாவுக்கரசரும் கூறியவற்றையே தாம் மொழிவதாக உரைக்கிறார்.[72] வேதம் 'எழுதாக் கிளவி; சம்பந்தர் பாடியது எழுதும் மறை.[73] சம்பந்தர் தாம் மொழிவதெல்லாம் வேதம்[74] என்றும், தாம் வேதங்களில் தேர்ந்த பயிற்சி உடையவர்[75] என்றும் கூறிக்கொள்கிறார். தமது பாடல்கள் மறைகளே[76] என்றும், அவை சிவநெறியைக் காட்டுகின்றன[77] என்றும், தமது சொல் சிவனுடைய சொல்லேயாகும்[78] என்றும் குறிப்பிடுகிறார். எனவே சம்பந்தருடைய பாடல்கள் திருமுறைகளில் முதலிடம் பெற்றன.

அப்பர், சம்பந்தர் காலத்தவர்; வயதில் மூத்தவர். இறைவன் திருவருளால் இவர் சமண சமயத்திலிருந்து சைவத்துக்கு வந்தடைந்தார். எனவே இவருடைய பாடல்கள் உணர்ச்சி மிகுந்தவை; எளியவை. அவருடைய பாடல்கள் பக்திச் சிறப்பு மிகுந்தவை. தாம் வழிபடும் பொருளினிடத்தில் இணைந்து தம்மையே அழித்துக் கொள்ளும் அவரது அன்புக்கு இணையாக வேறு எங்கும் காணல் அரிது.[79] அவர் சமண சமயத்திலிருந்து மாறி வந்ததால் அவர் பாடும் சிவனுடைய புகழ் சிறந்து விளங்குகிறது.

சுந்தரமூர்த்தி நாயனர் இல்லறத்தாராயினும் அதில் நாட்டமில்லாதிருந்தார். சிவபெருமானெடு தோழமை

பூண்டிருந்தார். இதனைச் சிவபெருமானே கூறுவதாகப் பெரியபுராணம் உரைக்கிறது.[80] சிவனடியார்களின் வரலாற்றை முதன்முதலில் தொகுத்துரைத்தவர் இவரே யாவார். அடியார் திருக்கூட்டம் என்னும் கோட்பாட்டை உருவாக்கியவரும், திருக்கூட்ட மரபுக்கு உரிய முறைகளை வகுத்தவரும் இவரே யாவார்.

## அடிக்குறிப்புகள்

1. இறையனர் களவியல் உரையாசிரியர் காதலுக்கும் ஆன்மீக நெறிக்கும் உள்ள உறவை மிக அழகாக விளக்குகிருர்.

> ''என்பயக்குமோ இது கற்க எனின், வீடுபேறு பயக்கும்,'' ப. 9; ''இனி அறனும் பயக்கும்; என்னை ஞானத்தின் மிக்க கொடை இன்மையான் என்பது''—ப. 11—இறையனர் அகப்பொருள், கழகம், 1969.

2. பெரியபுராணம் அவர்களை ''வடுகக் கருநாடர்'' (15. 11) என்றும் அந்த மன்னன் சமணன் என்றும், மக்களைத் துன்புறுத்தினன் என்றும் கூறுகிறது. (மேற்படி, 14)

> ''கன்ன மண்டலம் கொண்டமண் கையர்
> கைவிழுந்து முன்ன நீடிய வைதிக முறையையும் ஒழித்தான்''

வேம்பத்தூரார் திருவிளையாடல், மூர்த்தியார் அரசழித்த திருவிளையாடல்.

3. 'இறைவன் இந்த இருவகைகளாக விளங்குகின்ருன்' என்று அப்பர் கூறுகின்ருர்.

> ''தோத்திரமும் சாத்திரமும் ஆனர் தாமே'' (6. 78. 5)

4. பன்னிரண்டு திருமுறைகளுள் ஒன்ருகிய திருமந்திரம், 'பாடுந் திருமுறை பார்ப்பனி பாதங்கள்' (1040) என்று, 'திருமுறை' என்ற சொல்லையே பயன்படுத்துகிறது. அவ்வாறே பெரியபுராணமும் ''திருமுறை எழுதுவோர் வாசிப்போர்'' (38. 3) என்று குறிக்கிறது.

5. ''பாவைபாகர் திருவருள் சிறந்த முறை
பன்னிரண்டென வகுத்தபின்''

(உமாபதி, சேக்கிழார் புராணம், 96)

6. 'அடங்கன் முறை ஆராய்ச்சி', கரந்தைத் தமிழ்ச் சங்க வெள்ளி விழா மலர். ப. 347;

'கோசமும் பழமையும் ஊழும் கூத்தும்
ஆர்ப்பும் முறைமையும் முறையென லாகும்'
–பிங்கலந்தை, 3983 (ஒருசொல் பல்பொருள் வகை)

7. 'முறையெனும் நாமம் தனக்கே யுரிய
முந்நான்கு மறைகள்'—மேற்குறித்த அடங்கன் முறை ஆராய்ச்சி.

8. 'திருவொளி காணிய பேதுறுகின்ற திசைமுகனும்''
–(சம்பந்தர், 1. 39. 9)

'திருவே என் செல்வமே தேனே'—அப்பர், 6. 47. 1
'சென்றடையாத திருவுடையானை'—சம்பந்தர், 1. 98. 1.

'சிவமே பெறும் திரு எய்திற்றிலேன்'—மாணிக்கவாசகர், திருவாசகம் —திருஞானசம்பந்தர் தேவாரம் உரையுடன், பகுதி 2, 1954, முன்னுரை, பக்கம் 1, மேற்கோளாகக் காட்டியது. 'திரு' என்பது அசைவில்லாத மனத்தையும் குறிக்கும். 'திருநின்ற செம்மை'—சுந்தரமூர்த்தி, 7. 39. 1.

9. இவ்வேழு திருமுறைகளையும் நம்பியாண்டார் நம்பி கி. பி. 969-இல் தொகுத்தார். தொடக்க காலத்தில் இவ்வேழு மட்டுமே அடங்கன் முறை எனப்பட்டன. பின்பு அவராலேயே உத்தம சோழன் (கி. பி. 970–85) காலத்தில் மேலும் மூன்று சேர்க்கப்பட்டுப் பத்துத் திருமுறைகள் 'அடங்கன் முறை' எனப்பட்டன. நம்பியாண்டார் நம்பி பின்னர்ச் சில பாடல்களைத் தொகுத்தார். அவை 11-ஆம் திருமுறையாயின. பிறகு நம்பியின் பாடல்களும் அந்தத் தொகுப்பில் இடம் பெற்றன. உமாபதி சிவம், திருமுறை கண்ட புராணத்தில் பதினொரு திருமுறைகளையே குறிக்கின்றார். பின்னர் வந்த சேக்கிழாருடைய திருத்தொண்டர் புராணம் பன்னிரண்டாவதாகச் சேர்க்கப்பட்டது — இவ்வாறு துடிசைகிழார் அ. சிதம்பரனார் கூறுகின்றார். (அடங்கன் முறை ஆராய்ச்சி, மேற்படி நூல்)

10. இறைவனும் உயிர்களைப் பற்றிய கணக்கினை எழுதும் பதிவேடு ஒன்றை வைத்திருக்கிறான். 'எழுதும் கீழ்க்கணக்கு இன்னம்பர் ஈசனே'— அப்பர் (5. 21. 10); நின்தமர் பெயர் எழுதிய வரிநெடும் புத்தகத்து என்னையும் எழுதவேண்டுவன்'—பட்டினத்துப் பிள்ளையார், கோயில் நான்மணி மாலை, செய்யுள் 4 (11-ஆம் திருமுறை)

11. திருமுறைகண்ட புராண ஆசிரியராகிய உமாபதிசிவம் எட்டாந் திருமுறையில் ஒன்றாகத் திருக்கோவையாரைக் குறிப்பிடவில்லை; 'அருள் திருவாசகம் ஒன்று', செய்யுள், 26.

12. மாணிக்கவாசகர் கி. பி. 3-ஆம் நூற்றுண்டைச் சேர்ந்தவர் என்பது மறைமலேயடிகளின் கருத்து— (பார்க்க: மாணிக்கவாசகர் வரலாறும் காலமும்).

மாணிக்கவாசகர் ஆகமங்களேப் பற்றிக் குறிப்பிடுகிருர்; 'இறைவனே ஆகமம்' என்று கூறுகிருர். தேவார ஆசிரியர்களோ வேதங்களேயும் வேதத்தின் அங்கங்களேயும் மட்டுமே குறிப்பிடுகிருர்கள்; ஆகமங்களேப் பற்றிக் குறிப்பு வரும்போதும் அவற்றை இரண்டாந் தரத்தினவாகக் கொண்டார்கள். மணிவாசகர் 'தீட்சை'யைப் பற்றிக் குறிப்பிடுகிருர். தீட்சைமுறை, ஆகமங்கள் பரவலாக ஏற்றுக்கொள்ளப்பட்ட பின்பே இடம் பெற்றது. தேவார ஆசிரியர்கள் இந்தக் கருத்தில் தீட்சை பெறவில்லே. அவர்கள் மூவரும் இரண்டு மலங்களேப் பற்றிக் கூறுகிருர்கள். ஆணவம் என்பதை அதே கருத்தில் பயன் படுத்தவில்லே. மாணிக்கவாசகர் மூன்று மலங்களேப் பற்றிப் பேசுகிருர். ('பண்டாய நான் மறை', திருக்கழுக்குன்றப் பதிகம், அச்சோப் பதிகம்) அவர் மற்ருேரிடத்தில் ஐந்து மலங்களேக் குறிக் கிருர். ('மலங்களேந்தாற் சுழல்வன் மத்துறு தயிரெனவே' — நீத்தல் விண்ணப்பம், 29). ஆகமங்கள் மிகவும் விரிவாகப் பரவிய பின்பே இந்தக் கருத்து இடங் கொண்டிருத்தல் வேண்டும். ஆகமங்களேப் பற்றி, முதலில் கூறும் தமிழ்நூல் திருமந்திரம் ஆகும். அதன் ஆசிரியர் தமது நூலே ஆகமம் என்றே குறிக்கிருர். 'சிந்தை செய்து ஆகமம் செப்பலுற்றேனே' (135).

மாயாவாதம் 'சண்டமாருதமாக' விசி நாட்டை அலேக்கழித்தது என்று மாணிக்கவாசகர் குறிப்பிடுகிருர். ஆனல், மாயாவாதத்தைப் பற்றிய குறிப்பு ஏதும் தேவாரத்தில் இல்லே. —K. K. பிள்ளேயவர்களின் 'மாணிக்கவாசகர் காலம்' — எனும் கட்டுரையையும் காண்க; Essays in Philosophy (Presented to Dr. T. M. P. Mahadevan) 1962, PP. 460—63

13. திருமுறை கண்ட புராணம், செய்யுள்—29.

14. 'சேக்கிழார் இரண்டாங் குலோத்துங்க சோழன் (கி. பி. 1113—50) காலத்தவர்' — டாக்டர். மா. இராசமாணிக்கம், பெரியபுராண ஆராய்ச்சி, 1960, ப. 14, 41. சேக்கிழார் வேறுபல சோழமன்னர்கள் காலத்து வாழ்ந்திருக்கக் கூடும் என்று கூறும் கருத்துக்களே எல்லாம் இந்நூல் விரிவாக ஆராய்கிறது.

15. 'வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத்துறை விளங்கப் பூத பரம்பரை பொலிய' — பெரியபுராணம், 28. 1. 'சிவம் பெருக்கும் பிள்ளேயார் திருஅவதாரம் செய்தார்' — மேற்படி, 28. 26.

16. 'உலகின்வரும் இருள் நீக்கி ஒளிவிளங்கு கதிர்போற்பின் மலரும் மருள் நீக்கியார் வந்தவதாரம் செய்தார்' — மேற்படி 26.18.

17. 'தீதகன்று உலக்முய்யத் திருஅவதாரம் செய்தார்' — மேற்படி. 5.3.

18. சிவஞான சித்தியார், சுபக்கம், (271, 272, 273, 274)

19. 'வழுவில் திருப்பணி செய்து' — பெரியபுராணம், 5. 41;
"நிலைபெறுமாறு எண்ணுதியேல்......புலர்வதன் முன்
அலகிட்டு மெழுக்குமிட்டு......" — அப்பர், 6. 31. 3.

20. பார்க்க: 'The Philosophy of Saiva Siddhanta' — K. Sivaraman, Ph. D. Thesis (Unpublished), 1963, (Banaras Hindu University), Page 650.

'கிரியை' என்பது சடங்குகளையும் குறிக்கும். உலகம் தீமையிலிருந்து விடுதலை பெறுவதற்காகச் சம்பந்தர் சிவபெருமானிடமிருந்து பொற்காசுகள் பெற்று, தம் தந்தையாரிடம் வந்து வேள்வி செய்யுமாறு கூறுகிறார் — பெரியபுராணம் 28.429.

21. 'பன்னாளும் பயில்யோகம் பரம்பரையின் விரும்பினார்' — மேற்படி, 5. 181.

22. மேற்படி 140. அவர் இடையீடின்றி, சிவனோடு ஒன்றியிருந்த தனாலேயே அவரால் சிவனருளைத் தவிர வேறு எதையும் காண முடியவில்லை.

23. 'ஞான சம்பந்தர் திருநாவரையர் வன்தொண்டர் பானிகரும் தேவாரப் பாமாலை' — சிவநாம க்ஷேத்திரக் கலிவெண்பா. திருமுறைகளைத் தொகுத்த நம்பியாண்டார்நம்பி இத்திருமுறைக்குப் பொதுச்சொல் எதையும் பயன்படுத்தவில்லை என்பது வியப்புக்குரியது. 11, 12,-ஆம் நூற்றாண்டுகளில் 'தேவாரம்' என்பது வழிபாடு என்னும் பொருளில் வழங்கப்பட்டது.

24. தி. வை. சதாசிவப் பண்டாரத்தார், தமிழிலக்கிய வரலாறு, (13, 14, 15-நூற்றாண்டுகள்) - 1963, பக்கம் 66.

25. 'மூவாத பேரன்பின் மூவர் முதலிகளும்
தேவாரம் செய்த திருப்பாட்டும்' — ஏகாம்பரநாதருலா, கண்ணி, 78.

தேவார ஆசிரியர் மூவரையும் ஒருசேர 'மூவர் முதலிகள்' என்று குறிப்பிடும் வழக்கும் இந்த நூலிலிருந்தே பெறப்பட்டது. மிகவும் முக்கிய மானவர்களை 'முதல்' என்னும் அடையோடு சேர்த்து அழைப்பது வைணவத்திலும் உண்டு. முதல் மூன்று ஆழ்வார்களாகிய பேயாழ்வார், பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார் என்னும் மூவரும் 'முதலாழ்வார்கள்' என்றே குறிக்கப்படுகின்றார்கள்.

26. 'வாரம் இரண்டும் வரிசையிற்பாட' — சிலப்பதிகாரம் 3, அடி 136

27. **பன்னிரு திருமுறை வரலாறு,** பகுதி ஒன்று, பக்கம் 32, 33.

28. 'அர்ச்சனை பாட்டே யாகும்' பெரியபுராணம், 5. 70.

29. 'ஏழிசையாய் இசைப்பயனாய்' — சுந்தரர் 7. 51. 10.

30. 1. 11. 11; 1. 5. 11; 2. 97. 11; 3. 38. 11.

31. 'பண்ணார் இசைகள் அவைகொண்டு பலரும் ஏத்தும்' — 7. 52. 6; மேலும் 3. 104. 11; 1. 38. 6; 3. 9. 5.

32. பார்க்க: 'பாழியுறை வேழநிகர் பாழமணர் சூழுமுதலாளருமுணர, ஏழினிசை யாழின்மொழி ஏழையவள் வாழுமிறை' — 7. 67. 10.

33. 'கோழை மிடருக கவி கோளுமிலவாக இசை கூடும் வகையால் ஏழையடியார்கள் சொனசொல் மகிழுமீசன்' – சம்பந்தர் 1. 71. 1.

34. 'உருகி ஊன்குலைந்து ஏத்தி எழுமின்' — அப்பர் 5. 75. 9.

35. அப்பர் 4. 81. 12.

36. 1. 80. 1; 3. 122. 3, 4; 1. 6. 1.

37. பெரியபுராணம் 28. 429. சமணர்களால் மறைக்கப்பட்ட கோவில் மீண்டும் வழிபாடு நடைபெற வேண்டுமென்பதற்காக அப்பர் உண்ணாநோன்பு மேற்கொண்டதும், (பெரியபுராணம், 21. 295, 99) சுந்தரமூர்த்தி நாயனார் திருவாரூர்த் திருவிழாவின்போது அடியவர்களுக்கு அமுதூட்ட இறைவனிடம் பொன்வேண்டிப் பெற்றதும் (பெரியபுராணம் 29. 46. 51.) சிவநெறியை மீண்டும் நிலைநாட்ட மேற்கொண்ட செயல்களாகக் கொள்ளப்படும்.

38 1. 131. 7; 3. 120. 1; 2. 84. 10; 2. 114. 2; 2. 118 6; 3. 23. 6; 2. 6. 6; 1. 100. 2; 'வேதமோதும் விரிசடை அண்ணலார்' — 5. 14. 9; 'பாடினார் சாம வேதம்' — 4. 27. 2; 'வேத் கீதம் முறையொடும் வல்ல......மிடறர்', 4. 8.8; 'ஓதினார் வேதம் வாயால்', 4. 22. 5; 'நான்மறையோடு ஆறங்கம் நவின்ற நாவார்' 6. 10. 6, 10; அங்கங்களும் மறைநான்குடன் விரித்தான், 7. 71. 3; மறைநான்கும் விரித்துகந்தீர், 7. 25. 4; வேதந்தான் விரித்தோத வல்லானை, 7. 61. 7; அங்கமும் நான்மறையும் அருள்செய்......மங்கையொர் கூறுடையான், 1. 108. 4.

வைணவர்களும்கூட வேதங்கள் சிவபெருமானுடைய வாய்மொழி என்று கொள்கிருர்கள். 'இருக்கிலங்கு திருமொழிவாய் எண்தோளீசர்' — திருமங்கையாழ்வார், பெரிய திருமொழி, 6. 6. 8.

39. 'ஆரணப் பொருள்', 5. 68. 2; 5. 81. 2;
'வேதத்தின் பொருள்' 4. 64. 1;
'மறைப்பொருளும் ஆயினன்', 6. 49. 1.

40. மறை வழக்கமிலாத மாபாவிகள் 3. 108. 3.

41. வைதிகத்தின் வழியொழுகாத 3. 108. 2.

42. 2. 34. 9; 2. 14. 5; 3. 59. 2; 2. 75. 8.

43. உருத்திர பசுபதி 7. 39. 3; பெரியபுராணம் 17. 9.

44. 2. 61. 1. இந்தப் பதிகம் முழுவதும் திருநீற்றின் பெருமையைப் பேசுகிறது.

45. 'பராவண மாவது நீறு' 2. 66. 8

46. 6. 61. 3.

47. 'வெண்ணீற்று மேனியானே', 6. 80. 3.

48. 6. 95. 6.

49. 'நீறணியப் பெற்ருல் வெந்து அறும் வினேயும் நோயும்'–4. 77. 4.

50. திருத்தொண்டத் தொகையில் 7. 39. 10.

51. 'செந்தழல் ஓம்பிய செம்மை வேதியர்க்கு
அந்தியுள் மந்திரம் அஞ்செழுத்துமே' –சம்பந்தர், 3. 22. 2.

52. 4. 11. இந்தப் பதிகம் முழுவதும் ஐந்தெழுத்தின் பெருமையைப் பேசுகிறது.

53. 5. 60. 1; 6. 64. 9.

54. 'அந்தியும் நண்பகலும் அஞ்சுபதம் சொல்லி'; 7. 83. 1.

55. 7. 48. இந்தப் பதிகம் முழுவதும் இதையே கூறுகிறது. இந்த நிலையை எய்துவது இயலாதது அல்ல என்பதற்கு, காந்தியடிகள் ஓர் எடுத்துக் காட்டாவார். இறக்கும் தறுவாயிலும் அவர் நா 'ராம்' என்றே ஒலித்தது.

56. 'தூயவன்பாதம் தொடர்ந்து தொல்சீர் துளையாற்பரவும்
— நம்பியாண்டார் நம்பி, 11. 35. 15;

'திருவாளன் எழுத்தஞ்சும்.........விளைத்தார்'
– பெரியபுராணம். 14. 26;

'அஞ்செழுத்தின் இசைபெருக'– மேற்படி, 27.

57. 4. 41. 2; 4. 65. 6; 4. 9. 7; 7. 5. 1; 7. 22. 2, 8; 7. 30. 3.

58. 'கல்லினுல் மலர் ஓரிரு நான்கு கொண்டு
உள்குவார் வல்வினை ஓட்டுவார் ...........

வெள்ளணி மறை விரட்டரே' (5.54.4). இப்பதிகம் முழுவதும் மலரிடுவார் வினை மாய்வதைப் பற்றியே குறிக்கும்.

59. 'முப்போதும் திருமேனி தீண்டுவார்க் கடியேன்' –7. 39. 10

60. பன்னிரண்டாந் திருமுறையாகிய பெரியபுராணம் இதனை நன்கு எடுத்து விளக்குகிறது.

61. 'உருத்திரப் பல்கணத்தார்க்கு அட்டிட்டல்' – 2. 41;
'அருந்தவர்கள் துய்ப்பனவும்' – 2. 47. 2;
'மண்ணினில் பிறந்தார் பெறும்பயன் மதிசூடும்
அண்ணலார் அடியார்தமை அமுது செய்வித்தல்' —
பெரியபுராணம் 28. 1087.

62. 'வலங்கொள்வாரை வானோர் வலங்கொள்வரே' — 5.80.10.

63. 'உடையான் அடியார் அடியோங்கட்கு அரியதுண்டே; 4.94.3.

64. அடிஉளங் கொள்வார்தமை உளங்கொள்வார்வினை ஆசறுமே –
3. 111. 2.

65. 'தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே' –4.101.1. இப்பதிகம் முழுவதும் சிவனடியாரின் பெருமையே பேசுகிறது.

66. 'தொண்டாடிய தொண்டடிப் பொடிநீறும்' – 4.111.7. இதே கருத்தைக் குலசேகராழ்வரும் வெளியிடுகிருர்.

'தொண்டரடிப் பொடிஆட நாம்பெறின் கங்கைநீர்
குடைந்தாடும் வேட்கை என்னுவதே'— தேட்டருந்திறல், 2.

67. 'என்னியிருந்து கிடந்தும் நடந்தும் அண்ணலென நினைவார்' — 7.11.2.

68. பார்க்க: மொ. அ. துரை அரங்கனர், The Religion and Philosophy of Tevaram, Book II, 1959, PP. 1091—2.

69. மேற்படி நூல் - 1066.

70. 'ஆறு சமயங்கட்கு ஒருதலைவன்' - 1. 131. 1;
'ஆறு சமயம் ஓதியும் உணர்ந்தும் உளதேவர் தொழ
நின்றருள் செய் ஒருவன்' - 3. 71. 10;
'முன்னம் இருமூன்று சமயங்களவையாகிப்
பின்னை அருள்செய்த பிறையாளன்' - 2. 29. 5;
'அறுவகைச் சமயம் வைத்தார்' - 4.33.6;
'சமயமவை ஆறினுக்கும் தலைவன்தான் காண்', 6. 65. 7;
'விரிவிலா அறிவினர்கள் வேறொரு சமயம் செய்து,
எரிவினற் சொன்னரேனும் எம்பிராற் கேற்றதாகும்' - 4 60.9;
'வெவ்வேருய் இருமூன்று சமயமாகிப் புக்கானை, 6. 50. 7;
'அறிவினல் மிக்க அறுவகைச் சமயம் அவ்வவர்க்காங்கே
ஆரருள் புரிந்து', 7. 55. 9; 'சமயங்களின் நம்பி', 7. 63. 6.

71. 'யாதொரு தெய்வங் கொண்டீர்
அத்தெய்வமாகி யாங்கே
மாதொரு பாகனர்தாம் வருவர்' — சிவஞானசித்தியார், சுபக்கம், 115.

72. 'நல்லிசை ஞானசம்பந்தனும் நாவினுக்கரையனும்
பாடிய நற்றமிழ்மாலை
சொல்லியவே சொல்லி' - 7. 67. 5.

73. 'வண்டமிழால் எழுதுமறை மொழிந்த பிரான்' — பெரியபுராணம், 21. 180.

74. 'மன்னியசீர் மறைநாவன்............சம்பந்தன்' - 1. 130. 11;
செழு மறைகள் பயிலும் நாவன்; 1. 132. 11;
செழுமறை நிறைநாவன்', 2. 110. 11;

75. 'நான்மறை வல்ல ஞானசம்பந்தன்', 3. 1. 11.

76. 'மறை வளரும் தமிழ்மாலை', 2. 67. 11;
'மறையிலங்கு தமிழ்' - 1. 61. 11.

77. 'சம்பந்தன் உரைசெய்த திருநெறிய தமிழ்' - 1. 1. 11.

78. 'எனதுரை தனதுரையாக', 1. 76. 1.

79. வீ. பொன்னையா, The Saiva Siddhantha Theory of Knowledge, 1952. பக்கம் 47.

80. 'தோழமை ஆக உனக்கு நம்மைத் தந்தனம்' - 5. 127.

# 4. தேவாரத்தில் சித்தாந்தத் துளிகள்.

வேதங்களும் ஆகமங்களும் சிவபெருமானுலேயே அருளப்பெற்றன என்பது சைவசித்தாந்த தத்துவத்தின் அடிப்படைக் கொள்கைகளுள் ஒன்ருகும். இதனைத் தேவாரம் பாடிய ஆசிரியர்கள் ஏற்றுக்கொண்டு குறித்திருக்கிருர்கள்.[1] அவ்வாறே சைவசித்தாந்தத்தில், உள்பொருளாகிய பதி, பசு, பாசம் என்பவற்றையும் அவர்கள் குறிப்பிட்டிருக்கிருர்கள். பதி – சிவபெருமானுகும். பசு—ஆணவத்தால் பிணிக்கப்பட்டது. பிணிப்பது பாசம்.[2] ஆணவம் உயிரோடு ஒட்டியது. அது உண்டாக்கப் படுவதில்லை (விளையாததொர் பரிசில்) பாச வேதனை என்பது கருமம். மூன்ருவது மாயை (ஒண்டலை) உயிர் விரும்பவும் அறியவும் செயல்படவும் துணை புரிவது. ஆதலின் அது 'ஒண்டலை' எனப்பட்டது. இந்தக் குறிப்பு 'பாசவினை' எனவும் (1. 93. 4), அதினின்று விடுபடுதல் அரிதாதலின் 'பாசவல்வினை' எனவும் (2. 25. 3) அது தொடக்கத்திலிருந்தே வருதலின் 'முன்னைய முதல்வினை' எனவும் (3. 84. 6) குறிக்கப்பட்டது. தேவார ஆசிரியர்கள் ஆணவத்தைக் குறிக்க 'மலம்' என்னும் சொல்லை ஆண்டனர்.[3] சுந்தரமூர்த்தி நாயனுர் இதனைக் 'கட்டு'[4] எனக் குறிக்கிருர். கட்டு அறியாமையால் உண்டாகியது. கதிரவன் இருளை நீக்குவதுபோல அறிவு அதனை நீக்குகிறது. அதுவே முத்தியாகும்.[5] சிவனை அறிவதே உண்மையான ஞானமாகும். அது அவனருளாலேயே கிடைக்கும். தேவார ஆசிரியர்கள் துன்பத்தை விளக்கும் அறியாமையை இருள்[6] என்று குறித்தனர். சிவபெருமான் தனதருளால் இந்த அறியாமையை நீக்குகிருன். அது ஒளிநெறி' எனப்படும் (1. 128) இந்த ஒளி தோன்றிய பிறகு உயிர் இறைவனை அறிகிறது. அதற்கும் அவனருள் தேவை.[7] பசுக்களாகிய உயிர்களுக்குத் தலைவன்

ஆகையினால் இறைவன் பசுபதி எனப்பட்டான்.[8] எனவே பிற்காலத்துச் சைவசித்தாந்த சாத்திரங்களில் பயின்ற பதி பசு பாசம்[9] என்னும் சொற்கள் தேவார காலத்தில் பயின்று வந்தன என்னலாம்.

சைவசித்தாந்தத்தில் கடவுளைப் பற்றி ஓர் அடிப்படைக் குறிப்பு உண்டு. அவர் ஒரே நேரத்தில் உயிருடன் ஒன்றியும் வேருயும் உடனுயும் இருப்பார். இறைவனுக்கும் உயிருக்கும் உள்ள இந்தத் தொடர்பு, அகரத்துக்கும் பிற எழுத்துக்களுக்குமுள்ள தொடர்பை உவமையாகக் காட்டி விளக்கப்படுகிறது. இந்த உவமையைத் திருக்குறளிலும் காண்கிறோம்.[10] இந்த உவமையின் அழகையும் சிறப்பையும் உணர்ந்த தேவார ஆசிரியர்கள் தமது பாடல்களிலும் இதை அமைத்திருக்கிருர்கள்.[11] திருஞானசம்பந்தர் இந்தக் கருத்தை வேறுபடவும் எடுத்துக் கூறுகிருர். சிவன் எல்லாப் பொருளுக்கும் ஈறும் முதலும் ஆனவன்; அவன் ஆணும் பெண்ணுமாய் இருக்கிருன்; மூன்று குணங்களாயும் (சத்துவம், ராசதம், தாமதம்) இருக்கிருன்; அவனே நான்கு வேதங்கள்; ஐந்து பூதங்கள்; ஆறு சுவைகள்; ஏழிசைகள்; எட்டுத் திசைகளுமாம். இவை எல்லாவற்றோடும் உடனுகவும் வேருகவும் அவன் விளங்குகின்ருன்.[12] இறைவனுக்கும் உயிருக்கும் உள்ள அத்துவித உறவை இது எடுத்துக் காட்டுகிறது.

'இரண்டன்மை' என்னும் இந்தக் கருத்து இறைவன் எண் வடிவினன் என்பதைக் காட்டுகிறது.[13] உலகில் உள்ள எல்லாப் பொருள்களும்—அசைவன அசையாதன, அறிவுடையன அறிவற்றன—எல்லாமே அவனுடைய வடிவங்கள். ஐந்து பூதங்கள், இருசுடர்கள் (கதிரும் நிலவும்), செய்பவன் (உயிர்)[14] ஆகிய எட்டும் இறைவன் வடிவமாகும். எட்டாம் பொருளாகக் கூறப்பட்டது உயிர் ஆகும். வாயவீய சங்கிதை இதை நன்கு விளக்குகிறது.[15] உயிர் மற்ற ஏழு பொருள்களிலும் விரவி நிற்கிறது. சிவம் உயிரில்

நிறைந்திருக்கிறது. உயிர் எல்லாப் பூதங்களிலும் கதிரிலும் நிலவிலும் நிறைந்திருக்கிறது. இது அத்துவைதத்தின் அடிப்படை ஆகும்.

உலகிலுள்ள எல்லாப் பொருளும் சிவன் வடிவே ஆம். நாம் எல்லாப் பொருளிடத்திலும் அன்பு செலுத்துதல் வேண்டாமா? பிற உயிர்களுக்குத் தீங்கிழைத்தல் பாவமாகும். எல்லாப் பொருள்களிடத்தும் அன்பு காட்டுதல் கடவுள் வழிபாடாகும்.

## எட்டாம் திருமுறை

எட்டாம் திருமுறையின் ஆசிரியர் சமயகுரவர்களில் நான்காமவராகிய மாணிக்கவாசகர் ஆவார். எட்டாம் திருமுறை திருவாசகம், திருக்கோவையார் என்னும் இரண்டு நூல்களைக் கொண்டது. இங்குத் திருவாசகத்தை மட்டும் எடுத்துக் கொள்வோம்.[16]

திருவாசகத்தின் பெருமையைச் சிவப்பிரகாச சுவாமிகள் (18-ஆம் நூற்றாண்டு) மிக அழகாக எடுத்துக் கூறுகிறுர். 'வேதம் ஓதினால் யாரும் கண்ணீர் சிந்துவதில்லை. ஆனால் திருவாசகம் ஓதும்பொழுது மனம் நெகிழ்ந்து கண்ணீர் பெருக்குவாரைக் காண்கிறோம்.'[17] மாணிக்கவாசகர் 'அழுது அடியடைந்த அன்பர்' என்று குறிப்பிடப் படுகிறுர். அழுகை பற்றி அவர் பல்வேறு இடங்களில் கூறி இருப்பதே இதற்குக் காரணமாகும்.[18]

சிவபெருமானே குருவாக வந்து உபதேசம் செய்யும் பேறு பெற்றவர் மாணிக்கவாசகர். சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் இவற்றுள் இவருடைய வாழ்க்கை ஞான நெறியைக் குறிக்கும்[19] என்பர். தேவாரத்தைவிடத் திருவாசகத்தில் சைவசித்தாந்தக் கருத்துக்களை மிகுதியாகக் காண்கிறோம்.

மாணிக்கவாசகர் ஆகமங்களைப்பற்றிக் கூறுகிறார். சிவபெருமான் ஆகமங்களை அருளியதாகவும்[20] அவரே ஆகமமாக விளங்குவதாகவும்[21] அவர் கூறுகிறார். இறைவன் ஆகமமாகவும் அதன் வழியில் பெறுவதற்கு எளியவனாகவும் இருக்கிறான்.[22]

திருவாசகம் மூன்று மலங்களைக் குறிக்கிறது. 'மும்மலங்கள் பாயும் கழுக்கடை' (திருத்தசாங்கம் 4); 'மயக்கமாயதோர் மும்மலப் பழவல்வினை' (திருக்கழுக்குன்றப்பதிகம் 7) என்றும், இறைவன் இந்த மலங்களை அழிக்கிறான்[23] என்றும் அது கூறுகின்றது. ஓரிடத்து, ஐந்து மலங்களைப் பற்றியும் குறிப்பிடுகின்றது.[24] திருவாசகத்தில் பசுவும் பாசமும் கூடக் குறிப்பிடப் படுகின்றன. பசு, பசுவாவதற்குக் காரணம் அது பாசத்தினால் கட்டுண்டிருத்தலேயாம். பாசம் நீங்கியதும் உயிரின் பசுத்துவமும் நீங்குகிறது, மாணிக்கவாசகர் இதனை, இறைவன் அருளும்போது பசு, பாசம் இரண்டுமே விலகுகின்றன (பசு பாசமறுத்தருளி, கண்டபத்து, 7) என்று கூறுகிறார். இறைவனுக்கும் உயிருக்குமிடையே உள்ள ஒன்றுதல், வேறுதல், உடனாதல் ஆகிய மூன்று தன்மைகளும் கூட இந்நூலில் உரைக்கப்படுகின்றன. எள்ளில் எண்ணெய்போல அவன் எல்லாவற்றிலும் கீழும் மேலும், உள்ளும் புறமும் நிறைந்திருக்கின்றான்.[25] அவன் வான், நீர், நிலம், தீ, காற்றாகவும், அவை அல்லவாகவும் இருக்கின்றான்.[26] அவன் ஆணும் பெண்ணும் அலியுமாகி, வானும் நிலனுமாகி, அவற்றின் வேறாகி இயங்குகின்றான்.[27] அவன் உயிரின் ஒரு பகுதியாய் இருந்து துன்பத்தை அனுபவிக்கிறான்; அதே நேரத்தில் வேறாகவும் நிற்கிறான்;[28] 'ஒன்று நீ அல்லை; அன்றி ஒன்றில்லை,[29] என்று வியந்து பாடுகின்றார். அவர் சிவபெருமானுடைய எட்டு உருவங்களைப் பற்றியும் பாடுகிறார். தான் ஒருவனே நிலம், நீர், தீ, வான், உயிர், நிலா, கதிரவன் எனப் பலவாகி நின்றான். ஏழு உலகங்களாயும் பத்துத்திசைகளாயும் விரிந்தான்.[30] இங்கே மாணிக்கவாசகர் இறைவனை 'ஒருவன்'

என்ற சொல்லால் குறிக்கின்ருர். ஒருவன் என்பது முழு முதற்கடவுளைக் குறிக்கும். இதே பொருளில் நம்மாழ்வாரும் ஒருவன் என்ற சொல்லை ஆள்கிருர்.[31] ஒருவன் என்பது ஒப்பற்றவன் என்ற பொருளையும் தரும்.

மலம் உயிரைப் பிணிக்கிறது. இந்தப் பிணிப்பினுல் அறியாமை தோன்றுகிறது. இந்தப் பிணிப்பு தொடக்க மின்றி இருந்து வருகிறது. சிவபெருமான் இதனை நீக்கி உயிர் உண்மையைக் காண்பதற்கு அருள்புரிகிருர்.[32]

உயிர் கட்டுண்டபோது அது மலத்தோடு ஒன்றியிருக் கிறது. விடுதலை பெற்றபோது இறைவனை ஒன்றி இருக் கிறது. பாசத்தின் பிடிப்பும் பசுத்தன்மையும் கழிய, உயிர் சிவமாகிறது. மாணிக்கவாசகர் இக்கருத்தை நன்ருக விளக்குகிருர். 'சிவமாக்கி,[33] என்னும் தொடரைக் கொண்டு இதனை விளக்குகிருர். சிவமாதலுக்கு முன்பு இரண்டு படி கள் உள்ளன. இறைவன் பக்தி நெறியைக் காட்டி அதன் மூலம் வினையைப் போக்குகிருர். இதனுல் மலம் நீங்குகிறது; உயிர் சிவத்தை அடைகிறது.[34] உயிரை உய்வித்துத் தன்னை அடையச் செய்வதற்காக, இறைவன் தன்னையே தருகிருனும்.[35]

ஆகமங்களில் கூறப்படும் கருத்தாகிய 'வினை ஒப்பு' என்பதனையும் மாணிக்கவாசகர் கூறுகின்ருர்.[36] இறையருள் வந்து நேர்தலைக் (சத்திநிபாதம்) காட்டும் வகையில் இறைவன் நேரே வந்து தமக்கு உபதேசித்ததை அவர் பல இடங்களில் குறிப்பிடுகின்ருர்.[37] திருவாசகத்தைச் சைவர் களின் 'பைபிள்' என்று கூறலாம்.[38]

## ஒன்பதாந் திருமுறை

ஒன்பதாந்திருமுறை ஒரு தொகை நூல். ஒன்பது அடியவர்களின் பாடல்களைக் கொண்டது இந்நூல். இவ்வாசிரியர்கள் 9-ஆம் நூற்ருண்டுக்கும் 10-ஆம்

நூற்றுண்டுக்கு மிடையில் வாழ்ந்தவர்கள். இந்தத் திருமுறை பெரும்பாலும் சிவனுடைய பெருமையையும் அவன் செயல்களையும் அவனை மனமுருகி வணங்கும்போது உண்டாகும் ஆனந்தத்தையும் கூறுகிறது.

சிவபெருமானுக்கென்று தனியே ஒரு பெயரில்லை என்றாலும் அவனை ஆயிரம் பெயர்கொண்டு ஏத்துகிறோம்.[39] சிவபெருமான் யோகமும் போகமுமாக இருக்கிறான். அதாவது மேற்கொள்ளவேண்டிய வழியாகவும் அடைய வேண்டிய குறிக்கோளாகவும் இருக்கிறான்.[40] சிவன் எட்டுருவானவன் (செய்யுள் 36) அவனைத்தவிர 'மற்றொன்றும் உண்டென உணர்கிலேன்' என்கிறார் சேந்தனார் (46). 'பழையராம் தொண்டர்க்கு எளியராம்' சிவபெருமான் (94). அவன் 'மூலமாய் முடிவாய் முடிவிலா முதலாய்' உள்ளான் (121). அவன் மங்கையோடிருந்தும் யோகம் செய்பவனும் (143). அவன் சம்பந்தருக்கு அருள் புரிந்ததும் இந்நூலில் குறிக்கப்படுகிறது. 'எம்பந்த வல்வினை நோய்தீர்த்து எமையாளும் சம்பந்தன்' என்று திருஞானசம்பந்தரைப் புகழ்கிறது (188). "பாடலங்காரப் பரிசில்காசருளிப் பழுத்த செந்தமிழ்மலர் சூடி நீடலங்காரத் தெம்பெருமக்கள்" (57) எனச் சம்பந்தர் அப்பர் ஆகிய இருவரும் புகழப்படுகிறார்கள்.

ஒன்பதாந்திருமுறை சைவசித்தாந்தக் கருத்துக்களையும் கலைச்சொற்களையும் பயன்படுத்துகிறது. கருவூர்த்தேவர் பழைய தளையையும் அது நீங்குதலையும் கூறுகிறார்.[41] திருவாலி அமுதனார், சைவநூல் அல்லாத பிறநூல் கற்பவர்களைப் பித்தர் என்றும், அந்நூல்கள் பசுநூல்கள் என்றும் குறிக்கிறார்.[42] சிவபெருமான் 'அல்லாய்ப் பகலாய் அருவாய் உருவாய் ஆராவமுதாய்' எல்லாமாய் இருக்கிறான் (236) சிவபெருமானே தலைவன்; எனக்குப் புகலிடம்; எனது மூச்சு; அவனே நிலம் வான் கதிர்'[43] என்றெல்லாம் அவர் பாடுகிறார்.

'சைவம் ஒன்றே தெய்வீக நெறி. அறிஞர்கள் சிவ பெருமானைத் தவிர வேறு தெய்வத்தைக் கருதமாட்டார் கள்'[44] என்கிறார் சேந்தனார். சிவனடியார்களுடைய பெருமையை அவர் விரித்துரைக்கிறார். 'திருவீழி மிழலையான் திருவடிநிழற் கீழ்ப் புக்கு நிற்பவர்தம் பொன்னடிக் கமலப் பொடி அணிந்து அடிமை பூண்டேனே' (51, 55) என்று தாம் பெற்ற பேற்றை அவர் குறிப்பிடுகிறார்.

திருமாளிகைத்தேவர் தமது திருவிசைப்பாவில் இறை யருளை விரிவாகப் பேசுகிறார். இறைவன் கருதுகிறபடியும் சொல்கிறபடியும் தன்னையும் கருதச் செய்ய வேண்டும் சொல்லச் செய்ய வேண்டும் என்று இறைவனை வேண்டு கின்றார்.[45] இறைவனோடு பிரிவறநின்று தன்னை இழக்கும் இந்த நிலையைச் 'சிவயோகம்' என்னும் தலைப்பில் சைவ சித்தாந்தம் விளக்குகிறது.[46]

சமயங்கள் ஏணிப்படிபோல அமைந்திருக்கின்றன என்றும் தாம் அப் படிவழி ஏறி இறைவனோடு கலந்ததாக வும் இவ்வெல்லா நிலைகளிலும் இறைவன் தன்னுடன் இருந்த தாகவும் அவ்விறைவன் வாழுமிடம் திருவிடைமருதூர் என்றும் கருவூர்த்தேவர் கூறுகிறார்.[47]

**பத்தாந் திருமுறை**

பத்தாந் திருமுறையாகிய திருமந்திரம் இவற்றினின்று வேறுபட்டு நிற்கிறது. முதல் ஒன்பது திருமுறைகளும் பதினோராந் திருமுறையும் ஆன்மீக நெறியில் ஆழ்ந்திருந்தோர் வெளியிட்ட உணர்ச்சிப் பொழிவுகள் பன்னிரண்டாந் திருமுறை அடியவர்களுடைய வாழ்க்கையை எடுத்துரைப்பது. பத்தாந் திருமுறையோ இவற்றுள் எந்த வகையிலும் சேராதது. அது, மற்ற எல்லாவற்றிற்கும் காலத்தால் முந்தையது. அது ஆன்மீகமும் தத்துவமும் இறை உணர்வும் கலந்ததொன்று. திருமூலர் அதனை 'ஆகமம்' என்றே அழைக்கிறார்.[48] கடவுளைப் பற்றித் தமிழில் பாடுவதற்காகவே அவர் தன்னைப் படைத்ததாகக் கூறு

கிறுர். [49] அதாவது, இறைவனின் மொழியை, அதாவது, சிவாகமத்தைத் தாம் தமிழில் கூறுவதாக உரைக்கிறுர்'[50] திருமூலர் 36 உபதேசங்களையும் 300 மந்திரங்களையும் 3000 செய்யுட்களையும் எழுதியதாகக் கூறுவார்கள்.[51]

வேதம், ஆகமம் இரண்டுமே இறைவன் அருளால் வெளிப்பட்டவை என்பதையும் அவற்றின் தனித்தன்மைகளை யும் தமிழில் முதன் முதலில் எடுத்துக் கூறிய சித்தாந்த ஆசிரியர் திருமூலரே ஆவார்.[52] வேதம் பொதுவானது. ஆகமம் சிறப்பானது. இந்த வேறுபாட்டை மனத்தில் கொண்டு அருள்நந்தி பின்வருமாறு கூறுகிறுர்: 'வேதம்' ஆகமம் என்று இரண்டே நூல்கள். பிற நூல்கள் எல்லாம் இவற்றின் அடிப்படையில் எழுந்தவை. இவ்விரண்டில் வேதம் பொது; ஆகமம் சிறப்பு. சிவாகமங்கள் வேதாந்தத் தின் உட்கருத்தை — அதாவது, சைவசித்தாந்தத்தை, எடுத்துரைக்கின்றன. வேதத்தின் பிறபகுதிகளையே மற்ற நூல்கள் கூறுகின்றன. ஆகவே, ஆகமங்கள் வேதங் களுக்கு அமைந்த விளக்க உரை என்று கொள்ளலாம்'[53] திருமூலர் வேதங்களின் சிறப்பையும் பெருமையையும் கூறுகிறுர்.[54] அவ்வாறே ஆகமங்களின் சிறப்பையும் பெருமையையும் எடுத்து விளக்குகிறுர்.[55] சைவ சித்தாந்த நெறி, வேதம் ஆகமம் இரண்டையுமே அடிப்படையாகக் கொண்டுள்ளது. ஆகமம் என்பது என்ன? அச்சொல்லுக்கு (ஒன்றிலிருந்து) 'வந்தது' என்பது பொருள். இச்சொல். அந்நூல்கள் 'சிவபெருமானிடமிருந்து வந்தன' என்பதைக் குறிக்கின்றன.[56]

சித்தாந்தம் என்னும் சொல்லை முதலில் குறிக்கும் நூலாசிரியர் திருமூலரே ஆவர்.[57] சித்தாந்தத்தை வேதாந்தத்தோடு ஒப்பிட்டும் வேறுபடுத்தியும் காட்டு கிறுர்.[58] அவர் பதி, பசு, பாசம் மூன்றையும் விளக்கி[59] அவை அனுதி[60] என்று குறிக்கிறுர். சிவபெருமான் சுத்த சைவ நெறியையும் (சைவ சித்தாந்த நெறி) பதி பசு பாசம் என்பவற்றின் உண்மைத் தன்மையையும் பாசத்தை

யும் பசுத்துவத்தையும் விளக்குவது பற்றியும் கூறியதாகத் திருமூலர் குறிக்கிருர்(2374). சித்தாந்தத்தின் அடிப்படைக் கொள்கைகளுள் ஒன்ருகிய 36 தத்துவங்களை முதன் முதலில் குறிப்பவர் திருமூலரே ஆவர் (2104). மூன்று அவத்தை[61] (கேவலம், சகலம், சுத்தம்) களைப்[62] பற்றியும் அவற்றிற்குக் காரணமான ஐந்து மலங்களைப் பற்றியும் அவர் கூறுகிருர்.

திருமந்திரம் மிகச் சிறந்ததொரு கருவூலமாகத் திகழ்கிறது. சமய குரவர்கள் அந்த நூலை அறிந்திருந்தனர் என்றும், அந்நூலின் சொல்லாட்சிகள் சிலவற்றைத் தாமும் ஆண்டனர் என்றும் கருதுவதற்கு இடமுண்டு.[63]

திருமந்திரம் அதன் கட்டமைப்பிலும் கருத்துப் போக்கிலும் தனித்தன்மை கொண்டது. நடை மற்ற நூல்களைவிட எளியது. ஆனல் விளங்கிக் கொள்வது கடினமானது. பொன்னையா அவர்கள் கூறுவதுபோல, 'இந்நூல் அறிஞர் பலரை திகைக்க வைத்தது, திகைக்க வைத்துக்கொண்டிருக்கிறது. ஏனெனில் நூல் முழுவதுமே புதிர் மயமாக உள்ளது; இந்த நூலாசிரியர், வாழ்க்கைப் புதிரை அவிழ்க்கப் புதிர்களையே பயன்படுத்துகிருர்.'[64] சைவசித்தாந்தக் கருத்துக்களை எடுத்துக் கூறியதும், ஆகமங்களின் இன்றியமையாமை, அவற்றின் உட்கிடக்கை ஆகியவற்றை எடுத்துரைப்பதும் திருமூலர் செய்த பெருந் தொண்டாகும். அவர் 28 தேவர்களுக்குச் சிவபெருமான் 28 ஆகமங்களை வழங்கியதாகக் கூறுகிருர் (68). ஒன்பது ஆகமங்களின் அடிப்படையில் தமது நூலை அமைத்துள்ளதாக அவர் குறிக்கிருர். அவை, காரணம், காமிகம், வீரம், சிந்தம், வாதுளம், வியாமளம், காலோத்தரம், சுப்பிரம், மகுடம்—என்பன.[65] சைவ சித்தாந்த நெறி 28 ஆகமங்களையும் ஏற்றுக் கொள்கிறது.[66]

திருமந்திரம் 9 பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. ஒவ்வொன்றும் தந்திரம் என வழங்கப்படுகிறது.

முதல் தந்திரம் காரணுகமத்தை அடிப்படையாகக் கொண்டது. யாக்கை நிலையாமை, இளமை நிலையாமை, செல்வம் நிலையாமை, கொல்லாமை, புலால் மறுத்தல்

அன்புடைமை, கல்வி, கேள்வி, கல்லாமை, நடுவு நிலைமை, கள்ளுண்ணாமை முதலிய பலவற்றைப் பற்றிக் கூறுகிறது.

காமிகாகமத்தின் அடிப்படையில் அமைந்த இரண்டாம் தந்திரம் புராணக் கதைகள், இறைவனின் ஐந்தொழில்கள், விஞ்ஞானக் கலர் (ஒருமல முடையோர்), பிரளயாகலர் (இருமலமுடையோர்), சகலர் (மும்மலமுடையோர்), திருக்கோயில், தீர்த்தம், சிவநிந்தை, குருநிந்தை, அடியார்நிந்தை பெரியாரைத் துணைக்கோடல் முதலிய பலவற்றைப்பற்றிக் கூறுகின்றது.

மூன்றாந் தந்திரம் (வீராகமம்), அட்டாங்க யோகம் அட்டமாசித்தி, கலைநிலை, காலச்சக்கரம், கேசரி யோகம் பரியங்க யோகம், அமுரிதாரணை, சந்திர யோகம் போன்றவற்றை விளக்குகிறது. இதனை யோகநூல் பகுதி என்றே குறிக்கலாம்.

நான்காந் தந்திரம் (சிந்தாகமம்) மந்திரங்கள், உபாசனைகள், சக்கரங்கள், ஆதார ஆதேயங்கள் முதலியவற்றைக் கூறுகிறது.

வாதுளாகமத்தின் அடிப்படையிலமைந்த ஐந்தாம் தந்திரம் சைவத்தின் பல வகைகள் (*1394—14*), சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நால்வகை நெறிகள் (*1417—49*), சன்மார்க்கம் சகமார்க்கம், சத்புத்திர மார்க்கம், தாச மார்க்கம் என்னும் நான்கு முறைகள் (*1450—80*), நால்வகை முத்திகள் (சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம்—*1481—87*), மந்தம், மந்ததரம், தீவிரம், தீவிர தரம் என நால்வகையில் அமைந்த சத்திநிபாதம் (*1488—1502*) ஆகிய பலவற்றைப் பற்றிப் பேசுகிறது.

ஆறாந் தந்திரம் (வியாமளாகமம்), சிவகுரு தரிசனம், ஞானம், துறவி, தவம் முதலியவற்றைப் பற்றியும் அவற்றோடு தொடர்புடையவற்றைப் பற்றியும் கூறுகிறது. ‘திரிபுடி

ஞானம்' – அதாவது அறிவான், அறியும் பொருள், அறிவு – என்பதனை அது குறிப்பிடுகிறது (1579—87) திருநீற்றின் பெருமையையும் (1637—39) அது விளக்குகிறது.

காலோத்தராகமத்தைத் தழுவி எழுந்த ஏழாம்தந்திரம் ஆறு அத்துவாக்கள் (1676—82) அண்டம், பிண்டம், சதாசிவம், ஆத்மா, ஞானம், சிவம் என்னும் ஆறு லிங்கங்கள் (1683—1746) திருவருள் (1761—82, 1783—91), சிவபூசை, அடியார் பூசை, குரு பூசை (1792—1830), அடியார் பெருமை (1831—46), முதலியவற்றைப் பற்றி எடுத்துரைக்கிறது. சமாதியைப் பற்றியும் பசுவிலக்கணத்தைப் பற்றியும் ஐம்பொறிகளை அடக்கும் முறை பற்றியும் கூட எடுத்துரைக்கிறது.

எட்டாந் தந்திரம் (சுப்பிராகமம்) உடலமைப்பு. அவத்தை பேதம் (2103—2314), முக்குணங்கள் (2257), பதி, பசு, பாசமிவற்றின் விளக்கம் (2366—85), தத், துவம், அசி என்னும் மூன்று சொற்களின் விளக்கம் (2398—2405), மூன்று துரியங்கள் (2427—34) முதலியவற்றை விளக்குகிறது.

மகுடாகமத்தை ஒட்டி எழுதப்பட்டதும் ஒன்பதாவதும் ஆகிய கடைசித்தந்திரம் குரு, குருதரிசனம், சமாதி, ஐந்தெழுத்து (தூலம், சூக்குமம், அதிசூக்குமம்—2649—73), இறைவனின் கூத்து (2674—2758), ஞானோதயம் (2768—2781), சிவ சொரூப தரிசனம் (2812—20), மறைபொருட் கூற்று (2826—2895), மோன சமாதி (2896—2913), அணைந்தோர் தன்மை (2917—39), இறைவனின் பெருமை (2940—3,000) முதலியவற்றைப் பற்றிப் பேசுகின்றது. இதில் வரும் 'மறைபொருட் கூற்று' என்னும் பகுதி அறிஞர்க்கும் விளங்காத புதிராய் உள்ளது.

திருமூலரை 'நம்பிரான் திருமூலர்' என்று சுந்தரமூர்த்தி குறிப்பிடுகிறார் (7. 39. 5. ). அதே செய்யுளில் 'எம்பிரான் சம்பந்தன்' என்றும் சம்பந்தரைக் குறிப்பிடுகிறார். இவற்றி

லிருந்து தத்துவ நெறிக்குத் திருமூலரையும் இறைவனைப் புகழ்ந்து பாடும் பக்தி நெறிக்குச் சம்பந்தரையும் தலைவராக அவர் கொண்டார் எனல் பொருந்தும்.

திருமூலர் சித்தாந்தத்தையும் வேதாந்தத்தையும் இணைத்துப் பேசுகிறார். அவற்றுக்கிடையே உள்ள ஒற்றுமை வேற்றுமைகளை விளக்குகிறார்.

## பதினோராந் திருமுறை

பதினோராந் திருமுறை ஒரு தொகை நூல் ஆகும். இதில் 40 சிறுநூல்கள் இடம் பெற்றுள்ளன. இந்நூல்கள் சிவனைப் பற்றியும் திருவருட் செயல்கள் பற்றியும், அடியார்கள் பற்றியும், அவர்களின் பெருமை பற்றியும் பேசுகின்றன.

சிவனே மறைகளும்[67] மறைகளின் பொருளும்[68] மறைகளின் ஆசிரியனும்[69] ஆவன். உண்மையும் அவனே. (27. அடி 30). அறிபவனும் அறிவிப்பானும் அறிவும் அறிகின்ற பொருளும் அவனே ஆவன்.[70] ஏழுலகங்களும் அவனில் தோன்றி அவனில் ஒடுங்குகின்றன (9. 46). பிரமன், திருமால் முதலிய பலராகிப் படைத்துக் காத்தழிப்பவன் அவனே (9. 67). 'நாதனாகிய நன்னெறிப் பொருள்' சிவன். வேதமும் வேள்வியும் நீதியும் நிமலனும் ஊழியும் உலகமும் மூவரும் மலையும் கடலும் இன்பமும் துன்பமும் அறிவும் முத்தியும் எல்லாம் அவனேயாம் (13. அடிகள் 50-63). அவன் 'தோற்றம் நிலை ஈறு ஆகிய தொன்மை ஈற்றிடைத் திகழும் முத்தன்; வாக்கும் மனமும் நிறைந்த மறையன்' (14. அடி 71—73). அவன் ஒருவனல்லன்; பலரும் அல்லன்.[71] உலகமெல்லாம் அவனிடைத் தோன்றி அவனிடை ஒடுங்குகின்றன. ஆனால் அவன் ஒன்றினும் தோன்றான். ஒன்றினும் அடங்கான் உலகெங்கும் பரவி நிற்கின்றான்; அவனை அறிந்தவர் எல்லாவற்றையும் அறிவர்; அவனை அறியாதார் தம்மையும் அறியார்.[72] ஆறு சமயங்களும் இறைவனைப் பற்றி மாறுபட்டு நின்றாலும் இறுதியில் அவனையே சென்று

அடையும் (28.17). அவரவர்களது தேவைக்கும் போக்குக்கும் ஏற்ப அவ்வக் கடவுளாகவே அவன் தோன்றுகின்றான்.[73] சிவபெருமான் எங்கும் நிறைந்திருப்பவன் என்பதைக் குறிக்க அவன் எட்டுருவினன் எனக் குறிக்கப் படுகின்றான். ஐந்து பூதங்கள், கதிரவன், நிலா, உயிர் ஆகியஎட்டும் அவையாம்.[74] உயிர்களின் தஞ்சமாகிய இறைவன் பசுபதி எனப்படுகிறான். ஆனால் அவன் ஆணென்றோ பெண்ணென்றோ அலியென்றோ கூறுவதற்கில்லை.[75] ஏனெனில் அடியவர்கள் எவ்வடிவத்தில் காண விரும்புகின்றார்களோ அவ்வடிவத்தில் தோன்றுகிறான்.[76] எல்லா வடிவும் அவன் வடிவேயாம். அவனுக்குப் புறம்பாக வேறு வடிவில்லை (8. அடி 12—16). அவன்

'காணினும் கேட்பினும் கருதினும் களிதரும்
சேணுயர் மருத மாணிக்கத் தீங்கனி' (28. அடி 23—24)
"தோற்றுவ தெல்லாம் தன்னிடைத் தோற்றி
தோற்றம் பிறிதில் தோற்றச் சுடராம்" அவன் (28. அடி 15, 16) அவன் தான் மட்டும் பிறப்பிலியன்று;

'மறவாது வாழ்வாரை மண்ணுலகத்து என்றும்
பிறவாமை காக்கும் பிரானும்' ஆம். (3. 2) பிறவிக்கடல் வினைக்கடலுக்கு வழி வகுக்கிறது.[77] எனவே அவன் பிறவிக்கே வழி இல்லாது செய்கிறான். இறைவன் திருநாமமாகிய ஐந்தெழுத்து பிறவிநோய் தீர்க்கும்.[78] அதே போலச் சிவபெருமானும் 'மன்னும் பிறப்பறுக்கும் மாமருந்து" (21. 37). இடராவது பிறவிக்கடல் மட்டும் அன்று. இறப்பும் அத்தகையதே. ஆகவே 'இடர்பிறப் பிறப்பென்னும் கடற்படாவகையில் காத்தல் நின்கடனே' (27. 7 அடி 28-29; 28. 1 அடி 72—74) என்று பட்டினத்துப் பிள்ளையார் வேண்டுகிறார். ஒரு கல்லை மேலே வீசி எறிந்தால் அது கீழே வந்து விழுகிறது. யார் வீசினாலும் கீழே வந்து விழத் தவறுவதில்லை. அதேபோல இறைவனுடைய பெயரை எப்படிக் கூறினாலும் நன்மை விளைவது திண்ணம்.[79]

பிறப்போடு வினையையும் இறைவன் அளிக்கிருன்; அவனுடைய 'சரணரவிந்தங்கள் சார்ந்ததும் மேலை இருவினையும் வேருடன் அறுகின்றன' (4. 81) இந்த வினை அறக்கடவுள் போல நின்று நன்மை தீமைகளை அழிக்கிறது இதனைச் சிவன் அழிக்கிருன். (23. 90). வினை, தொல்வினை (3. 11), தொல்லை வினை வல்வினை (23. 90. 29. 3), தீவினை (24. 15) எனவும் வழங்கப்படுகிறது. இறைவனுடைய கருணை உலகை ஆள்கிறது. பிறப்பை அழிக்கிறது; அது பாசத்தை ஒழிக்கிறது.[80] "அந்தப் பாசத்தை எவ்வளவு முயன்ருலும் என்னுல் அழிக்க முடியவில்லை''—என்று பட்டினத்துப் பிள்ளையார் பாடுகிருர்.[81] இந்தப் பாசம் 'தீமை' (26. 10) எனவும், வாட்டங்கள் (10. 46) எனவும், வெம்மை நோய் (28. 1 அடி 46) எனவும், பிணி (6. 83) எனவும், நோய் (10. 34) எனவும் குறிக்கப்படுகிறது.

சிவனடியார்களும் சிவனைப் போலவே பெருமை பூண்டவர்கள். பிறப்பிறப் பென்னும் நோயை அழிக்க வல்லவர்கள். திருஞானசம்பந்தருடைய தமிழ்ப் பிறவிக் கடலைக் கடக்க உதவும் தோணியாகும்' என்று நம்பியாண்டார் நம்பி கூறுகிருர்.[82]

இறைவன் அடியவர்க்குத் தொண்டு செய்யத் தொடங்கி விட்டால் மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை என்று பட்டினத்துப் பிள்ளையார் கூறுகின்ருர்.[83] அடியார்கள் மற்ற அடியாரோடு சேர்ந்து இருத்தலையே பெரிதும் விரும்புகிருர்கள்.[84] அடியார் கூட்டம் பிறவிக்குக் காரணமாகிய விருப்பு வெறுப்பற்ற ஒரு நிலைக்கு அழைத்துச் செல்கிறது. (28. 4. அடி 23, 24) அடியார் திருக்கூட்டம் 'மையார் மிடற்றன் அடிமறவா மனம்' ஒன்றையே வேண்டி நிற்கிறது (7. 98.). 'திருவொற்றியூரில் இரந்து உண்டு இருந்தாலும் போதும், மூவுலகம் வேண்டேன்' என்று ஐயடிகள் காடவர்கோன் நாயனர் முழங்குகிருர்.[85] இறைவனை வழிபடுதலும் அடியார்களுக்குத் தொண்டு செய்தலுமே சிவனடியார்க்குள்ள செருக்கு என்பது காரைக்காலம்மையார் திருவாக்கு (4. 79).

அதிரா அடிகள், இளம்பெருமானடிகள், ஐயடிகள் காடவர்கோன் நாயனர், கபிலதேவ நாயனர், கல்லாடதேவ நாயனர், காரைக்காலம்மையார், சேரமான் பெருமாள் நாயனர், நக்கீரதேவ நாயனர், நம்பியாண்டார் நம்பி, பட்டினத்துப் பிள்ளையார், பரணதேவ நாயனர் ஆகிய பதினெருவர் பாடிய 39 நூல்கள் இப்பதினேராந் திருமுறையில் இடம் பெற்றுள்ளன. திருவாலவாயுடையார் பாடிய திருமுகப்பாசுரம் நூலின் முகப்பில் உள்ளது. இத் திருமுறையின் ஆசிரியர்கள் சிவபெருமானுடைய புகழையும் பெருமையையும் சிவனடியார்களுடைய சிறப்பையும் பெருமையையும் பாடியிருக்கிறார்கள். சைவசித்தாந்த நெறியின் கருத்துக்களை எடுத்துக் கூறியிருக்கிறார்கள். சைவ சித்தாந்த சாத்திரத் தலைநூலாகிய சிவஞான போதத்துக்குத் திருவொற்றியூர் ஒருபா ஒருபது அடியெடுத்துக் கொடுத்திருக்கிறது. சிவன் 'அது' 'அவள்' 'அவன்' என நிற்கிறான்; இது எல்லா உயிர்க்கும் பொதுவானவன் என்பதைக் குறிக்கிறது.[86] இது பதினேராந் திருமுறையின் கூற்று. சிவஞானபோதம் இதனை அப்படியே எடுத்துக் கொண்டு 'அவன் அவள் அது எனும் அவை மூவினைமையின்' (சூத்திரம் 1) என்று தொடங்குகிறது.

சிவனடியார்களின் தனிச் சிறப்பையும் பெருமையையும் கூறவந்த நம்பியாண்டார் நம்பி திருத்தொண்டர் திருவந்தாதி பாடினர். இது சுந்தரமூர்த்தி நாயனரின் திருத்தொண்டத் தொகையை ஒட்டி எழுந்தது. இவை இரண்டும் சேக்கிழாரின் திருத்தொண்டர் புராணத்துக்கு மூலநூல்களாய் அமைந்தன. திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் ஆகிய இரண்டு சமயகுரவர்களின் பெருமையை விளக்கிக் கூறும் வகையில் நம்பியாண்டார்நம்பி எட்டு நூல்கள் (சம்பந்தருக்கு ஏழு, அப்பருக்கு ஒன்று) இயற்றினர். அவை இந்தத் திருமுறையில் இடம்பெற்றுள்ளன.

மேற்குறித்த பதினேரு திருமுறைகளும் பன்னிரண்டாந் திருமுறை வெளிவருவதற்குக் காரணமாய் அமைந்தன.

## பன்னிரண்டாந் திருமுறை

பன்னிரண்டாந் திருமுறை பெரியபுராணம் ஆகும். முதலில் அதற்கு அமைந்த பெயர் திருத்தொண்டர் புராணமாம். அநபாய சோழனின் (கி பி. 1113–50) முதலமைச்சராகிய சேக்கிழார் இதனை இயற்றினர். இப் புராணம் தோன்றுவதற்குக் காரணமாகச் சேக்கிழார் புராணம் கூறுவதாவது: 'அரசன் சமண நூலாகிய சீவக சிந்தாமணியைக் கற்பதில் இன்பம் கண்டான். சேக்கிழார் இதனை ஏற்றுக் கொள்ளவில்லை.[87] சமண இலக்கியமாகிய சீவக சிந்தாமணியின் இடத்தை நிரப்பச் சைவ இலக்கியம் ஒன்று வேண்டும் என்று மன்னன் வேண்ட, சேக்கிழார் பெரியபுராணத்தை இயற்றினர்.'[88]

சைவ சமயத்தை எடுத்துக் கூறும் வகையில் தமிழ் நாட்டில் தோன்றிய முதல் சைவக் காப்பியம் பெரியபுராணம் ஆகும். சேக்கிழாருக்கு முன்னதாகப் பல்வேறு இடங்களில் வெவ்வேறு காலங்களில் வாழ்ந்த 63 சிவனடியார்களின் வாழ்க்கை வரலாறுகளை அந்நூல் கூறுகிறது. அவர்கள் பல்வேறு குலங்களைச் சேர்ந்தவர்கள்; வெவ்வேறு விதமான வழிபாட்டு முறைகளை மேற்கொண்டவர்கள்; அவர்களில் 9 தொகை அடியார்களும் உண்டு.[89] இந் நூலுக்குச் சுந்தரமூர்த்தி நாயனர் பாடிய திருத்தொண்டத் தொகையும்[90] நம்பியாண்டார் நம்பி பாடிய திருத்தொண்டர் திருவந்தாதியும்[91] மூல நூல்களாய் அமைந்தன. முன்னதாகத் தொகுக்கப்பட்ட பதினேரு திருமுறைகளும், அடியவர்களைப் பற்றி வழிவழியாக வந்த மரபுவழிச் செய்திகளும், சமய குரவர்களைப் பற்றிக் குறிப்பிடும் தில்லை உலா போன்ற சில சிறு நூல்களும், சமண பௌத்த சமய நூல்களும், நாயன்மார்களின் வாழ்க்கையைக் குறிக்கும் கல்வெட்டுக்கள், சிற்பங்கள், ஓவியங்கள் ஆகியவையும் சேக்கிழாருக்குத் துணை புரிந்தன. இந்நூல் வேருென்றின் மொழிபெயர்ப்பு அன்று; நூலாசிரியர் காலத்தில் நிகழ்ந்த ஒரு நிகழ்ச்சியைப் பற்றிக் கூறுவதும் அல்ல.[92] சேக்கிழார் வாழ்ந்த பன்னிரண்-

டாம் நூற்ருண்டு, அதற்கு முந்தைய நூற்ருண்டுகள் ஆகிய வற்றின் தமிழக வரலாற்றைப் பெரியபுராணம் விளக்குகிறது. இந்நூலின் உதவிகொண்டே அப்பருடைய காலத்தை அறுதியிட்டுச் சொல்ல முடிகிறது.[93] சேக்கிழார் ஒரு பேரறிஞர்; ஆழ்ந்த சமயப் பற்றுள்ளவர். ஆகவே தான் 'இந் நூலில் இலக்கியச்சுவை, வரலாற்றுணர்வு, சைவ சித்தாந்த மெய்யறிவு ஆகியன இணைந்து வரக்காண்கிருேம்.[94]

சாதாரண மக்களின் மனத்தைக் கவர்ந்திருந்த பௌத்த சமயத்துச் சாதகக் கதைகள், சமண சமயத்துச் சீவக சிந்தாமணி ஆகியவற்றுக்கு இணையாக இப்படியொரு நூல் சைவர்களுக்குக் கிடைத்தது வரப்பிரசாதமாகும். 'பெரிய புராணத்தின் செல்வாக்கு தென்னிந்தியாவில் மிகப் பரவியிருந்தது; அது மேலும் பரவி வருகிறது' என்று டாக்டர் போப் குறிப்பிடுகிருர்.[95] அது, பிற சமயங்கள் பரவுவதை மட்டும் தடுத்து நிறுத்தவில்லை; சைவசமயம் பரவுவதற்கும் வழி ஏற்படுத்திக் கொடுத்தது.[96] இந்த நூலின் அழகும் இன்றியமையாமையும் சந்தான குரவர்களின் நான்காமவரான உமாபதி சிவத்தின் மனத்தைப் பெரிதும் கவர்ந்தன. எனவேதான், சேக்கிழாருடைய விரிவான வாழ்க்கையையும் அவரது நூலின் வரலாற்றையும் பெருமையையும் 'சேக்கிழார் புராணம்' என்னும் சிறு நூலில் அவர் அமைத்துத் தந்தார்.

பெரிய புராணம் பிற சமயக்கருத்துக்கள் வளருவதையும் பரவுவதையும் தடுத்து நிறுத்தியதோடு அமையாமல், சைவ சமயத்துக்கு ஓர் உறுதியான அடிப்படையை அமைத்துக் கொடுத்து விட்டது. பெரிய புராணத்தில் காட்டப்படும் சைவசமயம் வாழ்க்கை நெறியாகவே அமைந்து விட்டது. நாயன்மார்களின் வாழ்க்கை ஒரு காப்பியம் பாடுவதற்கு ஏற்றதாகவோ, தம்முள் தொடர்புடையதாகவோ இருக்கவில்லை. ஆனல், சேக்கிழாரின் மேதையும் கற்பனை வளமும் சேர்ந்து அதனை ஓர் அழகிய காப்பியமாக்கி, பிற திருமுறைகளுக்கும் மற்றக் காப்பியங்களுக்கும் இடையில் ஓர் உயர்ந்த இடத்தைப் பெற்றுத் திகழ்கிறது.

பெரிய புராணத்தில் குறிக்கப்படும் சில நாயன்மார்கள் களவு, கொலை போன்ற செயல்களைச் செய்திருக்கின்றனர். அவை எவ்வாறு நற்செயல்களாகும்? சேக்கிழார், சிவதருமம் பசுதருமம் என்னும் இரண்டு வகை தருமங்களை எடுத்துரைக்கிறார். சிவ தருமத்தின் முன்னால் பசுதருமம் நிற்பதில்லை. எனவே வழக்காற்றில் தீயவையாகக் கருதப்படும் இச் செயல்கள் பாவச் செயல்களாகமாட்டா. பிற்காலத்தில் சைவசித்தாந்த நூல்கள் இதனை விரிவாக எடுத்து விளக்குகின்றன.

சேக்கிழார் தத்துவங்களைப் பற்றிக் குறிப்பிட்டு, அவை இறைவனிடம் அழைத்துச் செல்கின்றன என்று கூறுகிறார். 'பேணு தத்துவங்கள் என்னும் பெருகு சோபானம் ஏறி' (10. 103) சத்தியை (திருவருளை) ஆணை என்னும் சொல்லால் ('ஆணையாம் சிவத்தைச்சார' – மேற்படி, 10. 103.) என்று குறிப்பிடுகிறார். இச் சொல்லை இதே கருத்தில் மெய்கண்டாரும் வழங்குகின்றார். 'போக்கு வரவு புரிய ஆணையின்' (சிவஞானபோதம்) தேவார ஆசிரியர்களைப் போலவே சேக்கிழாரும் ஆணவத்தை 'இருள்' என்கிறார் (நீள் இருள் நீங்க நின்றார் 10. 28.). அவர், மாயை, இருவினை, மும்மலம் ஆகியவற்றைக் கூறி, அவை இறைவன் திருவருளால் பயனற்றுப் போகின்றன என்று கூறுகிறார்.[97]

திருஞானசம்பந்தருடைய பாடல்கள் திருமறைகளே எனவும், அவர் எழுதா மறையைத் தமிழில் பாடினார் எனவும் சேக்கிழார் முதன் முதலாக எடுத்துரைக்கிறார்.[98] அதேபோல, எழுதாக் கிளவியாகிய வேதங்களை அளித்தவன் சிவபெருமான் என்றும் அவர் குறிப்பிடுகிறார்.[99]

பெரியபுராணத்தில் தீட்டிக் காட்டிய அடியார்களின் வாழ்க்கை பிற்காலத்தில் சைவசித்தாந்த நெறியின் இலட்சியமாக அமைந்தது. பெரியபுராணத்து வரலாற்று ஓவியங்கள் சைவசித்தாந்த சாத்திரத்தின் இலட்சிய ஓவியங்களாக உருமாறின. எனவே பெரியபுராணம் சைவ

சமயத்திற்கு ஒரு கட்டுக்கோப்பைத் தந்தது எனல் மிகை யாகாது. அதேபோல, பெரியபுராணத்தில் காணப்படும் கண்கூடான சமயநெறியே சைவசமயமாக விரிந்தது என்பதும் மிகையாகாது.

இதுவரை திருமுறை (தோத்திர) நூல்களில் சைவ சித்தாந்த நெறியின் வித்துக்கள் அமைந்திருத்தலைக் கண்டோம். இனி, சாத்திர நூல்களைக் காணலாம்.

### அடிக்குறிப்புகள்

1. 'அரன் ஆகமம்', 3. 79. 6; 'ஆகமச் செல்வனர்', 3. 57. 10; 'அண்டர்தமக்காக ஆகமநூல் மொழியும் ஆதியை', 7. 84. 8; 'ஆகமங்கள் அறிவார்.........உத்தமனே', 7. 100. 8; 'ஆகம சீலர்க்கு அருள்நல்கும் பெருமானே', 7. 96. 6.

2. 'வினையாததொர் பரிசில்வரு பசபாச வேதனை ஒண்டளையாயின" 1. 12. 3; 'அறுவினையும்' - 1. 5. 7; 1. 19. 9; 1. 60. 2.

3. 'மலம் அறுவகை மனம் நினைதரும்' - 1. 22. 4; 'இழுகு மலம் அழியும் வகை' 3. 67. 12; 'நம்மலம் அறுப்பர் போலும்' 4. 70. 7; 'மலம் தங்கிய பாசப் பிறப்பு', 7. 82. 6.

4. 'கட்டு மயக்கம் அறுத்தவர்', 7. 0. 7.

5. 'அஞ்ஞானத்தால் உறுவது பந்தம்; அஞ்ஞானம் விடாப்பந்தமறு முத்தியாகும்......இறைவனடி ஞானமே ஞானமென்பர்' - சிவஞான சித்தியார், சுபக்கம், 279.

6. 'ஊனத்திருள் நீங்கிட வேண்டின், ஞானப்பொருள் கொண்டடி பேணும்' — 1. 38. 3;

'இருள் அற நோக்கமாட்டாக் கொத்தையீர்' - 4. 69. 1;

'இருள் தரு துன்பப்படலம் மறைப்ப, அருள்தரு ஐயாறன் அடித்தலமே' — 4. 92. 4.

7. 'அவனருளே கண்ணாகக் காணின் அல்லால் இப்படியன்......... காட்டொணதே' - 6. 97. 10; 'காண்பாரார் கண்ணுதலே நீ காட்டாக்காலே' - 6. 95. 3.

8. 'பசுபதி தானுகும்' — 1. 76. 3.

9. 'பாசவேதனை', 1. 12. 3; 'பாசமதறுத்து,' 3. 79. 10.

10. 'அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு' — 1. 1.

11. 'அகரமுதலானை' — 1. 88. 5;

'ஆனத்தின் முன்னெழுத்தாய் நின்ருர் போலும்' – 6. 28. 1.

'அகரம் முதலின் எழுத்தாகி நின்ருய்' — 7. 3. 7;

பகவத்கீதையும் இதேமுறையில் பேசுகிறது; "அக்ஷராணும் அகாரோஸ்மி" —10. 33.

12. 'ஈருய் முதல் ஒன்ருய்.........வேருய் உடனுனுன் இடம் வீழிம் மிழலையே', 1. 12. 2; உபநிடதங்களில் கூறப்படும் அத்துவைதத்தை மிகச் சிறப்பாக விளக்கும் இக்கருத்தை முதலில் ஏற்று வெளிப்படுத்திய மெய்கண்ட சாத்திரம் திருக்களிற்றுப்படியார் ஆகும் (செய்யுள் 86). மெய்கண்டார், அருள்நந்தி, உமாபதி ஆகியோரும் இதைப் பின்பற்றினுர்கள்.

13. அட்டமூர்த்தி 2. 117. 8; அட்டமூர்த்தியனே 3. 51. 4; எட்டாந் திருமூர்த்தி 2. 39. 3; எட்டிசைந்தமூர்த்தி 3. 52. 2; அட்டமூர்த்தி 4. 78. 10; 5. 57. 6; 5. 10. 3; 5. 49. 8; 5. 54. 10; அட்டமா உருவினுனே 4. 57. 3; அட்டன் 7. 80. 8; எட்டானமூர்த்தியை 7. 30. 3.

14. 1. 53. 2; 2. 102. 5; 1. 11. 4; 2. 48. 3; 3. 105. 7; 4. 63. 7; 6. 94. 1; 4. 48. 1; 5. 96. 8; 6. 46. 1; 4. 54. 8; 6. 50. 1; 6. 75. 1; 6. 4. 3; 7. 9. 3; 7. 27. 8; 7. 40. 4; 7. 63. 2; இறைவனின் எட்டு வடிவங்களை முதன் முதலாகக் கூறும் தமிழ்நூல் மணிமேகலை ஆகும் (27. 86–95)

15. பஞ்சபிரம அட்டமூர்த்தம் உரைத்த அத்தியாயம்,8. உயிரை 'மைந்தன்' என்று திருவாசகம் குறிப்பிடுகிறது. (திருத்தோணேக்கம், 5);

16. திருமுறை கண்ட புராண ஆசிரியர் எட்டாந்திருமுறை பற்றிக் குறிக்கும்போது திருவாசகத்தோடு திருக்கோவையாரைக் குறிப்பிடவில்லை (செய்யுள் 26; இலக்கிய வரலாறு, பகுதி2, பக்கம் 276, பார்க்க) கோவையும் திருவாசகமும் இணைத்தே கூறப்பட்டாலும், கோவையார் பிற திருமுறைகளோடு சேர்த்துப் பாராயணம் செய்யப்படுவதில்லை என்பதிலிருந்து அது தனி நூலாகவே கருதப்பட்டு வந்தது, வருகிறது என்பது புலனுகும்.

கோவை நூல்களுள் திருக்கோவையார் மிகச் சிறந்ததும் பெரியதும் ஆகும். 'ஐயமேதேனும் எழுந்தால் தொல்காப்பியம், திருக்குறள்' திருக்கோவையார் இவைமூன்றில் தெளிவு பெறலாம். இவற்றில் தெளிவு காணவிட்டால் பிறகு வடமொழி நூல்களை ஆராயலாம்' என்பதாக இலக்கணக் கொத்திலுள்ள வெண்பா ஒன்று கூறுகிறது. திருக்கோவையார் ஓர் அகத்துறை நூல். சைவசித்தாந்தத்திலுள்ள கருத்துக்களைப் பெரிதும் எடுத்து நுவல்கிறது.

17. 'வேதம் ஓதின் விழிநீர் பெருக்கி
நெஞ்சம் நெக்குருகி நிற்பவர்க் காண்கிலேம்
திருவாசகம் இங்கு ஒருகால் ஓதின்
கருங்கல் மனமும் கரைந்துகக் கண்கள்
தொடுமணற் கேணியின் சுரந்துநீர் பாய'

— நால்வர் நான்மணிமாலை, செய்யுள் 1

18. மெய்தானரும்பி விதிர் விதிர்த்து......கண்ணீர்ததும்பி வெதும்பி;
— திருச்சதகம், 1;

'வீதிவாய்க் கேட்டலுமே விம்மி விம்மி மெய்ம்மறந்து;
– திருவெம்பாவை, 1,

'பாடிக்கசிந் துள்ளம் உள்நெக்குருக' – மேற்படி 4;
'தென்னு என்னு முன்னம் தீசேர்மெழுகொப்பாய்' –மேற்படி, 7;
'நீர் ஒருகால் ஓவா நெடுந்தாரை கண்பனிப்ப' — மேற்படி, 15;
'தொழுகையர் அழுகையர் துவள்கையர்'

—திருப்பள்ளியெழுச்சி, 4,

'சொரிந்த கண்ணீர் சொரிய உண்ணீர் உரோமம் சிலிர்ப்ப'
—புணர்ச்சிப்பத்து, 6;

'கண்டங்கணைய கண்ணீர் அருவி பாய' — மேற்படி, 7;
'நக்கும் அழுதும் தொழுதும் வாழ்த்தி' — மேற்படி, 8;
'கருணையே நோக்கிக் கசிந்துளம் உருகிக் கலந்துநான் வாழுமாறறியாமருளனேன்' — வாழாப்பத்து, 7; வழிபடும் பொழுது விழிநீர் பெருக்கிஅழுதலைச் சம்பந்தரும் குறிக்கிறார் :

'இசைபாட விம்மி அழுமாறு வல்லார்' – 2. 20. 1; அழுதுற்றுறும் அடியார்கள் 2. 61. 6;'காதலாகிக் கசிந்து கண்ணீர்மல்கி ஓதுவார்'– 3. 49. 1; மேலும் 2. 20. 1; 3. 91. 5; 2. 53. 4; 2. 39. 11; அப்பர், 'மிக்க அன்போடு அழுவார்' 4. 92. 5; 'அழுது காமுற்று அரற்றுகின்றாரையும்' — 5. 21. 8.

19. இதனல் பிற சமயாசாரியர்கள் ஞான நெறியினைச் சேராதவர்கள் என்று பொருள்படாது. பின்னர் வந்த சாத்திரங்கள், இருவினை ஒப்பு (நல்வினையும், தீவினையும் உயிரைத் தாக்காத நிலை) ஏற்படும் பொழுது இறைவன் குருவடிவில் வந்து அருள்புரிகிருன் என்று கூறுகின்றன. மாணிக்கவாசகர் வாழ்க்கையில் இது தெளிவாகத் தெரிவதால் அதனை ஞான நெறி என்று குறிப்பிட்டனர். சம்பந்தர் கூறியதுபோல இறைவன் அடியவர்களை ஆட்கொள்ளுவதற்கு எந்தவிதமான குறிப்பிட்ட முறையும் கிடையாது. "ஆட்பாலவர்க்கு அருளும் வண்ணமும் ஆதிமாண்பும் கேட்பான் புகில் அளவில்லை கிளக்கவேண்டா" — 3. 54. 4.

20. 'மன்னுமாமலை சொன்ன ஆகமம் தோற்றுவித்தருளியும்' – கீர்த்தித்திரு அகவல், அடிகள் 10.

'மற்றவை தம்மை......ஐம்முகங்களால் பணித்தருளியும்' – மேற்படி, அடிகள் 19-20.

21. 'ஆகமமாகி நின்றண்ணிப்பான்' — சிவபுராணம், அடி 4;

22. மேற்படி

23. 'மூலமாகிய மும்மல மறுக்கும் தூயமேனி' – கீர்த்தித்திருஅகவல், அடி, 111;

'உள்ளமல மூன்றும் மாய உகுபெருந்தேன்' – பண்டாய நான்மறை, 2;

'மும்மை மலமறுவித்து முதலாய முதல்வன்' – அச்சோப்பதிகம், 9;
'சித்த மலமறுவித்துச் சிவமாக்கி எனையாண்ட அத்தன்' மேற்படி, 2;

'மயக்கமாயதோர் மும்மலப் பழவல்வினைக்குள் அழுந்தவும், துயக்கறுத்து எனை ஆண்டுகொண்டு' — திருக்கழுக்குன்றப் பதிகம், 7.

24. 'மலங்களைந்தாற் சுழல்வன்' – நீத்தல் விண்ணப்பம், 29; அவரை ஒட்டி அருணந்தி சிவாசாரியரும் (சிவஞான சித்தியார் சுபக்கம், 177) உமாபதிசிவமும் (சிவப்பிரகாசம், 32) ஐந்து மலங்களைப் பற்றிக் குறிப்பிடுகின்றனர்.

25. 'நள்ளும் கீழுளும் மேலுளும் யாவுளும்
எள்ளும் எண்ணெயும்போல்நின்ற ஈசனே' – திருச்சதகம், 46.

26. கோயில் திருப்பதிகம், 6.

27. திருவெம்பாவை, 18; திருச்சதகம், 15.

28. 'பித்தனே எல்லா உயிருமாய்த் தழைத்துக் குழைத்து அவை அல்லவாய் நிற்கும் எத்தனே' — பிடித்தபத்து, 8.

29. கோயில் திருப்பதிகம், 7.

30. திருத்தோணேக்கம், 5

31. 'ஒருவன் என்று ஏத்தநின்ற நளிர்மதிச் சடையன் என்கோ;
— திருவாய்மொழி, 3. 4. 8.

'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்' - திருமந்திரம், 2026.

32. 'வல்வினையேன் தன்னை மறைந்திட மூடிய மாய இருளை'
— சிவபுராணம், அடி 50 – 51;

'என்னுடை இருளை ஏறத் துரந்தும்' — கீர்த்தித் திருஅகவல், அடி 6;

'அஞ்ஞானம் தன்னை அகல்விக்கும் நல்லறிவே'
— சிவபுராணம், அடி 64;

'கழிவில் கருணையைக் காட்டிக் கடியவினை அகற்றிப்
பழமலம் பற்றறுத்து ஆண்டவன்' — திருப்பாண்டிப்பதிகம், 8;
'பாசவேரறுக்கும் பழம்பொருள் தன்னை' — பிடித்தபத்து, 7.
திருக்கோவையாரும் இதை எடுத்துக் கூறுகிறது:
'பாசத்தனை அறுத்து ஆண்டு கொண்டான்' — 115.

33. அச்சோப் பதிகம், 1,

34. 'பத்திநெறி அறிவித்துப் பழவினைகள் பாறும் வண்ணம்
சித்தமலம் அறுவித்து' — அச்சோப்பதிகம், 1;
'வாங்கிவினை மலமறுத்து வான்கருணை தந்தானை'
—கண்டபத்து, 9;

'கழிவில் கருணை காட்டிக் கடியவினை அகற்றிப்
பழமலம் பற்றறுத் தாண்டவன்' - திருப்பாண்டிப் பதிகம், 8.

35. 'தந்ததுன் தன்னைக் கொண்டது என்தன்னை',
—கோயில்திருப்பதிகம், 10

'தன்னைத் தந்த என்னாரமுதை' — புணர்ச்சிப்பத்து, 1

36. 'உணக்கி லாததோர் வித்துமேல் விளையாமல்
என்வினை ஒத்தபின்' — திருக்கழுக்குன்றப்பதிகம் 1;

37. 'அவன்எனை ஆட்கொண்ட ருளினன் காண்க'– திரு அண்டப் பகுதி, அடி 63;

'சிவனெம் பிரான்என்னை ஆண்டுகொண்டான்' – திருச்சதகம், 9;
'என்னை நீ ஆட்கொண்ட வண்ணம்தானே' — மேற்படி, 24;
'கட்ட றுத்துஎனை ஆண்டு' — மேற்படி, 49;
'என்னையும்தன் இன்னருளால் இப்பிறவி ஆட்கொண்டு
இனிப்பிறவா மேகாத்து' — திருஅம்மானை, 12;
'உருநாம் அறியவோர் அந்தணனாய் ஆண்டுகொண்டான்'
— திருத்தெள்ளேணம், 1;
'செல்வன் பாரிடைப் பாதங்கள்காட்டிப் பாசமறுத்து எனைஆண்ட'
— குயிற்பத்து, 9;

'அருநரகிடை விழ்வதற்கு ஒருப்படுகின்றேனை அத்தன்
ஆண்டுதன் அடியரிற் கூட்டிய அதிசயம் கண்டாமே'
அதிசயப்பத்து 4; இப்பதிகம் முழுவதும் இதையே வியந்து பாடுகிறது.

38. தென்னிந்தியாவில், இப்பாடல்களின் செல்வாக்கு, கிறித்தவர்களிடையே தேவகீதங்களுக்குள்ள செல்வாக்கைப் போன்றதாம். தமிழர்களிடையே, மிகப்பரந்த பெரும்பான்மை மக்களின் மனத்தை, இப்பாடல்கள், வழிவழியாக, உருக்கி வந்திருக்கின்றன. — ஜியூ. போப், முற்கூறியநூல், ப. XXIV.

39. பேர்கள் ஆயிரம் ஆயிரம் பிதற்றி–செய்யுள், 21.
திருவாசகமும் இவ்வாறே கூறுகின்றது; 'ஒரு நாமம் ஓருருவம் ஒன்றுமில்லாற்கு ஆயிரம் திருநாமம் பாடிநாம் தெள்ளேணம் கொட்டாமோ'
— திருத்தெள்ளேணம், 1.

40. 'உறவாகிய யோகமும் போகமுமாய்' – திருத்தெள்ளேணம், 1
இராமனும் சீதையும் மணந்து கொண்டதைக் குறிப்பிட வந்த கம்பர் இதே தொடரைத் தருகிறார். 'ஒன்றிய போகமும் யோகமும் ஒப்பார்'
—பாலகாண்டம், கடிமணப்படலம், 85.

41. 'முன்னை என்பாசம் முழுவதும் அகல' – 119;
'பந்த பாசமெலாமறப் பசுபாசம் நீக்கிய பன்முனிவர்'
— திருவாலி அமுதனார், 219

42. 'பசுநூல் கற்கும் பிச்சரை' – 43

43. 'இறைவனை என்கதியை என்னுளே உயிர்ப்பாகி நின்றமறைவனை மண்ணும் விண்ணும் மதிவான் சுடராய் மலிந்த............இறையை' – 251

44. 'சிவமலாது அவமும் அறிவரோ அறிவுடையோரே' – 50

45. கருதுமா கருதே, 3; நினையுமா நினையே, 11;
விளம்புமா விளம்பே 1; இப்பதிகத்திலுள்ள 11 பாடல்களும் இவ்வாறே கூறுகின்றன.

46. மெய்கண்டார் இதனைப் பத்தாஞ் சூத்திரத்தில் விளக்குகின்றார்; உமாபதி சிவம் இதனைத் 'தன் பணி நீத்தல்' என்று குறிப்பிடுகிறார், (சிவப்பிரகாசம், 71)

47. 'பந்தமும்பரிவும் தெரிபொருட் பனுவல் படிவழிச் சென்று சென்று ஏறி, சிந்தையும் தானும் கலந்ததோர் கலவி............பல்லூழிகள் உடனாய்............நுனுகி உள் கலந்தோன் மருவிடம் திருவிடை மருதே'—177

48. 'சிந்தை செய்தாகமம் செப்பலுற்றேனே', 135.

49. 'என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாகத் தமிழ் செய் யுமாறே' — 152.

50. 'செப்பும் சிவாகமம்'— 136

51. திருமந்திரம், முன்னுரை, ப. 20.

52. 'வேதமோ டாகமம் மெய்யாம் இறைவன் நூல், ஓதும் பொதுவும் சிறப்பும் என்றுள்ளன, நாதன் உரையவை நாடில் இரண்டந்தம், பேதம தென்பர் பெரியோர்க் கபேதமே' — 2358.

53. சிவஞான சித்தியார், சுபக்கம், 267; சிவஞான முனிவர் உரை. வேதத்துக்கும் ஆகமத்துக்கும் உள்ள தொடர்பைப் பழைய பாடல் ஒன்று குறிப்பதாவது; 'வேதம் பசு அதன்பால் மெய்யாகமம்'

54. திருமந்திரம், 61-67.

55. மேற்படி, 68-74.

56. 'ஆகமம்' என்பது இறைவனிடமிருந்து வந்தது என்பதைக் குறிக்கும். 'ஆ' என்பது அளவு, அறிவு, மரபு என்பதாகும்; 'கம' வருதல், போதல், இறைவனை உணர்தல் என்பதைக் குறிக்கும். அதாவது இறைவனிடமிருந்து வந்த இது இறைவனை உணர்வதற்கு வழிகாட்டும்' — முத்தி நிச்சயப் பேருரை, 1946, முன்னுரை, ப. 25; ஆகமம் என்னும் சொல்லின் பொருள், அது வெளியிலிருந்து வந்தது. அதாவது வேறோர் இனத்தாரிடமிருந்து பெறப்பட்டது என்பதையும் குறிக்கிறது; அந்த இனம் தமிழினமாகவும் இருக்கலாம்; அல்லது ஆகமங்கள் முதலில் தமிழில் எழுதப்பட்டு, பிறகு வடமொழியில் பெயர்க்கப் பட்டிருக்கலாம் எனவும் பொருள்படும். இவ்வாறு சிலர் கருதுகின்றனர் — பொன்னையா; முற்கூறிய நூல், பக்கம் 7.

மற்றொரு விளக்கமாவது; 'ஆ' என்பது பாசம்; 'க' என்பது பசு; 'ம' என்பது பதி. எனவே ஆகமம் என்பது பதி பசு பாசம் மூன்றையும் பற்றிக் கூறுகிறது.

பிறிதொரு விளக்கம்; 'ஆ' என்பது சிவஞானம்; 'க' என்பது மோட்சம்; 'ம' என்பது மலத்தை ஒழித்தல்—பரஞ்சோதி, The Saiva Siddhanta, 1964, பக். 16, 17.

57. திருமந்திரம் - 2329, 2331, 2343, 2344, 2346, 2354 - 56, 2361, 2363-66.

58. மேற்படி நூல் - 2329, 2331, 2343, 2344, 2346, 2354-56; 2361, 2363, 2365.

59. மேற்படி - 2366, 2367, 2368, 2371-74, 2380-84, 159.

60. பதியினைப் போல் 'பசு பாசம் அனுதி' — 159; அறிவறி வென்ற அறிவு மனுதி, அறிவுக் கறிவாம் பதியு மனுதி, அறிவினைக் கட்டிய பாசமனுதி — 2366.

61. மேற்படி — 2187, 2189, 2191, 2193 — 2200, 2201 — 14

62. 'மாரு மலமைந்தாம்' — 2121.

63. Development of Saivism in South India, P. 96.

64. முற்கூறிய நூல் — பக்கம் 50; 'மறை பொருட் கூற்று' என்னும்

65. பகுதி முழுவதும் (2826 — 95) இவ்வாறே உள்ளது.

65. மேற்படி — 73; இந்தச் செய்யுளும் வேறு பலவும் இடைச் செருகல்கள் என்பதாக மறைமலையடிகள் குறிப்பிடுகின்ருர். வியாமளமும், காலோத்தரமும் இப்போது கிடைக்கும் 28 ஆகமங்களில் சேர்க்கப்பட்டிருக்கவில்லை. மேலும் 28 ஆகமங்களும் சைவ சித்தாந்தத்தைப் பற்றியே குறிக்கின்றன என்கிருர் திருமூலர். ஆனுல் காமிகமும் காரணமும் சிற்பத்தைப் பற்றியே பேசுகின்றன — மாணிக்கவாசகர் வரலாறும் காலமும், ப. 349 — 51.

66. சர்வஞானேத்தராகமம் — பொன்னையா, முற்கூறிய நூல். முன்னுரை, ப. 2; பரஞ்சோதி, முற்கூறிய நூல், ப. 16,

67. 3. 4; 13. அடி 50; 22.78.

68. 3. 4; 10. 19; 13. அடி 17, 31; 27. 3.

69. 6. 19; 6. 28; 10. 22; 22. 68; 23. 31.

70. 'அறிவானும் தானே அறிவிப்பான் தானே
அறிவாய் அறிகின்ருன் தானே அறிகின்ற
மெய்ப்பொருளும் தானே' – 4. 20

71. 'உருவு பலகொண்டு ஒருவராய் நின்ருர்
உருவு பலவாம் ஒருவர் உருவு
பலவல்ல ஒன்றல்ல பைஞ்ஞீலி மேயார்
பலவல்ல ஒன்ரும் பகர்' (23. 93)

72. நின்னைக் காண மாந்தர் தன்னையும் காணத் தன்மையோரே
— 28. அடி 34, 35.

73. 'பிணங்கு மாந்தர் பெற்றிமை நோக்கி
அணங்கிய அவ்வவர்க்கு அவ்வவையாகி' — 30. 2. அடி 13, 14.

74. 4. 21; 6. 15; 22. 79; 29. 34; 30. 6 அடி 13, 14.

75. 'பெண் ஆண் அலியென்று பேச்சுக் கடந்த பெருவெளியை'
— 23. 9.

76. 'எக்கோலத்து எவ்வுருவாய் எத்தவங்கள் செய்வார்க்கும்
அக்கோலத்து அவ்வுருவே ஆம்' — 4. 33;
'என் வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம் ஆகியஈசனுக்கே'
— 6.12.

77. 'வினைக் கடலை ஆக்குவிக்கும் மீளாப் பிறவிக்
கனைக் கடலை நீந்தினேம்' — 4. 16;
'பிறவி கொடாத ஏகம்பர்'— 29. 80; 29. 25.

78. 'தீய பிறவி நோய் தீர்க்குமே ............ எம்பெருமான்
ஓரஞ் செழுத்து' — 9. 39.

79. 28. 19. அடி 78 — 81.

80. 9. 17. இது பாசமலம் எனவும் வழங்கப்படுகிறது. (23.60)

81. 'கட்டிய நீயே அவிழ்க்கின் அல்லது எட்டனையாயினும் யான்
அவிழ்க்கறியேன்' — திருவொற்றியூர், ஒருபா ஒருபஃது
9. அடி 15, 16.

82. 'பிறவியெனும் பொல்லாப் பெருங்கடலை நீந்தத்
துறவியெனும் தோற்ருேணி கண்டீர் ............
சம்பந்தன் தன்மாலை ஞானத் தமிழ்' — ஆளுடைய பிள்ளையார்
திரு மும்மணிக் கோவை, 11.

83. 'எனக்கென் இனிநான் அவன்தன் தொண்டர் தொண்டர்க்குத்
தொழும்பாய்த் திரியத் தொடங்கினனே' — 26. 38.

84. 'ஆண்டகை குரிசில் நின்னடி யாரொடும் குழுமி'— 26. 36. அடி 37, 38; இக்கருத்தைத் திருமுறையாசிரியர்கள் பல்வேறு வகையாகக் கூறியிருக்கிறார்கள். சாத்திரங்களும் இதைப் பற்றிப் பேசுகின்றன. 'அன்பரொடு மரீஇ' (சிவஞானபோதம், 2) 'அடியவரிடம் அன்பில்லாதவர் ஈசனிடமும் அன்பில்லாதவர்களாம்' என்று சிவஞானசித்தியார் (சுபக்கம் 323) கூறுகிறது.

85. 'தஞ்சாக மூவுலகு மாண்டு தலையளித்திட்டு எஞ்சாமைபெற்றிடினும் யான் வேண்டேன், நஞ்சம் கரந்துண்ட கண்டர்தம் ஒற்றியூர் பற்றி இரந்துண்டிருக்கப் பெறின்' — க்ஷேத்திரத் திருவெண்பா, 22.

86. 'அது அவள் அவன் என நின்றமை யார்க்கும்
பொதுநிலை யான்என உணர்த்திய பொருளே' — 6. அடி 5, 6.

87. "கடவுளை மறுக்கும் இக்கொள்கைக்கு எதிரான பலகாரணங்கள் இருந்தன. எனினும் இது சைவக் கொள்கைகளுக்கு மாறானது என்பதே முக்கிய காரணம்." — G. U. Pope, Tiruvacagam, P. Vol. IV.

88. செய்யுள், 20—23.

89. 1. சிதம்பரத்தில் நடராஜருக்கு வழிபாடியற்றும் தில்லைவாழ் அந்தணர். அவர்கள் மூவாயிரவர் ஆவர். 2. பொய்யடிமை இல்லாத புலவர்கள். 3. இறைவனை எப்போதும் மறவாத சிந்தையர் (பத்தராய்ப் பணிவார்). 4. அவன் புகழையே பாடுபவர்கள் (பரமனையே பாடுவார்). 5. சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார். 6. திருவாரூர்ப் பிறந்தார். 7. திருக்கோயிலில் வழிபாடு செய்கிறவர்கள் (முப்போதும் திருமேனி தீண்டுகிறவர்கள்). 8. முழுநீறு பூசிய முனிவர்கள். 9. சுந்தர மூர்த்தி நாயனாருக்கு முன்னும் பின்னுமாக வாழ்ந்தவர்கள்; வெவ்வேறு நாடுகளில் வாழ்ந்தவர்கள் ஆகிய அப்பாலும் அடிச்சார்ந்தார்.

90. இதிலுள்ள பதினொரு பாடல்களும் சிவனடியார்களின் பெருமையைக் கூறுகின்றன. இவர்கள் ஒவ்வொருவருக்கும் தாம் அடிமை என்பதாகச் சுந்தரமூர்த்தி குறிப்பிடுகிறார்.

91. திருத்தொண்டத் தொகையில் கூறப்பட்ட கருத்துக்களுக்கு விரிவான வடிவம் தரும்வகையில் இந்நூல் அமைந்துள்ளது. ஒவ்வோர் அடியாருக்கும் ஒரு செய்யுளாக (சிலருக்கு இரண்டுமுண்டு) 87 செய்யுள்களை உடையது. ஒவ்வோர் அடியவருடைய வாழ்க்கையின் அடிப்படையையும் தெளிவாக இந்நூல் எடுத்துரைக்கிறது.

92. Development of Saivism in South India, — முற்கூறியநூல், ப. 257.

93. மேற்படி, ப. 258.

94. மேற்படி

95. முற்கூறியநூல் — பக்கம் XLIV

96. எம். எஸ். பூரணலிங்கம் பிள்ளை, Tamil Literature பக். 203—205.

97. 'முதல்வனுர் அருள்நோக்கால் இன்புறு வேதகத்து இரும்பு பொன்னுனற் போல் யாக்கைத் தன்பரிசும் வினை இரண்டும் சாருமலம் மூன்றும் அற', — மேற்படி, 154.

98. 'வண்டமிழால் எழுது மறை மொழிந்தபிரான்' — 21. 180.

99. 'எழுதாத மறையளித்த எழுத்தறியும் பெருமானை — மேற்படி, 335.

# 5. மெய்கண்ட நூல்கள்

## சாத்திர நூல்கள்

கிறிஸ்துவுக்கு முன்னதாகவே தமிழகத்தில் சைவ சமயமும் சமயக் கொள்கைகளும் வழக்கிலிருந்தன. அருள் வடிவினனுகிய சிவன், தலைவனுகிய பதி, அண்டங்களின் தோற்றம், நிலை, அழிவு ஆகியவற்றுக்குக் காரணமான அரன், வினைகள், பந்தம் வீடு முதலிய கொள்கைகளால் வாழ்க்கை விளக்கத்தை எடுத்து விளக்கும் நெறி சைவ சித்தாந்த நெறி ஆகும். இந்நெறி பழந்தமிழரின் வாழ்க்கையிலும் பண்பாட்டிலும் ஊடுருவி இருந்தது என்பதற்குச் சான்றுகள் பல உள. கி. பி. முதல் நூற்றுண்டிலிருந்து 10-ஆம் நூற்றுண்டு வரையிலான இலக்கியம் தமிழிலக்கியத்தின் பெரும்பகுதியாக விளங்கும் சமய, பக்தி இலக்கியமாகும். இவற்றில் சித்தாந்தக் கொள்கைகள் பல காணக்கிடக்கின்றன. வரலாற்றுப் போக்கில், சமய தத்துவ நூல்களாகிய சிவாகமங்கள், பல்லவ சோழ பாண்டியர்களின் ஆட்சிக் காலத்தில் வழக்கிலிருந்தன என்பது தெரிகிறது.[1] வழிபாடு, நெறி, சடங்கு, சமயக் கோட்பாடு முதலியவற்றைப் பற்றி முடிந்த முடிபான கருத்துக்களைக் கூறும் நூல்களாக அவை கருதப்பட்டன. அவை வடமொழியில் இருந்தன என்றுலும் தமிழிலும் சில இருந்திருக்கலாம். மாறுக, தமிழில் இருந்த ஆகமங்கள் அக்காலத்துப் பொது மொழியான வடமொழியில் சேர்க்கப்பட்டன என்றும் கூறல் பொருந்தும். திருமந்திரம் தமிழில் அமைந்து, ஆகம நூலாகவும் விளங்கியதை முன்பே கண்டோம். பிற்காலத்துச் சைவசித்தாந்த இலக்கியங்களில் கூறும் கருத்துக்களுக்கு ஏற்ற குறிப்புக்கள் திருமந்திரத்தில் உள்ளன. வேதாந்தத்துக்கும் சைவ சித்தாந்தத்துக்கும் சமரசம் காணும் முயற்சியையும், வேதங்களில் உள்ள மகாவாக்கியங்களின்

(ஆன்மாவையும் கடவுளையும் ஒருங்கிணைத்துக் கூறும் சொற்றொடர்களுக்குச் சித்தாந்த முறைப்படி அமைந்த) விளக்கங்களையும் கூடத் திருமந்திரத்தில் காண்கிறோம். என்றாலும்கூட, சமய மரபு திருமந்திரத்தைத் திருமுறை (தோத்திர) நூல்களுள் ஒன்றாகக் கொண்டிருக்கிறது. பின்னால் வந்த சைவ சித்தாந்த இலக்கியங்கள் சாத்திர நூல்களாக ஏற்றுக் கொள்ளப்பட்டன. இந்தப் பகுப்பு முறைக்குக் காரணம் இல்லாமல் இல்லை என்பதைக் காணலாம்.

தமிழகத்தில் சைவ பக்தி இலக்கியத்தை அடுத்து வேதாந்தம் என்னும் பெயரில் இந்து சமயம் மீண்டும் தலையெடுத்தது. சங்கரருடைய (கி. பி. 788—820)[2] எழுத்துக்கள் மூலமாக அத்துவைதம் என்ற பெயரில் அது ஒரு புரட்சியைத் தோற்றுவித்தது. பண்போ, உறவோ இல்லாத தனித்தன்மை வாய்ந்த கடவுள் பிரம்மன் என்றும், உயிர்களும் உலகமும் அந்த பிரம்மனின் தோற்றமே (மாயாவாதம்) என்றும் இரு கருத்துக்களை அது வெளியிட்டது. ஞானம் ஒன்று மட்டுமே முத்தியளிக்கும். கடமைக்கும் மோட்சத்துக்கும் இடையிலும், பக்திக்கும் முத்திக்கும் இடையிலும் தர்க்க ரீதியாகக் காரண காரிய அமைப்பு இல்லை. கடமை என்பது ஒழுக்கத்துக்கும் தூய்மைக்காகவும் தேவைப்படுவதே தவிர, அதுவே முடிவானதல்ல. பக்தியும் அப்படிப்பட்டதே. பக்தி சிந்தையை ஒருமுகப்படுத்துவதற்குத் துணை புரியலாம். இந்தவகையிலே அத்துவைதக் கருத்துக்கள் அமைந்திருந்தன.

இந்தக் கருத்துக்கு மாறாக வைணவம், விசிஷ்டாத்துவைதம் என்னும் தனது கொள்கையை வெளிப்படுத்தியது. இராமநுசர் (கி. பி. 11-ஆம் நூற்றாண்டு), சங்கரரைப் போலவே பிரம்மசூத்திரத்துக்கும் கீதைக்கும் உரையெழுதிச் சங்கரரை மறுத்தார். இவ்வாறு விசிஷ்டாத்துவைதம் என்னும் புதிய வேதாந்த மரபு ஒன்று தோன்றியது. இதையடுத்து 13-ஆம் நூற்றாண்டில் மத்துவருடைய துவைத

வேதாந்தம் வெளிவந்தது. இந்து சமயத்தில் இவ்வாறு தோன்றிய குறிப்பிடத்தக்க புரட்சி, தென்னாட்டில், குறிப்பாகத் தமிழ் நாட்டிலேயே, தோன்றியது குறிப்பிடத்தக்கதாகும்.

மூன்றாவதாக, ஏறக்குறைய அதே காலத்தில் புதியதொரு மரபு–சைவ சித்தாந்த மரபு–மெய்கண்டாரால் தோற்றுவிக்கப்பட்டது. இம்மரபு அத்துவைதம் என்ற சொல்லுக்குப் புதியதொரு பொருள் கண்டு, இதுவரை இருந்த மரபுகளுக்கு வேருக ஒரு பாதையை வகுத்தது. உயிருக்கும் கடவுளுக்கும் உள்ள உறவை அது தூய அத்துவிதமாகக் கொண்டது. இது 'அடைமொழியற்ற அத்துவிதம்' அல்லது 'சுத்த அத்துவிதம்' என்று கொள்ளலாம். அடியார்களின் பாடல்களிலிருந்தும் இந்தப் போக்கு மெய்கண்டாருக்கு முன்பே இருந்தது என்பதை அறியலாம். தமக்கு முன்னுலிருந்த ஆசிரியர்கள் அனைவருடைய கருத்துக்களையும் ஏற்றுக்கொண்டு, மெய்கண்டார் புதியதொரு பாதை கண்டார். அதில் அவரது கொள்கைக்கு முரணுன கருத்துக்களும் உள்ளன. எனவே சைவசித்தாந்த மரபு தன்னுள் எல்லாவற்றையும் அடக்கியிருக்கிறது. இந்தப் பெருமை மெய்கண்டாரையே சாரும். எனவேதான், சைவ சித்தாந்த சாத்திர நூல்கள் 'மெய்கண்ட சாத்திரம்' என்று வழங்கப்படுகின்றன.

மெய்கண்ட சாத்திரம் 14 ஆகும். அவையாவன (1) திருவுந்தியார் (2) திருக்களிற்றுப்படியார் (3) சிவஞான போதம் (4) சிவஞான சித்தியார் (5) இருபா இருபஃது (6) உண்மை விளக்கம் (7) சிவப்பிரகாசம் (8) திருவருட் பயன் (9) வினுவெண்பா (10) போற்றிப் பஃருெடை (11) கொடிக்கவி (12) நெஞ்சுவிடுதூது (13) உண்மைநெறி விளக்கம் (14) சங்கற்ப நிராகரணம்.[3]

## அடிக்குறிப்புகள்

1. திருமூலர் தமது நூலை 'ஆகமம்' (திருமந்திரம் 135) என்றும், 'சிவாகமம்' (மேற்படி, 136) என்றும் கூறுகிறார். அவர் 28 ஆகமங்களைக் குறிப்பிட்டு (மேற்படி, 68) தமது நூல் ஒன்பது ஆகமங்களின் அடிப்படையில் எழுந்தது (மேற்படி 73) என்று கூறுகிறார். ஆகமங்களைத் தேடுகின்ற முயற்சி மேற்கொள்ளப்பட்டது. இதனைமெய்ப்பொருள் நாயனார்வரலாற்றில் காண்கிறோம். "உங்கள் நாயகனார் முன்னம் உரைத்த ஆகம நூல் மண்மேல், எங்கும் இல்லாததொன்று கொடு வந்தேன் இயம்ப." — பெரிய புராணம் —5, 10.

2. Development of Saivism in South India. ப. 137.

3. உந்தி களிறு உயர்போதம் சித்தியார்
பிந்திருபா உண்மை பிரகாசம்—வந்தஅருட்
பண்புவினா போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு
உண்மைநெறி சங்கற்பம் உற்று.

இச்செய்யுள் 14 சாத்திர நூல்களையும் கூறுகிறது. இச்செய்யுள் சாத்திர நூல்களுக்கு மிகவும் பிற்பட்ட காலத்தில் எழுந்த ஒன்று. உண்மை நெறி விளக்கம் பதினான்கு சாத்திரங்களுள் ஒன்று அன்று என்றும், சீகாழிச் சிற்றம்பல நாடிகள் இயற்றிய துகளறுபோதமே இப்பதினான்கனுள் ஒன்று என்றும் கருதுவார் உண்டு.
– பார்க்க, மு. அருணாசலம், சித்தாந்தச் சிறுநூல்கள் ப. 10; மெய்கண்ட சாத்திரம் (தருமபுரம் பதிப்பு 1962) முன்னுரை, ப. II

# 6. மெய்கண்டாருக்கு முற்பட்ட சித்தாந்த நூல்கள்

## I ஞானமிர்தம்

மெய்கண்டார் சிவஞான போதம் இயற்றுவதற்கு முன்னுலேயே சைவசித்தாந்தத்தின் அடிப்படைக்கொள்கைகள் நன்கு பரவி இருந்தன. சைவ சித்தாந்தக் கொள்கைகளையும் சைவ சமயத்தையும் எடுத்துக் கூறும் பல நூல்கள் முன்பே நடைமுறையில் இருந்து வந்தன.[4] அவ்வாறு மெய்கண்டாருக்கு முற்பட்டு வழங்கிய சாத்திர நூல்களுள் ஞானமிர்தம் ஒன்று ஆகும். அதன் சொல்லமைப்பும் யாப்பமைதியும் மெய்கண்ட நூல்களுக்கு அது மிகவும் முற்பட்டது என்பதை எடுத்துக்காட்டுகின்றன. அதன் ஆசிரியராகிய வாகீசர் அல்லது வாகீச முனிவர் பன்னிரண்டாம் நூற்ருண்டைச் சார்ந்தவராக, மெய்கண்டாருக்கு ஏறக்குறைய 100 ஆண்டுகளுக்கு முன்னவராகக் கருதப்படுகிருர்.[5] இரண்டாம் இராஜாதிராஜன் (கி. பி. 1163—78) கல்வெட்டு ஒன்றில் வாகீச பண்டிதன் என்னும் பெயர் காணப்படுகிறது; அந்தப் பெயருக்கு முன்னுல் "சோம சம்பு பத்ததியை விளக்கும்" என்னும் அடைமொழி காணப்படுகிறது.[6]

ஞானமிர்தத்தில், சைவசித்தாந்தத் தத்துவக் கொள்கைகளையும், வாதங்கள், மாறுபட்ட கொள்கையினரை மறுத்தல் ஆகியவற்றையும் காணலாம். தமிழில் முதன் முதலாக இவ்வாறு எழுந்த நூல் இதுவே எனலாம்.[7] சிவஞான போதத்துக்கு உரையெழுதிய சிவஞான முனிவர் ஞானமிர்தத்திலிருந்து மிக விரிவாக மேற்கோள் காட்டுகிருர்.[8] மேலும் இந்நூல் சிவஞான போதத்துக்கு முற்பட்டது என்பதையும், சிவஞான போதத்தை இந்நூலின் துணைகொண்டு தெளிவாக அறியலாம் என்பதையும்

குறிப்பாகக் காட்டுகிறார். பௌஷ்கரம், மிருகேந்திரம், மதங்கம் முதலிய ஆகமங்கள் மூலம் தெரியவரும் சைவாகம வளர்ச்சியில் ஞானாமிர்தம் பொது இயல்பு பற்றிக் கூறுவதாக அவர் எழுதுகிறார்.[9]

வாகீச முனிவர், எல்லா ஆகமங்களும் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு பொருள்களையே கூறுகின்றன என்கிறார்.[10] தமிழில் வேதங்களைக் குறிக்கப் பயன்படும் சொல்லாகிய 'மறை' என்பதை இவர் ஆகமங்களைக் குறிக்க ஆள்கிறார்.[11]

"பிறழா நிலைமைப் பெரும் பெயர் ஞானக் கறையறு பாதம் முறை உறக் கழறில்" (8. 8, அடி 1–2) என்று ஞானாமிர்தம், தான் ஞானபாதத்தை எடுத்துச் சொல்லப் போவதாகத் தொடங்குகிறது. அதாவது சரியை முதலிய பிறவற்றை அடுத்து இது வருவதாகக் குறிப்பு. இதைக் காட்டும் வகையில் சிவஞான முனிவர், ஞானமிர்தத்திலிருந்து கிரியா பாதத்தைக் குறிக்கும் செய்யுள் ஒன்றை மேற்கோளாகக் காட்டுகிறார் (மாபாடியம். ப 258).

ஞானாமிர்தம் (ஞானமாகிய அமிர்தம்), அறியாமைக் கடலை, ஆகமத்தை மத்தாகவும் அறிவைக் கைகளாகவும் உபதேசத்தைக் கயிறுகளாகவும் கொண்டு கடைந்தபோது வெளிப்பட்டதாம். (செய்யுள். *1*). வாகீச முனிவர் சில வினாக்களைத் தொடுக்கிறார். அறிவு, அசித்தில் அதாவது அறிவற்ற பொருளில், எவ்வாறு தோன்றும்? உயிர் சித்; (அதாவது அறிவுடைப் பொருள்) அது எவ்வாறு அறியாமை உடையதாயிருக்கும்? அறிவு, அறியாமை ஆகிய இரண்டும் எவ்வாறு ஒரே இடத்தில் இருக்க முடியும்? அவரே இவற்றிற்கு விடையும் அளிக்கிறார். விறகில் தீ உள்ளது. அதைக் கொளுத்தும் செயல் ஏற்பட்டாலன்றி, அது வெளிப்படாமல் நிற்கிறது. அதே போல உண்மையறிவும் குருவின் உபதேசத்தால் உயிரிலிருந்து வெளிப்படுகிறது.[12]

ஞானமிர்தம் எட்டுப் பகுதிகளாகப் பிரிக்கப் பட்டுள்ளது. அவை (1) சம்மிய ஞானம் (செய்யுள் 8–14), (2) சம்மிய தரிசனம் (15–17) (3) பாசபந்தம் (18–26), (4) தேகாந்தரம் (27–28), (5) பாசாநாதித்துவம் (29-30), (6) பாசச்சேதம் (31–52), (7) பதி நிச்சயம் (53–72), (8) பாசமோசனம் (73–75).

பசு, பாசம், பதி என்ற முறை வைப்பில் அவற்றின் இயல்பை எடுத்துக் கூறுவதன் மூலம் ஆசிரியர் ஞான பாதத்தை விளக்குகிறார். பசுவை (உயிர்)ப் பற்றி அறிவதற்குரிய வழி, அது கடந்து செல்லும் கேவலம், சகலம், சுத்தம் என்னும் மூன்று அவத்தைகளைப் பற்றி அறிவதேயாம் (செய்யுள்–8). இந்த அவத்தைகளை (நிலைகளை) ஏற்றுக் கொள்வது, உயிரோடு ஒட்டியிருக்கிற ஆணவமே அவற்றிற்கு அடிப்படை என்பதை ஒப்புக்கொள்வதாகும். இந்த இயல்பில்தான் பசு, பதியினின்று வேறுபட்டு நிற்கிறது(செய்யுள்-9). உயிர் மாயையின் கருவில் உடல் பெறுகிறது (செய்யுள்–10). இந்நூலாசிரியர் உடல் கொண்ட உயிருக்கும் உடலுக்கும் வேறுபாடு காட்டிப் பிறகு 'அறிவுடையது', 'அறிவில்லாதது' ஆகியவற்றையும் விளக்குகிறார் (செய்யுள் 13–14).

உலக வாழ்க்கையில் உடலோடு கூடிய உயிர் அடையும் ஐவகை நிலைகளைச் சம்மிய தரிசனம் எடுத்துவிளக்குகிறது.

பாசத்தின் இயல்பும் வகையும் அடுத்துக் கூறப்படுகின்றன. தொடக்கமின்றித் தொடர்ந்து வருவதும், பிணிப்புண்டு அவல முறுவதற்குக் காரணமாகியதுமாகிய ஆணவ மலம்; பல்வேறு வகையானதும் மாறுபட்டதும் ஆகிய பயன் துய்ப்புக்குக் காரணமான கன்ம மலம்; உடல், பொறி புலன்கள், உலகம், உலகத்துப் பொருள்கள் ஆகியவற்றோடு உயிரைப் பிணைத்து வைக்கும் மாயாமலம், ஆகியவை தெளிவாக விளக்கப்பட்டுள்ளன (செய்யுள் 19–21).

அடுத்து கன்மம், மாயை ஆகியவற்றின் விளைவுகளான பிறப்பிறப்புக்களும், பல்வேறு பிறவிகளும் விளக்கப பட்டுள்ளன. படைவீரர் அடி பிறழாமல் நடையிட்டுச் செல்வது

போல, ஆடைகளை மாற்றுவது போல, கனவும் நனவும் மாறி மாறி வருவது போல, உயிர் ஓர் உடலிலிருந்து மற்றோர் உடலுக்குப் பாய்கிறது (செய்யுள்–27).

மும்மலங்கள் பற்றிய முரண்பாடு பற்றியும் ஆசிரியர் காட்டுகிறார். உடல், பொறிகள் முதலியவற்றை மாயை தருகிறது. கன்மம் செயல்பட உதவுகிறது. மாயையும் கன்மமும் இன்றி மூல மலத்திலிருந்து விடுபட முடியாது. அப்படியானால் உயிர் மூன்று மலங்களோடும் இணைந்தே இருக்க வேண்டும். அப்போது உயிர் மலங்களிலிருந்து விடுபடுவது எவ்வாறு?[13]

பாசத்தை வெட்டி எறியும் வழியை (பாசச்சேத உபாயம்) ஆசிரியர் கூறுகிறார். சேற்றுக்கும் சகதிக்கும் காரணமான நீரைக் கொண்டே அவற்றைக் கழுவி விடுவது போல, முன் வினையின் விளைவாகிய உடலைக் கொண்டே அந்தவினையைக் களைதலும் கூடும் (செய்யுள்-31). இந்த உபாயம் பிறவியை ஒழித்து விடுதலையைத் தரும் பாச மென்னும் களையைக் கிள்ளியெறிந்து பாவத்தை அழித்துப் புண்ணியத்துக்கு வேலியாக அமைந்து மனிதனுக்கு விருப்பு வெறுப்பற்ற நிலையை உண்டாக்கித் தருகிறது (செய்யுள்–32). இதைக் கன்மச்சேத உபாயம் (செய்யுள்-34) என்று அவர் குறிப்பிடுகிறார். இதுவே இந்நூலின் மையக் கருத்தாகவும் திகழ்கிறது. மந்திரவாதியின் கையை நெருப்புச் சுடாதவாறு போலவும், தேற்றாங் கொட்டையால் தெளிந்த நீர் மீண்டும் அழுக்கடையாதவாறு போலவும், ஞானம் தோன்றிய பிறகு பாசம் உயிர்களைத் தளைப்படுத்துவதில்லை (செய்யுள்-52).

பதி எங்கும் நிறைந்தவன்(செய்யுள்-56). அவன் திருவடிகளையன்றி உயிருக்கு வேறு புகல் இல்லை.[14] உலகம் அறிவற்றது. எனவே, அதனை அறிவுடைய ஒருவன் உண்டாக்கி இருக்க வேண்டும். உயிர் தளைப்பட்டிருப்பதால் அதனைச் செய்ய முடியாது. தளை அவிழ்ந்த உயிர்களும் அதைச் செய்ய முடியாது. ஏனெனில், அவை எப்போதுமே

கட்டின்றி இருந்ததில்லை. மேலும் அவை கட்டிலிருந்து விடுபட வேறொருவர் உதவி இருக்கவேண்டும்(செய்யுள்-58). சிவபெருமான்தான் ஐம்பெருந் தொழில்களுக்குக் காரணமானவன். அவன் உருவிலி எனினும், தனது சத்தியின் மூலம் செயல்படுகிறான். சிவன் உருவிலி, உருவுடையவன். உருவமும் அருவமுமானவன்.[15] அவன் ஐந்தொழில்களைத் தனது சத்தியின் மூலமே செய்வதால் அவை அவனைத் தாக்குவதில்லை (செய்யுள்-63).

கடைசிப் பகுதி பாசமோசனம் (தளையிலிருந்து விடுதலை) பற்றிக் கூறுகிறது. விடுதலை அடைந்த உயிர் சிவனுடன் ஒன்றி விடுகிறது. உயிர் முதலில் பசுத்தன்மையிலிருந்து விடுதலை பெற்றுப் பின்னர் சிவனுடன் இணைந்ததா அல்லது சிவனுடன் இணைந்த பின்னர்ப் பசுத்தன்மையை இழந்ததா? இருள் மறைய ஒளி தோன்றுவது போல இரண்டும் ஒரே நேரத்தில் நிகழ்கின்றன (செய்யுள்-74).

சுருங்கச் சொன்னால் ஞானமிர்தம் ஆன்மீக வாழ்க்கையின் தத்துவங்களைப் பற்றிச் சொல்கிறது.

மெய்கண்டாரின் சிவஞான போதம் தோன்றுவதற்கு முன்பே சைவ சித்தாந்தம் பற்றிக் கூறும் நூல்கள் இருந்தன என்று முன்னர்க் கண்டோம். ஞானமிர்தம் அவற்றுள் ஒன்றாகும். மெய்கண்ட நூல்கள் பதினன்கனுள் முதலிரண்டு நூல்களாகிய திருவுந்தியாரும் திருக்களிற்றுப்படியாரும் மெய்கண்டாருக்கு முற்பட்டவையாம்.

## II திருவுந்தியாரும் திருக்களிற்றுப்படியாரும்.

திருவுந்தியாரை இயற்றியவர் திருவியலூர் உய்ய வந்த தேவநாயனர் ஆவார். அவருடைய மாணவர் ஆளுடைய தேவநாயனர். அவருக்கு மாணவராய் அமைந்தவர் திருக்கடவூர் உய்ய வந்த தேவநாயனர். இவரே திருக்களிற்றுப் படியார் என்னும் நூலை இயற்றியவர். "உந்தி பறத்தல்" என்பது, விளையாடும் பெண்டிர் இரு

கைகளையும் இருமருங்கும் நேராக நீட்டிக் கால் விரல்களின் மேல் நின்று பாடிச் சுழன்று ஆடும் ஓர் ஆட்டவகை எனக் கருதப்படுகிறது. இது பல்வரிக் கூத்துக்களுள் ஒன்று என்றும் தெரிய வருகின்றது. இங்குள்ள பாட்டு வரிகளுள் முதல் இரண்டினை ஒரு பெண் கூற, கருத்து வகையில் அவற்றைத் தொடர்ந்து முற்றுவிப்பதாய் மூன்றும் அடியை மற்றொருத்தி கூறுவதாகக் கொள்ளும்படி தொடர்கள் அமைந்துள்ளன.

"உந்தீபற" என்னும் முடிபு (மகுடம்), அடிகளை நிரப்புவதாய் (பாத பூர்த்தி), ஏனைச் சொற்றொடர்களோடு பொருட்டொடர்பின்றிப் புறத்துறுப்பாய் நின்று அணி செய்கின்றது. பிற தொடர்கள் தம்முள் இயைந்து, ஆழ்ந்து, விழுமிய கருத்துக்களைக் குறிப்பாயும் வெளிப்படையாயும் புலப்படுத்தும் மறை மொழிகளாயுமுள்ளன.[16]

திருவுந்தியார் இந்த அடிப்படையில் 45 கலித்தாழிசைகளைக் கொண்டு விளங்குகின்றது. திருவாசகத்திலும் 20 தாழிசைகளைக் கொண்ட திருவுந்தியார் என்னும் பகுதி உண்டு.

திருக்களிற்றுப்படியார், வெண்பா யாப்பில் 100 செய்யுட்களைக் கொண்ட நூல், இது திருவுந்தியாருக்குச் செய்புள் வடிவிலமைந்த உரை என்று கூறலும் உண்டு. எனவே இரண்டையும் ஒருசேர வைத்து நோக்கலாம். திருவுந்தியார் கூறும் உண்மை, உலகில் மயக்கத்தைத் தீர்க்கும் என்கிறார் திருவியலூர் உய்ய வந்த தேவநாயனார். (45)

உருவிலியாகிய இறைவன் தனது அருள் காரணமாகக் குருவாய் வந்து தன்னை ஆட்கொண்டு, தன்னை அவனாக்கினான் என்கிறார் ஆசிரியர். கருணை வடிவாகிய அவ்விறைவன் அவ்வாறு வந்து அருளாவிட்டால்,

'ஆகமங்கள் எங்கே அறுசமயம் தானெங்கே
யோகங்கள் எங்கே உணர்வெங்கே'

என்று வினவுகிறது திருக்களிற்றுப் படியார்(செய்யுள்–5).

குருவின் திருவாக்கே எல்லா ஐயங்களையும் நீக்கும். (தாழிசை2). வெற்று நூலறிவு இதற்குப் பயன்படுவதில்லை.

கடல்நீர் தாகத்தைத் தணிப்பதில்லை. ஆனால் அதே கடல்நீர் மேகத்திலிருந்து மழைவடிவாகப் பொழியும்போது எல்லாவற்றுக்கும் பயன்படுகிறது. சாணம், தானே அழுக்கானாலும், பிற அழுக்குகளை நீக்குகிறது. குரு, மக்களிலே[17] ஒருவர் ஆனாலும் பிறவி நோயைப் போக்க வல்லவர்.[18] சிவனே அருள். அது உயிர்களோடு பிரிவற நிற்கிறது. எங்கே அறிவும் உயிரும் தடைப்படுகின்றனவோ அதுவே இறைவன் தோன்றுமிடமாகும்.[19]

ஒருவர் ஐந்தெழுத்து மந்திரத்தைத் தொடர்ந்து பயின்று வந்தால் உள்ளே மறைந்து கிடக்கும் திருவருளை அறிந்து அதன்மூலம் இறைவனையும் தன்னையும் காணலாம்.[20] இறைவனை மறைத்து நிற்கும் அருட்சக்தியை உணர்ந்தால் அது இறைவனையும் தன்னையும் வெளிப்படுத்தும். அதாவது பாசமாயுள்ள திரோதான சக்தி அருட்சக்தியாக மாறுவதை இது குறிக்கிறது.

நிலத்தில் வைத்த மணியின் நா விளிம்பில் பட்டு ஓசை எழுப்பாதது போல ஞானம் பெற்றவர்களும் தத்துவத்திலிருந்துவிலகி, ஆணவத்தால் ஆட்டப்படாமல்லிருக்கிறார்கள். திருவுந்தியார்(16), திருக்களிற்றுப்படியார்(32) இரண்டுமே 'தாழ்மணிநா' என்பதனையே இக்கருத்தை விளக்கப்பயன்படுத்துகின்றன. இந்த நிலையில் உயிர் தன்நிலை கெடாது இறைவனொடு சேர்ந்து இன்பத்தை எய்துகிறது. இரவும் (கேவலநிலை), பகலும் (சகலநிலை) அற்ற ஒரு பரந்த வெளி இது (திருவுந்தியார் 20, திருக்களிற்றுப்படியார் 36,37) இந்தநிலையில் உயிர் உலகத்தோடு தொடர்பின்றி, அட்டமூர்த்தியாகிய இறைவனோடு ஒன்றி நிற்கிறது. 'எட்டுக் கொண்டார் தமைத் தொட்டுக் கொண்டே நின்றார், விட்டார் உலகமென்றுந்தீபற' (திருவுந்தியார்24). அதனால் பிறவிக்குக்

குருவின் திருவாக்கே எல்லா ஐயங்களையும் நீக்கும் (தாழிசை2). வெற்று நூலறிவு இதற்குப் பயன்படுவதில்லை.

கடல்நீர் தாகத்தைத் தணிப்பதில்லை. ஆனால் அதே கடல்நீர் மேகத்திலிருந்து மழைவடிவாகப் பொழியும்போது எல்லாவற்றுக்கும் பயன்படுகிறது. சாணம், தானே அழுக்கானாலும், பிற அழுக்குகளை நீக்குகிறது. குரு, மக்களிலே[17] ஒருவர் ஆனாலும் பிறவி நோயைப் போக்க வல்லவர்.[18] சிவனே அருள். அது உயிர்களோடு பிரிவற நிற்கிறது. எங்கே அறிவும் உயிரும் தடைப்படுகின்றனவோ அதுவே இறைவன் தோன்றுமிடமாகும்.[19]

ஒருவர் ஐந்தெழுத்து மந்திரத்தைத் தொடர்ந்து பயின்று வந்தால் உள்ளே மறைந்து கிடக்கும் திருவருளை அறிந்து அதன்மூலம் இறைவனையும் தன்னையும் காணலாம்.[20] இறைவனை மறைத்து நிற்கும் அருட்சக்தியை உணர்ந்தால் அது இறைவனையும் தன்னையும் வெளிப்படுத்தும். அதாவது பாசமாயுள்ள திரோதான சக்தி அருட்சக்தியாக மாறுவதை இது குறிக்கிறது.

நிலத்தில் வைத்த மணியின் நா விளிம்பில் பட்டு ஓசை எழுப்பாதது போல ஞானம் பெற்றவர்களும் தத்துவத்திலிருந்துவிலகி, ஆணவத்தால் ஆட்டப்படாமல்லிருக்கிறார்கள். திருவுந்தியார்(16), திருக்களிற்றுப்படியார்(32) இரண்டுமே 'தாழ்மணிநா' என்பதனையே இக்கருத்தை விளக்கப்பயன்படுத்துகின்றன. இந்த நிலையில் உயிர் தன்நிலை கெடாது இறைவனொடு சேர்ந்து இன்பத்தை எய்துகிறது. இரவும் (கேவலநிலை), பகலும் (சகலநிலை) அற்ற ஒரு பரந்த வெளி இது (திருவுந்தியார் 20, திருக்களிற்றுப்படியார் 36,37) இந்தநிலையில் உயிர் உலகத்தோடு தொடர்பின்றி, அட்ட மூர்த்தியாகிய இறைவனோடு ஒன்றி நிற்கிறது. 'எட்டுக் கொண்டார் தமைத் தொட்டுக் கொண்டே நின்றார், விட்டார் உலகமென்றுந்தீபற' (திருவுந்தியார்24). அதனால் பிறவிக்குக்

காரணமாகிய சிற்றறிவு அங்கே தோன்றுவதில்லை. இறைவனோடு ஒன்றியிருப்பதனால் உயிரும் எல்லாமாக இருக்கிறது. 'எல்லாமாய் நிற்கும் இவன்' (திருக்களிற்றுப் படியார், 45).

துரிய நிலையை எட்டியவர்களுக்கு, திருவருள் எப்போதுமே உடன் இருப்பதால் சாக்கிர (விழிப்பு) நிலையும் துரியமாகவே உள்ளது (திருவுந்தியார் 32). இதற்கு சமயகுரவர்களாகிய நால்வருடைய வாழ்க்கையும் தக்க எடுத்துக்காட்டுகளாகத் திகழ்கின்றன. (திருக்களிற்றுப் படியார், 69-73).

சைவசித்தாந்தம் ஒன்றே இவற்றை எல்லாம் எடுத்துக் கூறுகின்றது. பிறசமயங்கள் எல்லாம் சாவியாய், பயன் தராத பயிர்களாம் (31). உயிர் இறைவன் திருவருளாலே பேரின்பத்தைத் துய்க்கிறது. இதனால் உயிர் சிவனாவதில்லை. சகலம், சுத்தம் என்ற இரண்டு நிலையிலும் உயிர் உயிராகவே இருக்கிறது (40). பழுமரத்தில் தோன்றும் புல்லுருவி பழுப்பதில்லை என்பதுபோல்வதாம் இது.[21]

திருவுந்தியார் இதைப்போன்ற தத்துவக் கருத்துக்கள் பலவற்றை எடுத்துக் கூறினும், இது சாத்திர நூலன்று என்று கருதுவார் பலர் உண்டு.[22] ஆனால் சிவஞானமுனிவர் 'திருவுந்தி திருக்களிற்றுப்படியார் முதலியன சிறப்பியல்பு மாத்திரையே கூறுதலின் உண்மையெனவும் ஆம்' என்று இதனைச் சாத்திரமாகவே கொள்கிறார் (மாபாடியம், ப. 11).

நாயன்மார்கள் பலருடைய வாழ்க்கையில் நிகழ்ந்த அற்புதங்களை, திருக்களிற்றுப்படியார் எடுத்துக்கூறி, சைவசித்தாந்த நெறிப்படி அவற்றுக்கு விளக்கமும் தருகிறது.[23] அடியார்கள் சாதாரண மக்களைப்போல் வாழ்ந்தாலும், அவர்களுடைய செயல்கள் இறைவனுடைய செயல்களாகவே கொள்ளப்படல் வேண்டும் என்று இந்நூலாசிரியர் குறிக்கிறார்.[24]

சுந்தரமூர்த்தி நாயனர் அடியார்களைப் பற்றிக் கூறும் போது அவர்களை 'நல்லடியார்' என்றும், 'வல்லடியார்' என்றும் இருவகையாகக் கூறுகிருர்.[25] 'நல்', 'வல்' என்னும் இந்த இரண்டு அடைகளையும் திருக்களிற்றுப்படியார் அடியார்களின் மீது ஏற்றி 'நல்வினை' (மெல்வினை) எது எனவும் 'வல்வினை' எது எனவும் விளக்குகிறது.[26] 'செயல்எதுவாயினும்குறிக்கோள் நான், எனது என்பவற்றை அழிப்பதேயாம். இவை அழிந்தபும் இறைவன் தோன்று கின்ருன். என்வே வல்வினை, மெல்வினை ஆகிய இரண்டும் நான் என்பதை அழிக்கின்றன.'[27]

திருக்களிற்றுப்படியாரின் ஆசிரியராகிய திருக்கடவூர் உய்ய வந்த தேவநாயனர் பழைய இலக்கியங்களில் நன்கு பயிற்சிபெற்றவர். எடுத்துக்காட்டாக 34, 40 ஆகிய இரண்டு செய்யுட்களிலும் திருக்குறள் பாக்களை (மெய்யுணர்தல் 9, அவாவறுத்தல் 2) அப்படியே எடுத்து ஆள்கிருர். அதே போன்று வேதங்களில் உள்ள மகாவாக்கியங்களை எடுத்துக் கொண்டு அவற்றிற்கு விளக்கம் தரவும் முற்படுகிருர். 'அதுவே இது; நானே அது; அது நீயே ஆகிருய்; நான் அது ஆனேன்' என்று கூறும் வேதவாக்கியங்கள் அவை. உண்மை உணர்ந்தார் அவை ஒன்று அல்லது இரண்டு என்னும் எண்களைக் குறிப்பதாகக் கொள்ள மாட்டார்கள். எல்லாவற்றையும் அழிக்கும் இறைவன் இறுதியில் ஒருவனேயாகி நிற்கிருன். உலகத் தோற்றத்தின்போது தானும் சக்தியுமாய் இரண்டாகவும் உலகிலுள்ள எல்லாப் பொருள்களையும் குறிக்கும் வகையில் எட்டாகவும் ஆகிருன். அவற்ருேடு உடனுகவும் அவன் இருக்கிருன்.[28] இந்த நூலின் முக்கிய பணி, அடியார்களுடைய வாழ்க்கைகளுக்கு விளக்கம் கொடுத்ததேயாம்.[29]

இந்த நூலை முதலில் அறிஞர்கள் ஏற்றுக்கொள்ளவில்லை என்றும், அதனுல் ஆசிரியர் அதனைத் தில்லை நடராச மண்டபத்தில் இருந்த படிகளில் கீழ்ப்படியில் வைத்து விட்டதாகவும், படிகளில் ஒட்டியிருந்த கல்யானை ஒன்று அந்

நூலைத் தும்பிக்கையால் எடுத்து நடராசனின் திருவடிக்கீழ் வைத்ததாகவும், அதன் பிறகு அனைவரும் அந்நூலைத் ஏற்றுக்கொண்டதாகவும், இதனாலேயே அந்நூலுக்குத் திருக்களிற்றுப்படியார் என்னும் பெயர் வந்ததாகவும் கூறப் படுகிறது.

திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார் என்னும் இரண்டு நூல்களும், மெய்கண்டாருக்கு முற்பட்டவை என்றாலும், உமாபதி சிவம் போன்ற ஆசிரியர்கள் அந்நூல்களின் பெயர்களைக்கூடக் குறிப்பிடவில்லை. சந்தான வரலாறு என்னும் நூல் கூறுவது போல (ப. 36) இவ்விரண்டு நூல்களின் ஆசிரியர்களும் விஞ்ஞான தேவர் சந்தானம் என்பதைச் சேர்ந்தவர்களாய் இருந்து, அதனாலேயே மெய்கண்ட தேவர் சந்தானத்தைச் சேர்ந்த உமாபதிசிவம் அவர்களைப்பற்றிக் குறிப்பிடாமல் இருந்திருக் கலாம். பின்னால் வந்த யாரோ ஒருவர் சாத்திர நூல்களைக் குறிக்கும் வெண்பாவை இயற்றி, அதில் இவ்விரண்டையும் சேர்த்திருக்கலாம்.[30]

அடிக்குறிப்புகள்

4. மெய்கண்டாருக்கு முன்பே சாத்திரங்கள் இருந்தன. அவை நன்கு பயிலப்பட்டன. இதனை மெய்கண்டாருக்கு முந்தைய நூலாகிய திருக்களிற்றுப்படியார்,

"சாத்திரத்தை ஓதினர்க்குச் சற்குருவின் தன்வசன
மாத்திரத்தே வாய்க்குநலம் வந்துறுமே" — (6)

என்று கூறுகிறது.

5. ஞானமிர்தம் கி. பி. 6- ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது என்று மறைமலையடிகள் கருதுகிறார். — மாணிக்கவாசகர் வரலாறும் காலமும் ப. 119; கா. சு. பிள்ளை — இலக்கிய வரலாறு, ப. 199.

6. "சோம சித்தாந்தம் வக்காணிக்கும் வாகீசபண்டிதன் எழுத்து" – ஞானமிர்தம், முன்னுரை, பக்கம் XXXV

7. காலத்தடல் முற்பட்ட திருமந்திரம் இவ்வாறு முறைப்படி அமைய வில்லை. சிவஞான சித்தியார், சிவப்பிரகாசம் போல வாதங்களை எடுத்துக் கூறும் முறையிலும் அமையவில்லை. எனவேதான் மரபு வழியேயும் இந் நூலைச் சாத்திரத்தில் அடக்காமல் தோத்திரத்தில் சேர்த்துள்ளனர்.

8. மாபாடியம், பக். 4, 9, 11, 82, 99, 101, 102, 111, 141—143, 145, 169, 251, 329, 336, 374, 477.

9. மேற்படி-ப .11; டாக்டர் கே. சிவராமன், முற்கூறிய நூல்,ப. 43.

10. அருமறை எவையும் திருமிகு ஞானம் இலங்கொளி யோகம்
நலங்கினர் கிரியை சரியை எனஉரை விரிதரு பாதம்.
கறைதரு மறைமுறை நெறியின் அறைய — செய்யுள் 7
(அடி 9—13).

11. மேற்படி; மற்றும் செய்யுள் 42 (அடி 1); செய்யுள் 62( அடி 22).

12. செய்யுள் 70; உமாபதி சிவமும் முரண்பட்ட இரண்டு பொருள் கள் எவ்வாறு ஒரே இடத்தில் தங்கும் என்று வினவி இதேபோல விடை யளிக்கிறார்—வினா வெண்பா, செய்யுள் 1; கொடிக்கவி — செய்யுள்-1.

13. செய்யுள் 27. உமாபதியும் சிவப்பிரகாசத்தில் இந்த வினாவை எழுப்புகிறார். வினையோ அன்றிச் சொல்லிவரு மாயையோ அணுவை முந்தச் சூழ்ந்தது.'—25

14. ஒழிவற நிறைந்த மதிசேர் செஞ்சடை ஒருவன்பாத மல்லதைப் பிறிதும் உண்டோ பெரும்புகல் நமக்கே.'—செய்யுள்-53, அடி 23-25.

15. இவை முறையே சாந்தசிவன், சதாசிவன், மகேசுரன் ஆகும் 'உருவிலி, அருவுரு, உருஇவர், ஈசன், ஒளிதிகழ், சதாசிவன், சாந்தன்.'— செய்யுள்—62, அடி 22-24.

16. க. வச்சிரவேல் முதலியார், திருவுந்தியார், சைவசித்தாந்த மகா சமாஜம், 1966 முன்னுரை, பக். 5, 6.

17. திருக்களிற்றுப்படியார் 6. 7.

18. திருவுந்தியார் 13; இதனை 'உணர்வின் தமி' என்று குறிப்பிடு கிறார், மெய்கண்டார் (சிவஞான போதம், 5).

19. திருக்களிற்றுப்படியார் 29; திருவுந்தியாரில் காணும் அதே சொற்களைப் பயன்படுத்தி இக்கருத்துக்களை விளக்குகிறது, திருக்களிற்றுப் படியார்.

20. திருவுந்தியார் 15. இத்தாழிசையில் அருளைக் குறிக்கக் 'கிழவி', 'உடந்தை' என்னும் இரு சொற்களையும் ஆசிரியர் ஆள்கிறார்.

21. திருக்களிற்றுப்படியார் 92. இதில் 'புல்லூரி' என்னும் சொல்லைப் பயன் படுத்துகிறார்.

22. எஸ். அனவரத விநாயகம் பிள்ளை, சைவசித்தாந்த வரலாறு, 1909, ப. 7; பொன்னையா, முற்குறித்த நூல், ப. 27.

23. செய்யுள் 12, 19, 52—54, 70—73.

24. செய்யுள் 12, 52, 53.

25. 'நல்லடியார் மனத்து எய்ப்பினில் வைப்பை........ வல்லடியார் மனத்து இச்சையுள்ளானே'—7. 67. 2.

26. 'மெல்வினையே என்ன வியனுகில் ஆற்றரிய வல்வினையே என்ன வரும் இரண்டும்'—14. அடுத்த இரண்டு செய்யுட்களும் முறையே மெல்வினை, வல்வினை என்பவற்றை அடியார்களின் வாழ்க்கைகளை எடுத்துக்காட்டாகக் கூறி விளக்குகின்றன.

27. டாக்டர் துரை அரங்கசாமி, மேற்கூறிய நூல், ப. 1089

28. செய்யுள் 85, 86; இதை விளக்குவதற்கு அவர் திருஞானசம்பந்தருடைய சொற்களையும் கருத்துக்களையும் (1. 11. 2.) அப்படியே எடுத்தாள்கிறார். மெய்கண்டாரும் அவருடைய மாணவர்களும் தம் நூல்களில் இக்கருத்தை விரிவுபடுத்தி எழுதினர்கள்.

29. பொன்னையா, முற்கூறிய நூல், பக்-28.

30. திருவுந்தியாருக்குக் கிடைத்துள்ள உரைகள்.

(1) உரையாசிரியர் பெயர் தெரியவில்லை—(சமாஜம், 1940).

(2) திருவாவடுதுறை ஆதீனத்துச் சிவப்பிரகாசர் உரை, சித்தாந்த சாத்திர முதற்பதிப்பு—(சமாஜம், 1934.)

(3) க. வச்சிரவேல் முதலியார் (சமாஜம், 1966).

(4) தருமபுர ஆதீன வெளியீடு, உரைநடையில், (வெளியீட்டு எண் 539, 1963)

(5) திருவாவடுதுறையைச் சேர்ந்த சிற்றம்பலத்தம்பிரான் சுவாமிகள் என்பவரும் இதற்கு உரையெழுதியிருப்பதாக எஸ். அனவரத விநாயகம் பிள்ளை கூறுகிறார்—(சைவ சித்தாந்த வரலாறு, ப. 37).

திருக்களிற்றுப்படியாருக்குக் கிடைத்துள்ள உரைகள்:-

(1) உரையாசிரியர் பெயர் தெரியவில்லை. (திருவுந்தியாருக்கும் உரை எழுதியவர் இவரே).

(2) தருமபுர ஆதீன வெளியீடு, உரைநடையில் (வெளியீட்டு எண் 504, 1961).

## 6. மெய்கண்டார் தந்த முதல் நூல்.

சிவனடிக்கு அன்பும், திருமுறைகளில் அசையாத நம்பிக்கையும் கொண்டிருந்த பெற்றோர்களின் மகவாகத் தோன்றிய மெய்கண்டாருக்கு அவர்தம் பெற்றோர் இட்ட பெயர் – சுவேதவனப் பெருமாள் என்பதாகும். அக்குழந்தை ஆன்மீக வளர்ச்சி பெற்றிருந்ததாதலின் பரஞ்சோதி முனிவர் அக்குழந்தைக்கு உபதேசம் செய்து, தம் குருவாகிய சத்திய ஞான தரிசனி (மெய்கண்டார்) என்ற பெயரையே அக்குழந்தைக்குச் சூட்டினர். மெய்கண்டார் தம் மாணவர்களுக்குச் சைவசித்தாந்தத்தை உபதேசித்தார். அவர்களுள் அவருடைய தந்தையாரின் குருவாகிய சகலாகம பண்டிதரும் ஒருவர். அடியளவில் மிகச் சுருங்கியதும், சொற்பொருட் செறிவும் நடைச் செறிவும் அமைந்ததுமாகிய சிவஞான போதம் என்னும் தமது நூலில் அவர் சித்தாந்த தத்துவத்தைத் தர்க்க ரீதியாக அமைத்துத் தந்துள்ளார். அந்நூல் பன்னிரண்டு நூற்பாக்களையும், 81 உதாரண வெண்பாக்களையும் கொண்டது. அவ்வெண்பாக்கள் நூற்பாக் கருத்துக்களை விளக்கும் வகையில் அமைந்துள்ளன.

திருவெண்காடு (வடமொழியில் சுவேதவனம்) என்னும் திருத்தலத்தில் உள்ள இறைவன் அருளால் பிறந்தவர் மெய்கண்டார். அதனாலேயே அவருக்குச் சுவேதவனப் பெருமாள் என்னும் பெயர் இளமையில் சூட்டப்பட்டது. ஆனால் குடும்ப வழக்கில் 'ஊருடைய பெருமாளான எடுத்தது வலிய வேளார்' என்று அழைக்கப்பட்டார். திருவண்ணமலைக் கோவிலிலுள்ள கல்வெட்டு ஒன்று இதனைக் குறிப்பிடுகிறது.[1] அந்தக் கல்வெட்டின் காலம் கி. பி. 1232.[2] கல்வெட்டில் கூறப்படும் மெய்கண்டார் சிவஞான போதம் இயற்றிய மெய்கண்டார் தாமா என்று அறிஞர் சிலர் ஐயுறுகின்றனர்.[3] உமாபதி சிவம் இயற்றிய சங்கற்ப நிராகரணம்,

'ஏழஞ் சிருநா றெடுத்த ஆயிரம்
வாமுநற் சகனம் மருவா நிற்ப'

என்று பாயிரத்தில் (அடி 26—27) தனது காலத்தைக் குறிப்பிடுகின்றது. இதன் துணை கொண்டு மெய்கண்டார் கி. பி. 1232 ஐ ஒட்டி வாழ்ந்திருக்கலாம் என்று கொள்ளலாம். இதை மறுக்கும் வகையில் இலக்கிய ஆதாரமோ, கல்வெட்டு ஆதாரமோ கிடைக்கும் வரையில், மெய்கண்டார் கி. பி. 13 ஆம் நூற்றுண்டின் முற்பகுதியில் வாழ்ந்தவர் என்று கொள்வதே பொருந்தும்.

மேற்கூறியவற்றிலிருந்து மெய்கண்டார் என்பது பட்டப் பெயரோ, ஒரு தனி மனிதனின் பெயரோ அல்ல என்பது தெரியவரும். எனின், சிவஞான போத ஆசிரியரின் பெயர் இன்றுவரை மெய்கண்டார் என்று வழங்குவதற்கு என்ன காரணம்? மெய்கண்டார் தமது நூலில் சூத்திரங்களோடு 81 உதாரண வெண்பாக்களையும், வார்த்திகம் என்னும் உரையையும் எழுதி இருக்கிருர். 81 வெண்பாக்களுள் ஆறு மெய்கண்டார் என்னும் பெயரைக் குறிக்கின்றன. சில இடங்களில் 'மெய்' என்பது சைவசித்தாந்தத்தைக் குறிக்கிறது;[4] சில இடங்களில் சத்துப் பொருளாகிய இறைவனின் இயல்பை அறிதல் என்னும் பொருளைத் தருகின்றது;[5] ஓரிடத்தில் 'உண்மையை உணர்ந்தவன்' என்னும் பொருளில் வருகிறது.[6] அடுத்து வரும் இரண்டு இடங்களில் 'அது ஆகிய இறைவனின் இயல்பை அறிந்தவன்' என்னும் பொருள்பட நிற்கிறது;[7] 'மெய்கண்டான்' என்னும் தொடர் அந்நூலாசிரியரின் நெஞ்சைக் கவர்ந்த ஒன்ருகும். எனவே அவர் தமது கருத்தை எடுத்து விளக்குவதற்காகப் பல இடங்களில் மிகப் பொருத்தமாக இந்தச் சொல்லைப் பயன்படுத்தினர். எனவே பின்னர் வந்த அறிஞர்கள் அன்போடும் மரியாதையோடும் "மெய்கண்டான்" என்னும் அந்தத் தொடரையே அவருக்குப் பெயராகச் சூட்டி விட்டார்கள். ஒரு கவிஞன் தனது கவிதையில் பெய்து வைத்த மிக அழகிய தொடரை, அக்கவிஞனுக்கே உரிய

பெயராக இடுவது என்ற வழக்கம் சங்க காலத்தில் இருந்திருக்கிறது.[8] சிவஞான போதத்தின் சிறப்புப் பாயிரத்தை மெய்கண்டாரின் முதல் மாணவராகிய அருணந்தி சிவாசாரியார் இயற்றினர்.[9] அது மெய்கண்டார் என்னும் பெயரைத் தெளிவாகக் குறிப்பிடுகிறது. 'பொய்கண்டகன்ற மெய்கண்ட தேவன்' என்னும் அந்த அடி மெய்கண்டார் என்பதை இயற்பெயராகக் குறிக்கிறது. மற்றொரு மாணவராகிய மனவாசகங் கடந்தார், உண்மை விளக்கம் என்னும் தமது நூலில்,

'பொய்காட்டிப் பொய்யகற்றிப் போதானந் தப்பொருளாம்
மெய்காட்டும் மெய்கண்டாய்' (செய்யுள் 1)

என்று குறிப்பிடுகிறர். 'மெய்கண்டான்' என்னும் சொல்லுக்கு நேரான பொருளை எடுத்துக் கூறியவர் தாயுமானவர் (17 ஆம் நூற்றாண்டு) ஆவார். 'அத்துவிதம் என்னும் சொல்லின் உண்மையான பொருளை அறிந்தவர் மெய்கண்டார்; பிறரெல்லாம் பொய்கண்டார்' என்பது அவர் கருத்து.[10] சித்தாந்த நெறியின் அடிப்படையாக விளங்கும் அத்துவிதம் என்னும் சொல்லுக்கு விளக்கம் தந்தமையே மெய்கண்டார் செய்த அரும்பணியாகும். சித்தாந்த நெறி வழியே இந்தச் சொல்லுக்குப் பொருள் காண அவர் தர்க்க ரீதியாக முனைந்தார். அதன் விளைவே இந்தத் தத்துவ நெறியின் முதல் நூலாகிய சிவஞான போதம் ஆகும்.

சிவஞான போதம் 12 சூத்திரங்களைக் கொண்டது; முதல் ஆறும் 'பொது அதிகாரம்' எனவும், பின் ஆறும் 'உண்மை அதிகாரம்' எனவும் வழங்கப்படும். நூல் 4 இயல்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. ஒவ்வோரியலிலும் மூன்று சூத்திரங்கள் உண்டு. 1 பிரமாண இயல், 2 இலக்கண இயல், 3 சாதன இயல், 4 பயன் இயல், அவை.

பிரமாண இயல் பதி, பாசம், பசு ஆகியவற்றின் உண்மையைக் கூறுகிறது.

முதல் சூத்திரம் கூறுவதாவது: அவன், அவள், அது என்று பிரித்துக் கூறப்படக் கூடியது உலகம். ஆதலின், அது பல பொருள்களின் சேர்க்கையாகும். தோற்றம், நிலை, ஈறு என்னும் மூன்று நிலைகளுக்கு அது உட்படுகிறது. சிவனே இதைத் தோற்றுவிக்கிறான். உலகம் இவ்வாறு தோன்றுவதற்கும் அழிவதற்கும் உயிர்கள் ஆணவத்திலிருந்து விடுதலை பெறுவதே நோக்கமாகும்.

இரண்டாம் சூத்திரம் கூறுவதாவது:- முதல்வன் உயிர்களில் கலந்து அவையேயாயும், பொருளால் வேறாகியும், உயிர்க்குயிராய் இருந்து அறிவதனால் உடனாயும் இருக்கின்றான். உயிர்கள் இருவினைகளின் காரணமாக இறந்து பிறக்கின்றன. அவனோடு பிரிவின்றி விளங்கும் சத்தி (ஆணை) அந்த வினைகளை இயக்குகிறது.

மூன்றாம் சூத்திரப் பொருளாவது:- உடல் மாயையால் ஆகியது. உயிர், உடம்பிலுள்ள ஐம்பொறிகள், ஐம்புலன்கள் ஆகியவற்றினின்றும் வேறானது. தூக்கத்தில் உணவு கொள்ளலும் செயல் புரிதலும் இல்லாமையால் உடல் வேறு, உயிர் வேறு ஆகும். உணர்த்த உணரும் அறிவுடையது ஆதலின் உயிர் இறைவனிடமிருந்தும் வேறுபட்டது ஆகும்.

இரண்டாம் பகுதியாகிய இலக்கண இயல் முப்பொருள்களின் இலக்கணத்தைக் கூறுகிறது.

நான்காம் சூத்திரம், உயிரின் (பசு) இலக்கணத்தைக் கூறுகிறது. உயிர், அகக் கருவிகளாகிய மனம், புத்தி, அகங்காரம் ஆகியவற்றில் ஒன்றன்று. அரசனுக்கு அமைச்சர்கள் அமைந்திருப்பதைப் போல உயிருக்கு அவை துணையாக நிற்கின்றன. எப்போதும் தன்னோடு கூடியுள்ள ஆணவ மலத்தினால், உயிர் தானே அறிவதில்லை. அகக்கருவிகளோடு கூடி அது ஐந்தவத்தைப் படுகிறது.

ஐந்தாம் சூத்திரம் கூறுவதாவது:- மெய், வாய், கண், மூக்கு, செவி ஐம்பொறிகளும் உயிர் செலுத்துவதனாலே செயல்படுகின்றன. என்றாலும் அவை தம்மையும் தம்மைச்

செலுத்தும் உயிரையும் அறியமாட்டா. அதே போல உயிரும் தன்னையும், தன் அறிவிற்கு விளக்கந்தரும் திருவருட் சத்தியையும் அறிவதில்லை. காந்தத்தின் முன்வைத்த இரும்பு போல உயிர் இறைவன் முன்னிலையில் செயல்படுகிறது. ஆயின் இறைவன் மாற்றம் பெறுவதில்லை.

ஆறும் சூத்திரத்தின் கருத்து :- இறைவன் அறிவுக்கு எட்டியவன் என்றால் அவன் நிலையிலாப் பொருள் போல ஆவான். எவ்வகையாலும் அறியப்படாதவன் என்றால் அவன் இல் பொருளாவான். அவன் உயிரறிவால் அறியப் படாதவன். பதி அறிவால் அறியக் கூடியவன். அதனாலே அறிஞர் அவனைச் 'சிவசத்து' என்று கூறுகின்றனர்.

மூன்றும் பகுதியாகிய சாதன இயல். ஆன்மீக நெறியைக் கூறுகிறது.

ஏழாம் சூத்திரம் உயிரின் சிறப்பியல்பை விளக்குகிறது. சிவசத்தின் முன்னர் எல்லாப் பொருளும் பாழ் ஆகலான் அது பாசத்தை அறியாது; அதை அனுபவிக்காது. அசத்தாகிய உலகம் அறிவின்மையாலே எதனையும் அறியாது, அனுபவியாது. உயிர் இரண்டுமாய் இருத்தலினால் இரண்டை யும் அறியும், அனுபவிக்கும்.

எட்டாஞ் சூத்திரப் பொருளாவது : பொறி புலன்களுக் கிடையே நெடுங்காலம் வாழ்ந்து விட்டதனால், உயிர் தன் உண்மையியல்பை அறியாது. இறைவன் குருவடிவிலே வந்து உண்மையை உணர்த்துகிறான். வேடர்களிடையே வளர்ந்த அரசகுமாரனுக்கு உண்மை தெரிந்ததும் அக் கூட்டத்தை விட்டு விலகி, அரசனை அடைவதைப் போல, உயிர் இறைவனோடு அத்துவிதமாக நிற்கும் நிலையினை உணர்ந்து அவன் திருவடிகளை அடையும்.

ஒன்பதாம் சூத்திரம் கூறும் கருத்து :- பாச ஞானத் தால் அறியப்படாத இறைவனைப் பதி ஞானத்தால் உயிர் அறிகிறது. அப்படிப்பட்ட உயிருக்கு உலகம் கானலாகக்

கழிகிறது. இறைவன் வெளிப்படுகிருன். இதனைத் தொடர்ந்து துய்ப்பதற்காக உயிர் திருவைந்தெழுத்தை ஓதுகிறது.

நான்காம் பகுதியாகிய பயனியல் ஆன்மீக நெறியின் பயனை எடுத்துரைக்கிறது.

பத்தாம் சூத்திரம் கூறும் கருத்தாவது :- இவ்வாறு இறைவனை உணர்ந்து அவனுடன் ஒன்றி நிற்கும் உயிர் இறைவன் வேறு, தான் வேறு என்றில்லாமல் அவன் திருவடியிலே நிற்கிறது. அதனாலே ஆணவ, மாயை, வினை ஆகிய மூன்றும் இல்லாமல் ஒழிகின்றன.

பதினோராம் சூத்திரப் பொருள் :- பொருள்களைக் காண்பதற்கு உயிர் கண்ணுக்கு உதவுகிறது. கண்ணுக்குக் காட்டித் தானும் காண்கின்ற உயிர் போல இறைவன், பொருள்களை உயிர் அறிய உதவித் தானும் அறிகிருன். இந்த உதவியால் உயிர் இறைவனிடம் குறையாத அன்பு பூண்டு அதனுல் அவன் திருவடியாகிய அனுபவத்தைப் பெறும்.

இனி, இறுதியதாகிய பன்னிரண்டாம் சூத்திரம் சீவன் முத்தர்களைப் பற்றிச் சொல்கிறது. குறையாத அன்பொடு இறைவனை அணையும் உயிர் அதற்குத் தடையாக உள்ள மலங்களை ஞான நீரால் கழுவி, இறைவனை மறவாத அடியார்களோடு கலந்திருந்து, சிவவேடமும், சிவன் கோயிலும் சிவன் வடிவே என்று கண்டு வழிபடும்.

மெய்கண்டார் பரஞ்சோதி முனிவரைப் பற்றி ஏதும் கூருததனுலே அவரிடமிருந்து உபதேசம் பெற்றிருத்தற்கில்லை என்று கருதுவோரும் உண்டு. ஆனுல் மெய்கண்டாரின் நேர் மாணவராகிய அருணந்தி சிவாசாரியார், சிவபெருமானிடமிருந்து வழிவழியாகப் பெற்ற ஞானத்தையே வழங்குகின்ருர் (சிவஞான சித்தியார், பர பக்கம் 10) என்று கூறுகிருர். 13-ஆம் நூற்ருண்டுத் தமிழகத்தில் சமுதாயப்

புரட்சியும், சமயக் கொந்தளிப்பும் மிகுந்திருந்த போது தத்துவ நெறியில் தமிழனுடைய மேதையைக் காட்ட இந் நூல் எழுந்தது என்று கொள்பவரும் உண்டு.[11]

சைவ சித்தாந்தத்தைக் கூறும் சிவஞானபோதத்தில் சித்தாந்தம் என்னும் சொல் வாராமை வியப்புக்குரிய தாகும். அந்நூலின் பெருமையைக் குறிக்கும் ஒரு வெண்பா வருமாறு :—

**'வேதம் பசு அதன்பால் மெய்யா கமம்நால்வர்**
**ஓதும் தமிழ்அதனின் உள்ளுறுநெய்—போதமிகு**
**நெய்யின் உறுசுவையாம் நீள்வெண்ணெய் மெய்கண்டான்**
**செய்ததமிழ் நூலின் திறம்.'**

மெய்கண்டாரே தம் நூலுக்கு உதாரண வெண்பாக்களும் உரையும் எழுதியுள்ளார். முதன் முதலாக இந்நூலுக்கு எழுந்த உரை பாண்டிப் பெருமாள் இயற்றியது ஆகும். சிவஞான முனிவர் இரண்டு உரைகள் எழுதினர். ஒன்று சிற்றுரை; மற்றது பேருரை. பேருரையானது சிவஞான பாடியம் அல்லது திராவிட மாபாடியம் அல்லது மாபாடியம் என்று வழங்கப் படுகிறது. சிவாக்கிர யோகி என்பார் சிவாக்கிர பாஷ்யம் என்னும் பெயரில் ஓர் உரை வட மொழியில் எழுதியுள்ளார். இது வடமொழிச் சிவஞான போதச் சூத்திரங்களுக்கு அமைந்த உரையாகும். இவ் வடமொழிச் சிவஞானபோதம், ரௌரவாகமம் என்பதன் பகுதி என்றும் கூறப்படுகிறது.

ரௌரவாகமத்தில் உள்ள பாசமோசனப் படலம் என்பதன் தமிழ் மொழிபெயர்ப்பே, மெய்கண்டாரியற்றிய சிவஞானபோதம் என்னும் ஒரு கருத்து சில ஆண்டுகளுக்கு முன் வெளிவந்தது. இதனை உண்மையெனக் கொண்டவர் கள், சிவஞான சித்தியார் சுபக்கம், வடமொழிச் சிவஞான போதம் ஆகியவற்றின் உரையாசிரியராகிய சிவாக்கிர யோகிகள், தமிழ்ச்சிவஞான போதத்தின் உரையாசிரியர் ஆகிய சிவஞான முனிவர், உமாபதி சிவாசாரியார் இயற்றிய

பௌஷ்கர பாஷ்யம் ஆகியவற்றை மேற்கோளாகக் காட்டுவர்.[12] சிவஞான போதம் தமிழ் முதல் நூலே; மொழி பெயர்ப்பு அன்று என்னும் கருத்தை அறிஞர் பலர் எடுத்தோதினர்கள்.[13] அவர்கள் கூறும் காரணங்களில் மிகவும் முக்கியமானவை: (1) மெய்கண்டார் தம் நூல் மொழி பெயர்ப்பு என்பதாக எங்கும் குறிப்பிடவில்லை. (2) மெய்கண்டாரின் மாணவர்களும், அவர்களுடையமாணவர்களும் ஆகிய பிற சித்தாந்த சாத்திர ஆசிரியர்களும் அவ்வாறே குறிப்பிடவில்லை. (3) வடமொழிச் சிவஞான போதத்தில் பன்னிரண்டாம் சூத்திரத்தில் 'இவ்வாறு சிவஞான போதத்தில் உள்ளது' என்னும் குறிப்புக் காணப்படுகிறது. ஆகமத்தின் ஒரு படலத்தில் ஒரு பகுதி இவ்வாறு தனியே தலைப்புப் பெற்றிருக்குமா என்பது ஒரு வினா. அடுத்து, இதிலிருந்து, தமிழ்ச் சிவஞான போதத்திலிருந்து அது வடமொழியிற் பெயர்க்கப்பட்டது எனக்கொள்ள இடம் ஏற்படுகின்றது. (4) மெய்கண்டார் தோன்றுவதற்கு முன்னரேயே சித்தாந்த நெறியை எடுத்துக்கூறும் ஞானமிர்தம் திருமந்திரம் போன்ற நூல்கள் இருந்தன. அவை மெய்கண்டாரைப் போல, முறையாகவும் தர்க்கரீதியாகவும் முழுமையாகவும் எடுத்துக் கூருவிட்டாலும் சித்தாந்த நெறியை விளக்குகின்றன.

மெய்கண்டாரின் தலைமாணவராகிய அருணந்தி சிவாசாரியார், சிவஞான சித்தியார் என்றபெயரில் சிவஞான போதத்துக்குச் செய்யுள் வடிவில் விளக்கம் தந்தார். அதில் சித்தாந்த ஞானம் எப்படி வழிவழியாகப் பெறப்பட்டது என்பதைக் குறிப்பிடுகிறார். அவ்வரிசையில் ஆசிரியர்களின் பெயர்களைக் குறிப்பிடுகின்றாரேயன்றி, நூலின் பெயர் எதையும் குறிப்பிடவில்லை. அவர் 'சகலாகம பண்டிதர்' என்ற பட்டம் பெற்ற வடமொழி நூலறிஞர். சிவஞான போதம் ரௌரவாகமத்துப் பகுதி ஒன்றின் தமிழ்மொழி பெயர்ப்பு என்றால் அவர் அதனை அறியாமலிரார்; அவ்வாறு அதனைக் குறியாமலும் இரார். ஆகமம் இறைவனருளிய நூல் (சித்தியார், சுபக்கம் 267) ஆதலின், அதனை மொழி

பெயர்ப்பது ஒரு பெருமையும் சிறப்பும் ஆகும். ஆகவே இத்தமிழ் நூல் மொழிபெயர்ப்பாயிருந்தால், அவர் அதைக் குறிப்பிடுவதற்குத் தயங்கி இரார். அவரையடுத்து வந்த உமாபதிசிவம் தம் சித்தாந்த நூல்கள் எட்டனுள் எதிலுமே சிவஞான போதம் மொழி பெயர்ப்பு நூல் என்பதாகக் கூறவில்லை. சிவப்பிரகாசத்தில் (செய்யுள் 11) தமக்கு முன்னிலிருந்த குரவர்கள் இயற்றிய நூல்களின் பெயர்களை மட்டுமே குறிக்கின்றார்.

எனவே, சிவஞான போதம் தமிழ் முதல் நூலே ஆகும். அதன் கருத்துக்களை வடமொழியுலகிற்கு எடுத்துக் காட்டியவர் அதனை மொழிபெயர்த்து, அதற்குச் சிறப்பிடம் தருவதற்காக ரௌரவாகமத்தில் பாசமோசனப் படலத்தின் ஒருபகுதி என்று குறிப்பிட்டிருக்கலாம்.[14] இக்கருத்து வலுவடைந்து சிவாக்கிர யோகிகள் காலத்தில் ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கலாம். எனவே, அவர் அதனை அப்படியே ஏற்றுக் கொண்டிருக்கலாம். பின்வந்தோரும் அதனைப் பின்பற்றியிருக்கலாம்.

மெய்கண்டார் இந்நூலின் மூலம் சைவ சித்தாந்த நெறிக்கு ஆற்றிய பணி, அத்துவைத நெறிக்கு ஆதிசங்கரரும், விசிஷ்டாத்துவைத நெறிக்கு இராமாநுசரும் ஆற்றிய பணிக்கு ஈடானதாகும்.

## அடிக்குறிப்புகள்

1. South Indian Inscriptions. Vol VIII p. 74

2. Epigraphica Indica. Vol. VIII, பக். 268.

இது தமிழிலக்கிய வரலாறு, பக்கம் 27-இல் காட்டப்பட்டிருக்கிறது. அந்நூலாசிரியரான பண்டாரத்தார், ஊருடைய பெருமாள் என்பதும், எடுத்தது வலிய வேளார் என்பதும் மெய்கண்டாருக்கு வழங்கப்பட்ட பட்டங்கள் என்று கருதுகிறார்.—மேற்படி நூல். ப. 28.

3. மு. அருணசலம், 'சித்தாந்தம்' இதழ். Vol. 40, No. 7. பக். 169—173.

4. சூத்திரம் 3, அதிகரணம் 6, செய்யுள் 1; மாபாடியம்,— ப. 300.

5. சூத்திரம் 6, அதிகரணம் 1, செய்யுள் 1; மாபாடியம்— ,, 361,
சூத்திரம் 6, அதிகரணம் 2, செய்யுள் 1; மாபாடியம்— ,, 367.

6. சூத்திரம் 6, அதிகரணம் 2, செய்யுள் 2; மாபாடியம்— ,, 369.

7. சூத்திரம் 8, அதிகரணம் 3, செய்யுள் 1; மாபாடியம்— ,, 444,
சூத்திரம் 10, அதிகரணம் 2, செய்யுள் 4; மாபாடியம்— ,, 483.

8. சங்க இலக்கியமாகிய குறுந்தொகையில் பதின்மூன்று புலவர்கள் தாம் தம் கவிதைகளில் பயன்படுத்திய சொற்ருெடர்களையே பெயராகப் பெற்றிருக்கிருர்கள். இதனுல் அவர்களுடைய இயற் பெயர்கள் மறந்தும் மறைந்தும் போய் விட்டன. 'செம்புலப் பெயல் நீரார்' (40); 'நெடுவெண்ணிலவினர்' (47); 'மீனெறி தூண்டிலார்' (54); 'விட்ட குதிரையார்' (74); 'ஓரேருழவனுர்' (131); 'கல்பொரு சிறு நுரையார்' (290); 'குப்பைக் கோழியார்' (305); 'பதடிவைகலார்' (323); 'கவைமகன்' (324); 'கங்குல் வெள்ளத்தார்' (387); 'குறி இறையார்' (394).

9. பாண்டிப் பெருமாள் விருத்தியுரை — மெய்கண்ட சாத்திரம், ப. 23-இல் காட்டப்பட்டது.

10. 'பொய்கண்டார் காணுப் புனிதமெனும் அத்துவித
மெய்கண்ட நாதன்' — எந்நாட்கண்ணி, 2. 4.

11. வி. பொன்னையா, முற்கூறிய நூல், ப. 24.

12. நியாயாமிர்தம் என்னும் பிற்கால நூலை மேற்கோளாகக் காட்டுவதால் பௌஷ்கர பாஷ்யத்தை இயற்றியவர் உமாபதி சிவாசாரியாராக இருப்பதற்கில்லை என்று அறிஞர் கூறுவர் — பார்க்க, டாக்டர் கே. சிவராமன், மேற்கூறிய நூல், ப. 50.

13. மறைமலையடிகள்-சைவசித்தாந்த ஞான போதம்
கா. சுப்பிரமணிய பிள்ளை — மெய்கண்டாரும் சைவசித்தாந்தமும்
ம. பாலசுப்பிரமணிய முதலியார் — சிவஞானபோதம் தமிழ் முதல் நூலே.
டாக்டர். சோமசுந்தர பாரதியாரும் இதுபற்றி ஒரு கட்டுரை எழுதியுள்ளார்.

14. இப்பொழுது கிடைக்கக்கூடிய ரௌரவாகமத்தின் கையெழுத்துப் படிகளுள் அப்படி ஒரு படலம் இல்லை என்று கூறப்படுகிறது.

# 7. அருணந்தியின் விளக்கம்

## சித்தாந்த வளர்ச்சியும் பிறசமய நெறிகளும்

பிரம்ம சூத்திரத்தைப் போலவே சுருங்கிய வடிவிலமைந்த சிவஞான போதம் சைவசித்தாந்த நெறியின் கோட்பாடுகள் அனைத்தையும் முறையாகவும் படிப்படியாக வும் எடுத்துக் கூறியது. முன்னுளிலிருந்த புலவர்கள் கோட்பாடுகளையும் வாதங்களையும் சுருங்கிய சூத்திரங்களில் எடுத்துக் கூறியது போல, அவ்விலக்கிய மரபு கெடாமல் மெய்கண்டாரும் அதே முறையைப் பின்பற்றினர். ஒரு நீண்ட விவாதத்தை அடுத்தே அதன் முடிவுகளைத் தெரிவிப்பதாகச் சூத்திரம் அமைகிறது. சமயசாத்திரம் ஒன்றை விருத்தப்பாவில் முதன்முதலாக எடுத்துக் கூறிய பெருமை அருணந்தி சிவாசாரியரையே சாரும். தம் ஆசிரியர் கூறியவற்றை அவர் விரிவாக்கி எடுத்து விளக்கினர் என்பதே பொருந்தும்.

அருணந்தி சிவாசாரியரைப்பற்றி மரபுவழிக் கதை கூறுவதாவது: அருணந்தி சிவாசாரியருடைய மற்றெரு பெயர் திருத்துறையூர் சதாசிவ சிவாசாரியர் என்பதாகும்.[1] வேதங்கள், ஆகமங்கள், பன்னிரு திருமுறைகள் ஆகியவற்றில் மிகச் சிறந்து விளங்கியமையால் அவர் 'சகலாகம பண்டிதர்' என்று வழங்கப்பட்டார். அவர் மெய்கண்டாரின் குலகுருவாக விளங்கியவர். மெய்கண்டாரின் தந்தையார் ஆகிய அச்சுதகளப்பாளர் தமக்குக் குழந்தையில்லாத குறையை அவரிடம் கூறினர். அவர் திருமுறையில் கயிறு சார்த்திப் பார்த்து, 'திருவெண்காட்டில் திருமுக்குள நீரில் மூழ்கி இறைவனை வழிபட்டால் குழந்தை பிறக்கும்' என்ருர். அவ்வாறு செய்தபிறகு தோன்றிய குழந்தைக்கு அவ்வூர் இறைவன் பெயராகிய "சுவேதவனப் பெருமாள்" என்பது சூட்டப்பட்டது. அவரே பின்னர் 'மெய்கண்டார்' ஆயினர்.

சகலாகம பண்டிதர் நீண்ட நாட்களாகத் தம்மை வந்து காணுதிருந்த சீடரைப் பார்ப்பதற்காக அங்கே சென்ருர். அப்போது மெய்கண்டார் ஆணவ மலத்தைப் பற்றிக் கூறிக் கொண்டிருந்தார். சகலாகம பண்டிதர் தம்முடைய கல்விப் பெருமையால் அவரை நோக்கி, ஆணவத்தை விளக்குமாறு கேட்டார். மெய்கண்டார் சகலாகம பண்டிதரையே சுட்டிக் காட்டினுர். இதுவே பின்னவருக்குக் கிடைத்த குருஉபதேசம் ஆயிற்று. குலகுருவாக விளங்கி வந்தவர், தம் சீடருக்கே மாணவரானுர். அவர் பெயரே பின்னர் அருணந்தி சிவாசாரியார் என ஆயிற்று. சைவாகமங்களை ஆழ்ந்து பயின்ற ஒருவர், அவ்வாகமங்களை ஐயந்திரிபற அறிந்து கொள்ளக் குரு உபதேசம் தேவைப்பட்டது. அவர் எழுதிய நூல்களாகிய சிவஞான சித்தியாரும், இருபா இருபஃதும் அவரது ஆகம அறிவின் பரப்பையும் ஆழத்தையும் எடுத்துக் காட்டுகின்றன. இப்பயிற்சியால்தான், வேதங் களின் கருத்துக்களை ஏற்றுக் கொள்கின்ற சமயங்களுக்கும், அவற்றை ஏற்றுக் கொள்ளாத சமயங்களுக்குப், சைவ சித்தாந்தத்திற்கும் இடையே உள்ள ஒற்றுமை வேற்றுமை களை அவரால் நன்கு எடுத்துக் கூற முடிந்தது.

சிவஞான சித்தியார், பரபக்கம் (பரப்ட்சம்); சுபக்கம் (ஸ்வபட்சம்) என்னும் இருபகுதிகளைக் கொண்டது. பரபக்கம் வேற்றுச் சமயக் கருத்துக்களை எடுத்துக்கூறி, பிறகு அவற்றை மறுக்கிறது. அவ்வாறு மேற்கொண்டு, பிறகு மறுத்துரைக்கப்படும் சமய நெறிகளாவன:- (1) உலகாயதம்; (2) நால்வகை பௌத்தம் — அவையாவன: சௌத்திராந்திகம், யோகாசாரம், மாத்யமிகம், வைபாடிகம் (வைபாஷிகம்), (3) இருவகைச்சமணம் — அவையாவன: நிகண்டவாதம், ஆசீவகம்,[2] (4) மீமாம்ச நெறியின் இரு பிரிவுகள் — அவையாவன: பட்டாசாரியன் மதம், பிரபாகர மதம், (5)ஏகான்ம வாதத்தின் முப்பிரிவுகள் — அவையாவன: சத்தப் பிரம்ம வாதம், மாயா வாதம், பாஸ்கரிய வாதம், (6) சாங்கியம், (7) வைணவர்களின் பாஞ்சராத்திரம்.

சைவ சித்தாந்தத்தை அடிப்படையாக வைத்துக் கொண்டு, அதிலிருந்து விலகி இருக்கின்ற இடைவெளியின் அடிப்படையில் அருணந்தி சிவாசாரியார் இந்தச் சமய நெறிகளை அமைத்திருக்கிருர். கடவுளை ஏற்றுக் கொள்ளாத சமயங்கள் முதலில் எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கின்றன. கடவுளுக்கு வேருக ஏற்றுக் கொள்ளப்பட்ட பொருள்கள் — உலகப் பொருள்கள் (உலகாயதம்), விதி, (பௌத்தம்), கருமம் (சமணம்), ஊழ் (ஆசீவகம்) — இவை ஏற்றுக் கொள்ளப்பட்டுப் பரிசீலனை செய்யப்பட்டு, பிறகு மறுத்து ஒதுக்கப்படுகின்றன. சநாதன நெறியில் பூர்வமீமாம்சை கடவுளை ஏற்றுக் கொள்வதில்லை. எனவே, அது அடுத்த படியாக எடுத்துக் கொள்ளப்படுகிறது. வேதங்களை ஏற்றுக் கொள்வதும், மறுப்பதும் இச்சமயங்களின் வேற்றுமையாக அமைகிறது. வேதங்கள் முத்திக்கு வழி காட்டுகின்றன. வழிகாட்டுபவன் இல்லாமல் வழியை அறிதல் இயலாது. முதல் மூவகை நெறிகளும் வேதங்களை ஏற்றுக் கொள்வதில்லை. சநாதன நெறிகளோ வேதங்களை இறைவன் அருளியதாக ஏற்றுக் கொள்கின்றன. கடவுளை மையமாக வைத்து வேதங்களை ஏற்றுக் கொள்வதாலை இறைவன் அருளிய பிற நூல்களையும் வேதங்களுக்கு இணையாக ஏற்றுக் கொள்ள வேண்டும். வைணவர்கள் வேதங்களை ஒத்துக் கொள்வதோடு பாஞ்சராத்திரத்தையும் ஒப்புக் கொள்கிருர்கள். எனவே அது இறுதியாகப் பரிசீலிக்கப் படுகிறது.

சிவஞான சித்தியாரின் பரபக்கத்தில் இந்தப் பதினன்கு சமயப் பிரிவுகளின் கொள்கைகளையும், அவற்றிற்குச் சைவ சித்தாந்திகள் கூறும் மறுதலையையும் காணலாம். சித்தியார் சுபக்கத்துக்கு உரையெழுதிய அறுவரில் ஒருவரான மறைஞான சம்பந்தர், இப்பரபக்கம், பின்வரும் நூல்களின் அடிப்படையில் எழுதப்பட்டது என்று கூறுகிருர்.[3] (1) சங்கராசாரியர் இயற்றிய சர்வதரிசன சங்கிரகம்,[4] சர்வ மதோபந்நியாசம், (3) இராமநாதாசாரியர் இயற்றிய

பரமத நிராகரணம், (4) சர்வாத்ம சம்பு இயற்றிய சித்தாந்த தீபிகை, (5) அகோர சிவாசாரியர் இயற்றிய சித்தாந்தார்த்த சமுச்சயம்.

இந்தப் பதினான்கு நெறிகளும் புறச்சமயத்தைச் சார்ந்தவை. அருணந்தி செய்து காட்டிய இதே முறையைப் பின்பற்றி உமாபதி சிவாசாரியரும் தமது சங்கற்ப நிராகரணத்தில் அகச்சமயப் பிரிவுகளின் கொள்கைகளை எடுத்துக் கூறி மறுக்கிறார்.

அருணந்தி சிவாசாரியர் தமது சிவஞான சித்தியாரில், சைவசித்தாந்த நெறியின் கொள்கைகளை எடுத்து விளக்கி இருக்கிறார்; அதே நேரத்தில் பிறசமய நெறிகளை மறுத்திருக்கிறார். அவற்றை ஒருசேரச் சொல்லாமல், நூலினை இரு பகுதிகளாக்கி, முதல் பகுதியில் பிறசமயங்களை மறுத்தும், இரண்டாம் பகுதியில் சைவ சித்தாந்த நெறிகளை விளக்கியும், முதற்பகுதியில் எழுப்பிய வினாக்களுக்கு விடையளித்தும் பிறநெறிகளில் இல்லாத கருத்துக்களை இட்டு நிரப்பியும் விளக்குகிறார். இந்த இரண்டு பகுதிகளும் தனித்தனியே கடவுள் வாழ்த்தைப் பெற்று, இரண்டு தனி நூல்களைப் போலிருந்தாலும், இரண்டும் பிரிக்க முடியாத ஒரு முழுமையான நூலினைப் போல் உள்ளது.

அதாவது, பரபக்கத்தின் தொடர்ச்சியாக உள்ள சுபக்கம் ஒரு தனி நூலாகவே அமைந்துள்ளது. 'மெய்கண்டான் நூல் சென்னியில் கொண்டு சைவத் திறத்தினைத் தெரிக்கலுற்றும்' என்று கூறியவாறே அருணந்தி இந்நூலைச் சிவஞான போதத்தின் அடிப்படையில் அமைத்திருக்கிறார். சிவஞான சித்தியார், சிவஞான போதத்துக்குச் செய்யுள் வடிவிலமைந்த ஓர் உரையாக அமைந்திருந்தாலும், அதனை வழிநூலாகவே சைவ மரபு ஏற்றுக் கொண்டிருக்கிறது. என்றாலும் அதில் ஓர் தனித்தன்மையும், சுயேச்சையான கட்டமைப்பும் உண்டு. அளவையியல் முதலில் கூறத்

தொடங்கியிருப்பது அந்நூலாசிரியர் 'அளவையின் அடிப் படையில் அமைந்ததொரு தேர்ந்த நெறி சைவ சித்தாந்தம்' என்பதை நிரூபிக்கும் வகையில் அமைந்துள்ளது.

சிவஞான சித்தியார் என்னும் தலைப்பே முதல் நூலாகிய சிவஞான போதத்திலிருந்து எடுக்கப்பட்டதாம். 'சிவஞானம்' என்பது வழியுமாய்ப் பயனுமாய், அவற்றை அறியும் அறிவுமாய், சிற்றறிவாய் (அபரஞானம்), முத்தியாய் (பரஞானம்) அமைந்தது. 'சித்தி' என்பது உண்மைப் பொருளை நிறுவுதல் ஆகும். (இதனை 'உண்மை சாதித்தல்' என்று தாயுமானவர் எந்நாட்கண்ணியில் குறிப்பிடுகிறார்) ஆகவே இந்நூலின் தலைப்பு, சைவாகமங்களில் உள்ள பல்வேறுபட்ட ஞான பாதக் கருத்துக்களின் உண்மைப் பொருளை ஆய்ந்து நிறுவுதல் என்று பொருள்படும்.

இந்நூலின் சிறப்புக்களாவன :–

(1) அளவை இயல்: இதில் அளவைகள் விளக்கப்படு கின்றன. (2) சிவபெருமான் பெருமை நிறுவப்படுகிறது. சிவன் ஆறு சமயங்களின் தலைவன்; ஒவ்வொரு சமயத்திற்கும் தனித்தனியே உண்மைப் பொருளானவன்; வேதங்களுக்கும் ஆகமங்களுக்கும் அப்பாற்பட்டவன். அறிவின் ஊற்றுக்கண். அம்மையும் அப்பனுமாய் எங்கும் நிறைந்திருக்கிறான். எந்தத் தெய்வத்தை வழிபட்டாலும் 'அத்தெய்வமாகி யாங்கே மாதொரு பாகனார் தாம் வருவர்; வேதனைப்படும் இறக்கும் பிறக்கும் மேல்வினையும் செய்யும்' (செய்யுள் 115) ஆனால் சிவனே இவை இல்லாதவன். (3) சைவ நெறியின் பெருமை பேசப்படுகிறது. புறச்சமயங்களில் சில, அகச் சமயத்தில் புகுந்து, பின்னர் ஸ்மிருதிகள் கூறும் வழிகளில் அலைந்து, திரிந்து, ஆச்சிரமப் பிரிவுகளுள் அடைந்து, தவங்களை இயற்றி, பல்வேறு கலைகளில் தேர்ந்து, வேதங் களையும் புராணங்களையும் ஓதி, உபநிடதப் பொருள்களை உணர்ந்து, இவ்வாறு பல்வேறு படிகளில் ஏறிப் (பல்வேறு பிறவிகளில்) பிறகே ஒருவன் சித்தாந்த மென்னும் உச்சியை

எட்டமுடியும். அங்குச் சரியை, கிரியை, யோகம் என்பவற்றை இயற்றி முடிவாகச் சிவநெறியை எய்துவான் (263). பிற சமயங்களும் முத்தி பற்றிக் கூறுகின்றன. சைவசித்தாந்தம் ஒன்று மட்டுமே சிவனடியைச் சேரும் முத்தியை, அதாவது உண்மையான முத்தியைக் கூறுகின்றது (264). உலகில் பேசப்படும் சமயங்களும் அவற்றின் உண்மைகளும், அவற்றை உணர்த்தும் நூல்களும் ஒன்றோடொன்று மாறுபட்டனவாய் உள்ளன. எனின், இவற்றுள் சிறந்த சமயம் எது? சிறந்த நூல் எது? இது பொருந்தும், இது பொருந்தாது என்னும் கலகம் இன்றி எல்லாக் கொள்கையும் தத்தமக்குரிய இடத்தில் முறையாகத் தன்னிடத்தில் நிற்கப் பெறும் சமயம் எதுவோ, அதுவே உண்மைச் சமயம். அதன் கொள்கைகளைக் கூறும் நூலே உண்மை நூல். இச்சமயக் கொள்கைகள் யாவும் வேதம், ஆகமம் என்னும் இரண்டில் அடங்கும். அவையிரண்டும் இறைவன் திருவடிக் கீழ் அடங்கும் (265). நால்வகை நெறிகளாகிய சன்மார்க்கம், தாசமார்க்கம், சத்புத்ரமார்க்கம், சகமார்க்கம் ஆகியன இந்நூலில் விளக்கப்படுகின்றன (270-274).

இந்நூலின் பெருமையை உணர்ந்த அறிஞர்கள் இதற்கு உயர்வுப் பன்மை விகுதியாகிய 'ஆர்' என்பதைச் சேர்த்து 'சிவஞான சித்தியார்' என்று வழங்கினர்கள்.[5] தருமபுர மடத்தை நிறுவிய குருஞானசம்பந்த சுவாமிகள் 'பார் விரித்த நூலெல்லாம் பார்த்தறியின் சித்தியிலே, ஓர் விருத்தப் பாதி போதும்' என்று இதன் பெருமையைக் கூறினர். இதே கருத்தைத் தாயுமானவரும் 'பாதி விருத்தத்தால் இந்தப் பார்விருத்தமாக உண்மை சாதித்தார் பொன்னடியைத் தான் பணிவதென்நாளோ' என்று கூறி வியந்தார். தமிழ் மொழியின் பெருமையையும் சிறப்பையும் புலப்படுத்தும் ஆறு நூல்களுள் சிவஞான சித்தியார் ஒன்று ஆகும். இந்நூல் சிறந்தது என்பது, 'சிவனுக்கு மிஞ்சிய தெய்வமும் இல்லை, சித்தியாருக்கு மிஞ்சிய சாத்திரமுமில்லை' என்ற பழமொழியால் உணரத் தகும்.

சிவஞான சித்தியார் தத்துவ விளக்க நூல் மட்டுமன்றி ஓர் இலக்கிய நூலுமாகும். அருணந்தி ஓர் தத்துவ அறிஞராகவும் கவிஞராகவும் திகழ்கிறார். தமிழ்மொழியில் தத்துவத்தைப் பற்றிய மிக விரிந்த செய்யுள் நூலாக இது விளங்குகிறது. நூலில் மொழி அமைதி, சொல்லமைப்பு, உவமை நலம் முதலியன மிக்கு விளங்குகின்றன.

சுபக்கத்திற்குப் பின்வரும் உரைகள் கிடைக்கின்றன. (1) சுவாமி ஞானப்பிரகாசர் உரை, (2) வெள்ளியம்பலத் தம்பிரான் சுவாமிகள் உரை (3) நிரம்ப அழகிய தேசிகர் உரை (4) மறைஞான தேசிகர் உரை (5) சிவாக்கிர யோகிகள் உரை (6) சிவஞான சுவாமிகள் உரை (7) சுப்பிரமணிய தேசிகர் உரை (இது சிவஞான சுவாமிகள் உரைக்கு விளக்கமாக அமைந்துள்ளது). இவையனைத்தும் 'அறுவர் உரை' என்னும் பெயரில் வெளியாகியுள்ளன.

சிவஞான சுவாமிகள் உரையை விரிவாக்கி T. முத்தையா பிள்ளை எழுதியிருக்கிறார். எம். திருவிளங்கம் என்பார் எழுதிய உரையும் இந்நூலுக்கு உண்டு. இவற்றோடு, தூத்துக்குடி சிவகுருநாத பிள்ளை எழுதிய சிவஞான சித்தியார் ஆராய்ச்சி (1949), டாக்டர் வ. ஆ. தேவசேனபதி எழுதிய சைவசித்தாந்தம் (ஆங்கில நூல், 1960) ஆகியவற்றையும் சேர்த்துக் கொள்ளலாம்.

அருணந்தி சிவாசாரியர் இயற்றிய மற்றொரு சாத்திர நூல் இருபா இருபஃது. இதில் 20 செய்யுட்கள் உள்ளன. ஒற்றைப்படை எண்ணுள்ளவை வெண்பா யாப்பிலும், இரட்டைப்படை எண்ணுள்ளவை ஆசிரியப்பாவிலும், அந்தாதித் தொடையில் அமைந்துள்ளன. இந்நூலில் தமது குருவாகிய மெய்கண்ட தேவரைச் சிவபெருமானாகவே கொண்டு சிவனுடைய பெருமைகளையும் செயல்களையும் அவர் மீது ஏற்றிப் பாடியிருக்கிறார்.[6] சிவஞான சித்தியாரில் கூறிய குரு வணக்கத்தால் மனநிறைவடையாத

அருணந்தி இந்நூலில் ஒவ்வொரு செய்யுளிலும் மெய்கண்டார் என்னும் பெயர் வருமாறு அமைத்து அமைதிகண்டார் என்று கூறுவர்.[7]

ஆணவ மலம், மாயா மலம், கன்ம மலம் ஆகியவற்றை இருபா இருபஃது விளக்குகிறது. ஆணவத்தின் எட்டுக் குணங்களும், மாயையின் ஏழு தன்மைகளும், கன்மத்தின் ஆறு இயல்புகளும் எடுத்து விளக்கப்பட்டுள்ளன. தேவாரத்தில் காணப்படும் சில தொடர்கள் இந்நூலில் மிக அழகாக விளக்கப்பட்டுள்ளன.[8] அதே பகுதியில் சில வினாக்களும் எழுப்பப்பட்டுள்ளன. இறைவன் உயிருடன் பிரிவற இருந்தால் ஆணவம் எவ்வாறு உயிரைப் பற்றியது? உயிர் இறைவனைப் பற்றியிருந்தபோது ஆணவம் அங்கு இல்லை என்பது ஆகுமா? குரு உபதேசத்தின் போது, இறைவன் எங்கே இருக்கிறான்? எவ்வாறு இருக்கிறான்? உயிரின் வேறாகவா, ஒன்றாகவா?[9]

ஆணவம், கன்மம், மாயை என்னும் மூன்று மலங்களின் செயல்கள் விரிவாகப் பேசப்படுகின்றன. தனிப்பட்ட தன்மை, வேட்கை, விரும்பியது கிட்டாதபோது உண்டாகும் கோபம், ஆணவம், இன்பதுன்ப நுகர்ச்சி இவை ஆணவத்தின் விளைவுகளாம். குழப்பம், பொய்ம்மை, மறதி, பொறுமை, அச்சம் முதலியவை மாயையின் செயல்களாம். இருத்தல், உறங்கல், செயல்மேற்செல்லல், பிறரைப் பழித்தல் முதலியன கன்ம மலத்தால் நிகழ்பவை. மலங்கள் அறிவற்றவை. எனவே அவை எவ்வாறு உயிரைக் கட்ட முடியும்? நஞ்சு தன் பணியைச் செய்து முடித்தவுடன் உடலை விட்டகலும். அதுபோல இவையும் நீங்க வேண்டும் என்கிறார் ஆசிரியர். இவை அறிவற்றவை. ஆகவே கட்ட மாட்டா. உயிர்/தானே கட்டுப்படாது. இறைவன் அநாதி முத்தன் (என்றுமே கட்டுப்படாதவன்); எனவே அவன் உயிரைப் பாசத்தோடு பிணித்திருக்க முடியாது. மலம் உயிரியல்பானது. அதனை அழிக்க முடியாது. எனவே, இந்தக் கட்டு எப்படி உண்டாகியது?[10]

ஐந்தவத்தைகள் எவ்வாறு தோன்றுகின்றன?[11] ஞானம் தோன்றும் பொழுது அறியாமை விலகுகிறது. அப்பொழுது தனித் தன்மை மறைந்து விட்டதால் உயிர் தன்னைத்தான் அறிய மாட்டாது. அது இறைவனெடு ஒன்றியிருத்தலாலே இறைவனையும் அறிய முடியாது. எனவே உயிர் தன்னை அறிவது எங்ஙனம்?[12]

உலகியலிலிருந்து வேறுபட்டவர்களோடு இறைவன் ஒன்றியிருக்கிறான். உலகியலிலே ஆழ்ந்து விட்டவர்களிடம் இருந்து விலகி நிற்கிறான். அவன் தானே வந்து, உயிரொடு கலந்து 'ஒன்ருகாமல் இரண்டாகாமல் ஒன்றும் இரண்டும் இன்ருகாமல் தன்னது பெருமையைத் தாக்காறுயினும் என்னது பெருமை எல்லாம் எய்தி...பேரா இன்பப் பெருங்கடலதனுள் ஆர இன்பம் அளித்து' நிற்கின்ருன்.[13]

சுருங்கச் சொல்லின், இருபா இருபஃது சைவ சித்தாந்தத்தின் அடிப்படைகளாகிய பதி, பசு, பாசம் என்பவற்றையும், அவற்றின் இயல்பையும் தொடர்பையும் இவை போன்ற பிறவற்றையும் எடுத்து விளக்குகிறது.

திருவாவடுதுறை மடத்தைச் சேர்ந்த நமசிவாயத் தம்பிரான் அவர்களும், சீகாழித் தத்துவராயரும் இந் நூலுக்கு உரையெழுதியிருக்கிருர்கள். தருமபுர ஆதீனம் இதனை உரைநடை வடிவில் வெளியிட்டிருக்கிறது.

## அடிக்குறிப்புகள்

1. தெ. ஆ. ஸ்ரீநிவாசாச்சாரியார், சிவஞானபோதமும் பன்னிரு திருமுறையும், 1959, ப. 85.

2. ஆசீவகமதம், சமணசமயத்தின் ஓர் உட்பிரிவாகக் கொள்ளப் பட்டது ஆனல் உண்மையில் அது மகாவீரர் காலத்திலோ அல்லது அவருக்கு முன்னதாகவோ இருந்த ஒரு கடவுள் மறுப்புக் கொள்கை யாகும் — பார்க்க A. L. Basham, History and doctrines of the Ajivikas. (1951).

3. பார்க்க - டாக்டர் தேவசேனபதி, முற்கூறிய நூல், ப. 5.

4. 'இந்நூலின் ஆசிரியர் சங்கராசாரியர் அல்லர்; சாயன மாதவர் ஆவார்' என்பது ஒரு சாரார் கருத்து.

5. ஒருசில நூல்களே இப்பெருமைபெற்றுள்ளன. (1) திருவுந்தியார். (2) திருக்களிற்றுப்படியார் (இவையிரண்டும் சாத்திர நூல்கள்) (3) திருவுந்தியார் (4) திருக்கோவையார் (இவையிரண்டும் மாணிக்கவாசகர் அருளியவை) (5) நாலடியார்

6. இவரையொட்டி உமாபதி சிவாசாரியாரும் தமது குருவாகிய மறைஞான சம்பந்தர் மீது, அவரைச் சிவபெருமானுகவே கண்டு போற்றிப் பஃறெருடை, நெஞ்சு விடுதூது என்னும் இருநூல்களைப் பாடியிருக்கிருர்.

7. சைவசித்தாந்த வரலாறு, ப. 45.

8. 'இருநிலம் தீ நீர் இயமானன் கால் எனும் பெருநிலை'— செய்யுள் 2, அடி 14-15; 'காண்பார் யார்கொல் காட்டாக்கால்' - மேற்படி அடி. 31.

9. செய்யுள் 2.

10. செய்யுள் 4.

11. செய்யுள் 6, 7.

12. செய்யுள் 8, 9.

13. செய்யுள் 20.

# 8. உமாபதியின் கைவண்ணம்

## சைவசித்தாந்தமும் அகச் சமயங்களும்

மெய்கண்டாரின் முதல் மாணக்கர் அருணந்தி சிவாசாரியர் ஆவார். அவர் புறச் சமயங்களொடு ஒப்பிட்டுச் சைவ சித்தாந்தத்தை விளக்கினர் மற்ருெரு மாணவராகிய மனவாசகங் கடந்தார் திருவதிகையைச் சேர்ந்தவர். அவருடைய 'உண்மை விளக்கம்' மற்ருெரு சாத்திர நூலாகும். நூலாசிரியருக்கும் அவருடைய குருவுக்கும் இடையே நடக்கும் உரையாடல் போல் இந்நூல் அமைந்துள்ளது. 'வண்மை தரும் ஆகமநூல் வைத்த பொருள் வழுவா உண்மை விளக்கம்' என்று கூறியதற்கேற்ப இது ஆகமப் பொருள்களை எடுத்துக் கூறுகிறது; 36 தத்துவங்களையும், ஆணவம் கன்மம், என்னும் இரண்டு மலங்களையும் விளக்குகிறது. இறைவனுடைய நடனத்திற்கும் திருஐந்தெழுத்துக்கும் விளக்கம் தருகிறது. அத்துவித முத்தியைப் பற்றியும் அடியார்களையும் குருவையும் எவ்வாறு போற்ற வேண்டும் என்பதைப் பற்றியும் கூறுகிறது.

திருவைந்தெழுத்தே வேதமும் ஆகமமும் புராணமும் ஆகும்; அதுவே இறைவனுடைய தாண்டவமும் 36 தத்துவங்களுக்கு அப்பாலான முத்தியும் ஆகும்.[1] இறைவனுடைய திருவடியே நமக்குக் கதியாகும். அது மாயையை விலக்கி வினையைச் சுட்டு ஆணவத்தின் செயலை ஒழித்து, ஆன்மாவை ஆனந்தவாரிதியில் அழுத்துகிறது.[2] இறைவனுடைய நடனம் ஐந்தொழில்களைக் குறிக்கிறது. உடுக்கையிலே உலகத் தோற்றம் நிகழ்கிறது. கையில் (அபயகரம்) காக்கும் நிலை அமைந்துள்ளது. தீயிலே அழிவும், ஊன்றிய திருவடியில் மறைப்பும், தூக்கிய திருவடியில் அருளும் (முத்தி) அமைந்துள்ளன. இந்த நடனம் ஐந்தெழுத்தையும்கூடக் குறிக்கிறது. திருவடியில் 'ந', வயிற்றிலே 'ம', தோளிலே 'சி',

முகத்திலே 'வ', திருமுடியிலே 'ய'.[3] வேறொரு விதமாகவும் இது விளக்கப்படுகிறது. துடியிலே 'சி', வீசிய கையிலே 'வ', உயர்த்திய (அபய) கரத்திலே 'ய', தீயிலே 'ந', ஊன்றிய திருவடியிலே 'ம'.[4]

இந்நூலில் 53 வெண்பாக்கள் உள்ளன. இதில் ஆறு வினாக்கள் எழுப்பப்படுகின்றன. அந்த ஆறு வினாக்களுக்கான விடைகள் சைவசித்தாந்தக் கொள்கைகளாக அமைகின்றன.

இந்த நூலுக்கு இரண்டு உரைகள் உண்டு. உரையாசிரியர்களின் பெயர் தெரியவில்லை. தருமபுர ஆதீனம் இந்த நூலை உரைநடை வடிவில் வெளியிட்டிருக்கிறது.

அருணந்தி சிவாசாரியரின் மாணவர் மறைஞான சம்பந்தர். அவருடைய மாணவர் உமாபதி சிவாசாரியர். சாத்திர நூல்கள் பதினான்கனுள் எட்டு, உமாபதி சிவம் இயற்றியவை. அருணந்தி தமது சிவஞான சித்தியாரில் பரபக்கம், சுபக்கம் என்னும் இரு பிரிவுகளில், முதலாவதில் புறச்சமயங்களை எடுத்தோதி மறுத்தும், பின்னதில் சைவ சித்தாந்தக் கொள்கைகளை விளக்கியும் எழுதினார். உமாபதிசிவம் இந்த முயற்சியை முற்றுவிப்பதே போலச் சங்கற்ப நிராகரணம், சிவப்பிரகாசம் என்னும் இரு நூல்களை வழங்கினார். முதல்நூல் மாயாவாதக்கொள்கைகளையும் அகச்சமயக் கொள்கைகளையும் மறுக்கிறது. முதலில் கூறப்படும் சமயத்தை இரண்டாவதாக அமைக்கப்பட்டுள்ள சமயமும், இரண்டாவதை மூன்றாவதாக வரும் சமயமும் மறுக்கின்றன. நூல் முழுதும் இவ்வாறே அமைந்துள்ளது. இறுதியாக உள்ள சைவவாதம், சைவசித்தாந்த அடிப்படையில் மறுக்கப்படுகின்றது. சைவ சித்தாந்தத்தின் உண்மைகள், தனியே, இரண்டாம் நூலாகிய சிவப்பிரகாசத்தில் விளக்கப்படுகின்றன.

தத்துவத் துறையில் வல்லவரான உமாபதிசிவம் சங்கற்ப நிராகரணத்தை அமைத்த அழகே அழகு. அதில் குறிக்கப்பட்டுள்ள சமயங்களாவன: (1) மாயாவாதம்,

(2) ஐக்கியவாதம், (3) பாடாணவாதம், (4) பேதவாதம், (5) சிவசமவாதம், (6) சங்கிராந்தவாதம், (7) ஈசுவர அவிகாரவாதம், (8) நிமித்தகாரண பரிணாமவாதம், (9) சைவ வாதம். இவை முறையே, முன்னதை மறுப்பதோடு அமையாமல் அதனினும் சிறந்து விளங்குகின்றன.

அருணந்தி, சித்தியார் பரபக்கத்தில் மாயாவாதத்தை எடுத்து ஆய்ந்தார். அதையே உமாபதிசிவம் சங்கற்ப நிராகரணத்தில் மீண்டும் எடுத்துக்கூற நினைத்தது ஏன்? மாயாவாதம், அதன் கொள்கையான 'தோற்றம்' (மாயா) என்ற அடிப்படையில் அப்பெயரைப் பெற்றுவிட்டது. மாயாவாதக் கொள்கைப்படி, மாயை 'எடுத்துக் கூறுணாதது' (அநிர் வசனீயம்). சைவ சித்தாந்தத்திலோ அஃது ஓர் உண்மைப்பொருள். சித்தாந்தத்தில் வரும் ஆறு அடிப்படைப் பொருள்களில் அதுவும் ஒன்று.[5] எனவே சித்தாந்தத்தில் வரும் மாயை, மாயாவாதத்தில் வரும் மாயையினின்றும் வேறுபட்டது. மேலும் உமாபதி சைவ சித்தாந்தத்தை 'வேதாந்தத் தெளிவாம் சைவ சித்தாந்தம்'[6] என்று கூறி, வேதாந்தத்துக்கும் சைவ சித்தாந்தத்துக்கும் உள்ள தொடர்பைக்காட்டுகிறார்.

மாயாவாதம் அத்துவைத நெறியென்றும் வழங்கப்படுகிறது. சைவ சித்தாந்தம் அத்துவைதத்தைப் பற்றிப் பேசுகிறது. 'அத்துவைதம்' என்னும் தொடர் வேதத்தில் உள்ளது. எனவே வேதத்துக்கு (உபநிடதங்களுக்கு) உரையெழுதப் புகுந்த ஒவ்வொரு தத்துவ நெறியாரும் அந்தத் தொடருக்கு விளக்கம் தர வேண்டி வந்தது. மாயாவாதம் உட்பட்ட பல நெறிகள் அத்துவைதம் என்ற சொல்லுக்கு 'இன்மை'ப் பொருள் கொண்டன. அதாவது 'இரண்டு இன்மை' என்பது. இது, இரண்டாவதாக ஒன்று இல்லை என்பதைக் குறிக்கும். எனவே 'ஒன்று' என்று கொண்டன. துவைத மதம் 'விரோத'ப் பொருளில் அத்தொடரைக் கண்டது. அதாவது இரண்டு இல்லை என்றால் ஒன்று என்பது பொருள்.

சைவ சித்தாந்தம் இந்த எதிர்மறைத் தொடருக்கு 'அன்மை' (அந்நியத்துவம்) என்னும் பொருளைக் கொண்டது. அத்துவைதம் என்பது 'ஒன்றே' என்பதைக் குறிக்காமல், 'இரண்டு அன்மை' (அநந்யத்துவம்) என்பதையே காட்டும் என்பது சித்தாந்தக் கருத்து. 'இரண்டன்மை' என்பது இரண்டு என்பதற்கு மறுப்பல்ல. இரண்டன் இரண்டாந் தன்மைக்கு மறுப்பு'.[7] எனவே அத்துவைதம் என்னும் தொடர், இரண்டாவதாகிய ஒரு பொருள் இல்லை என்பதையோ, உண்டு என்பதையோ கூறவில்லை; அது இரண்டாவதாகிய பொருளுக்கு (த் தனித்து நிற்கும்) இரண்டாந் தன்மை இல்லை என்பதையே குறிக்கும்.[8] சித்தாந்தநெறி தமிழகத்திலும் தமிழ்மொழியிலும் தோன்றியது ஆகும்.[9] எனவே, அன்மை (தன்மை மறுப்பு – Negation of quality), இன்மை (உண்மை மறுப்பு – Negation of existence) என்னும் இரு சொற்களையும் சித்தாந்தம் பயன்படுத்துகிறது.

இவ்விரு சொற்களும் திருமுறை ஆசிரியர்களாலும் ஆளப்பட்டவை. எடுத்துக்காட்டாக 'ஒன்று நீ அல்லை அன்றி ஒன்றில்லை' (திருவாசகம்). ஆகவே அத்துவைதத்தில் சித்தாந்தம் 'அன்மை'யைக் கண்டு, அவ்வாறே பொருள் கொள்கிறது. ஏனெனில் இறைவன் எங்கும் நிறைந்தவன் — (வியாபகன்); எல்லாப் பொருள்களும் அதனுள் அடங்கி இருக்கின்றன – (வியாப்பியம்). எனவே இரண்டு என்று கொள்வதற்கு அடிப்படையான இரண்டாந்தன்மை என்பதே மறுக்கப்பட்டு, இரண்டின் பிரிவற்ற தன்மை, உடனுந் தன்மை ஆகியவை உணர்த்தப்படுகின்றன.

மாயாவாதம், கேவலாத்துவிதம் என்று வழங்கப் படுகிறது. அதற்கு மாருகச் சித்தாந்தநெறி சுத்தாத்து விதம் என்று அழைக்கப்படுகிறது.[10] மெய்கண்டார் அத்துவிதம் என்னும் சொல்லுக்குப் பொருள் கண்டு அதன் அடிப்படையிலேயே இந்த நெறியை விளக்கினர்.[11] ஆகவே

உமாபதி (கேவலாத்துவித), மாயாவாதத்துக்கும் (சுத்தாத்துவித) சித்தாந்தத்திற்கும் இடையே இருந்த வேற்றுமையைக் காட்ட விரும்பினர்.

எனவே மெய்கண்டார் கண்ட சித்தாந்தநெறி, அருணந்தியால் உருவாக்கப்பட்டு, உமாபதியால் விளக்கம் பெற்றது எனலாம்.

## அடிக்குறிப்புகள்

1. செய்யுள் 34.
2. செய்யுள் 36.
3. செய்யுள் 35.
4. செய்யுள் 33.

5. ஏகன் அநேகன் இருள்கருமம் மாயையிரண் டாகஇவை ஆருதியில் — திருவருட்பயன் 6. 2.

6. சிவப்பிரகாசம்-7; 'வேதப்பயனும் சைவம்' என்று பெரியபுராணம் கூறியிருத்தல் காண்க (20. 9).

7. டாக்டர் சிவராமன், மேற்கூறியநூல், ப. 230.

8. மேற்படிநூல், ப. 231.

9. 'ஆகமச்சைவம் முக்கியமாகத் தமிழ் நாட்டுக்கே உரியது' — S. N. Dasgupta, The History of Indian Philosophy, 1962, VOL V, Page 18.

10. சுத்தாத்துவிதம் என்னும் ஒரு நெறியைத் தோற்றுவித்தவர் வல்லபாச்சாரியார் என்பதாக, வேருென்றைப் பற்றி K. A. நீலகண்ட சாத்திரியார் கூறுகிருர்-பார்க்க: Development of Religion in South India, ப. 93

11. 'பொய்கண்டார் காணப் புனிதமெனும் அத்துவித
மெய்கண்ட நாதன்' — தாயுமானவர், எந்நாட்கண்ணி.

## 1 சந்தான குரவர்

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகிய நால்வரையும் சைவ சமயத்துக்கு முதல்வர்களாகச் (சமயாசாரியர்கள் அல்லது சமயகுரவர்கள்) சைவர் கொண்டார்கள். அதேபோல மரபுக்கு முதல்வர்களாக (சந்தானுசாரியர்கள் அல்லது சந்தான குரவர்கள்) மெய்கண்டார், அருணந்திசிவாசாரியர், மறைஞானசம்பந்தர், உமாபதிசிவாசாரியர் ஆகிய நால்வரையும் கொண்டிருக்கிறுர்கள். நான்கு சமயகுரவர்களும் தம் பாடல்களில் வேதத்திலுள்ள ஞானபாதத்தை எடுத்துக் கூறினுர்கள். அதேபோல நான்கு சந்தான குரவர்களும் ஆகமங்களில் உள்ள ஞானபாதத்தைச் சித்தாந்த சாத்திரங்களில் எடுத்துரைத்தார்கள்.[12] இந்த மரபு வாய்மொழியாக ஆசிரியரிடமிருந்து மாணவருக்கு வழங்கப்பட்டது.[13]

வேதங்களும் ஆகமங்களும் தாமே தோன்றியவை. அதாவது மனிதனுல் இயற்றப்படாமல் இறைவனுல் வெளிப்படுத்தப்பட்டவை என்று சைவசித்தாந்தம் கூறுகிறது. இதனைத் திருமுறைகள் அப்படியே ஏற்றுக் கொண்டுள்ளன.[12] சிவபெருமான் ஆகமங்களின் உண்மையை (சிவஞானத்தை) நந்திதேவருக்கு அருளினுர். அவர் சத்தியஞான தரிசனிகளுக்குக் கூறினுர். அவர் பரஞ்சோதி முனிவருக்கு அந்த ஞானத்தை வழங்கினுர்.[13] இவர்கள், அதாவது இங்குக்கூறிய நால்வரும் 'அகச்சந்தானம்' எனவும், 'தேவ பரம்புரை' எனவும் வழங்கப்படுவர். சித்தாந்த மரபு இவ்வாறு தொடங்குகிறது.

பரஞ்சோதி முனிவர் இச்சிவஞானத்தை மண்ணுலகுக்குக் கொண்டு வந்தார். ஞானக்குழந்தையாகிய சுவேதவனப் பெருமாள் இச்சிவஞானம் பெறுதற்குரியவர் என்று கண்டு

அவருக்கு அதனை வழங்கினர். சுவேதவனப் பெருமாள் உண்மை உணர்ந்து மெய்கண்டாராயினர். அவர் தமது குலகுருவாகிய அருணந்தி சிவாசாரியருக்கு அதனைப் போதித்தார். மறைஞானசம்பந்தர் இந்த ஞானத்தைத் தமது குருவாகிய அருணந்தியிடமிருந்து பெற்றார். அவருடைய மாணவர் உமாபதிசிவாசாரியர். இந்நால்வரும் 'புறச் சந்தானம்' எனவும், 'பூதபரம்பரை' எனவும் அழைக்கப்படு கின்றனர். இவர்களால் உருவான சைவசித்தாந்தத் தத்துவ நெறி இப்போது வரலாற்றுக்குட்பட்ட உருவம் பெற்றது.

உமாபதிசிவாசாரியருடைய மாணவர் அருள் நமசிவாயர். அவருடைய மாணவர் சித்தர் சிவப்பிரகாசர். அவரைக் குருவாகக் கொண்டவர் நமசிவாய மூர்த்திகள். இவரே திருவாவடுதுறை ஆதீனத்தை நிறுவியவர்[14] உமாபதிசிவத்தின் ஆசிரியராகிய மறைஞானசம்பந்தரின் மற்றொரு மாணவர் மச்சுச் செட்டியார். அவர் வழியில் எட்டாவதாக வந்த மாணவர் குருஞானசம்பந்தர். அவர் தருமபுர ஆதீனத்தை நிறுவினர்.[15] இந்த நிலையில் சித்தாந்த மரபு ஓர் அமைப்புக்குள் அடங்கி நிற்கிறது. இந்த இரண்டு ஆதீனங்களின் வழியில் வருபவர்கள் 'அபிடேக பரம்பரை யினர்' என்று அழைக்கப்பட்டனர்.

மேற்கூறியவற்றிலிருந்து 'தேவபரம்பரைக்கும்' 'பூதபரம் பரைக்கும்' இணைப்பாக மெய்கண்டாரும், 'பூதபரம்பரைக் கும் 'அபிடேக பரம்பரை'க்கும் இணைப்பாக உமாபதியும் விளங்குவதைக்காணலாம். 'சந்தான குரவர்களில் நான்காமவ ராகத் திகழ்ந்த உமாபதி இயற்றிய நூல்கள் எட்டாகும். அவை சித்தாந்த சாத்திரங்கள் பதினன்கனுள் எட்டாக அமைகின்றன. அவை 'சித்தாந்த அட்டகம்' என்று வழங்கப்படும்.

உமாபதியின் ஆசிரியராகிய மறைஞானசம்பந்தர் சந்தான குரவர்களில் மூன்றாமவர். இவரைப் பற்றி விரிவாக ஏதும் கூற இயலவில்லை. உமாபதியின் வாழ்த்துச் செய்யுள்

களும், வேறுசில நூல்களுமே மறைஞான சம்பந்தரைப் பற்றிய ஓரிரு செய்திகளை அறிவிக்கின்றன. நூல் வடிவில் அவர் எதனையும் இயற்றவில்லை.

மறைஞானசம்பந்தர் மருதூரில் பிறந்தார்;[16] அவர் அந்தணர்; சாமவேதத்தினர்; பராசர கோத்திரத்தைச் சேர்ந்தவர்.[17] அவர் மறைகளில் வல்லவர்.[18] ஆகவே 'மறை' என்னும் அடைமொழி அவருக்கு வழங்கப்பட்டது.[19] அருணந்தி சிவாசாரியர் அவருக்கு உபதேசம் செய்தார்.[20] இவ்வுபதேசம் கடந்தை (திருப்பெண்ணுகடம்) என்னும் ஊரில் இடம் பெற்றது.[21] குருவிடம் உபதேசம் பெற்ற பிறகு அவர் சிதம்பரம் சென்று நடராசரை வழிபட்டுக் கொண்டு திருக்களாஞ்சேரி என்னுமிடத்தில் தங்கியிருந்தார். பிறகு அங்கேயே மறைந்தார்.[22] இம்மறைஞான சம்பந்தரிடம் உபதேசம் பெற்றவர் உமாபதிசிவாசாரியர்.[23]

உமாபதிசிவம் தமது குருவை 'மறைஞானசம்பந்தர்'[24] என்றும், 'சம்பந்தநாதன்'[25] என்றும், 'சம்பந்த மாமுனி'[26] என்றும், 'என் தம்பிரான்'[27] என்றும், 'ஆண்டருளும் சம்பந்த மாமுனிவன்'[28] என்றும், 'மருதச் சம்பந்த மாமுனிவன்'[29] என்றும் குறிக்கிறார்.

பக்குவம் பெற்ற உயிர்களுக்கு இறைவன் அருள் கொண்டு, வந்து வழிகாட்டுகிறான் என்பதாகச் சிவஞான போதத்தின் எட்டாம் சூத்திரம் சொல்கிறது. இதனைக் கருத்தில் கொண்டு உமாபதிசிவம் தம் ஆசிரியராகிய மறைஞான சம்பந்தரைச் சிவனெனவே கொண்டு சிவனுடைய செயல்களை அவர்மீது ஏற்றிப் பாடுகிறார். போற்றிப் பஃறொடை, நெஞ்சுவிடுதூது ஆகிய இரண்டும் இதை விளக்குகின்றன.

மறைஞான சம்பந்தர் நூல் ஏதும் இயற்றவில்லை. இது வழிவழியாக வந்த கொள்கை. எனினும் இவர் சதமணிக் கோவை என்னும் நூலை இயற்றினார் என்று சில அறிஞர்கள்

கருதுகின்றனர். ஆயின், உமாபதிசிவம் அதைப்பற்றிக் குறிப்பிடவில்லை. தமது சிவப்பிரகாச நூலின் பாயிரத்தில் தமக்கு முதல் நூலாக விளங்கியவற்றை ஆசிரியர் பெயருடன் குறிப்பிடுகின்றார்.

"தெரித்தகுரு முதல்வர்உயர் சிவஞானபோதம்
செப்பினர்பின் பவர்புதல்வர் சிவஞானசித்தி
விரித்தனர்.........அவையிரண்டும் விரும்பி நோக்கி
.........அருத்திமிக உரைப்பன்.........ஆசில்
சிவப்பிரகாசம்........." (11)

என்பது அச்செய்யுள். மேலும் போற்றிப் பஃறொடை, நெஞ்சுவிடுதூது ஆகிய இரண்டும் மறைஞான சம்பந்தரின் பெருமைகளைக் கூறுவதற்காக எழுந்தவை. மறைஞான சம்பந்தர் நூலேதும் இயற்றியிருந்தால் அவற்றில் அது இடம் பெற்றிருக்க வேண்டும். எனவே அவர் நூலேதும் இயற்றவில்லை என்று கொள்வதே பொருந்தும்.

உமாபதிசிவாசாரியர் சந்தானசாரியர்களில் நான்காமவரும் கடைசியானவரும் ஆவார். புலவர் புராணம், சைவ சுந்தானசாரியர் புராணம், பின்னர் வந்த புலவர்கள் பலர் எழுதிய வாழ்த்துச் செய்யுள்கள், தாயுமானரின் எந்நாட்கண்ணி முதலியவை உமாபதிசிவத்தின் வாழ்க்கையை எடுத்துக்கூறுகின்றன. அவையனைத்துமே சந்தானசாரியர்களில் அவர் கடைசியானவர் என்று குறிப்பிடுகின்றன.

உமாபதி சிதம்பரத்தில் தோன்றினார்.[30] சிதம்பரத்தில் இறைவனுக்குப் பூசை செய்யும் உரிமை பெற்ற தில்லை வாழ் அந்தணர்களில் ஒருவர். வடமொழி வேதாகமங்களிலும், தமிழ்த் திருமுறைகளிலும், இருமொழி இலக்கியங்களிலும் அவர் கற்றுத் துறை போகியவர்.

ஒருநாள் உமாபதி வழக்கம்போல் கோவில்பூசையை முடித்துவிட்டு வீடு திரும்பிக் கொண்டிருந்தார். அக்காலத்தில் அக்கோயில் பூசை புரிவோருக்கு அரசன்

அளித்திருந்த அதிகாரத்தின்படி குடை, கொடி, சாமரம், தீ வட்டி போன்றவைகளை ஏந்திப் பலர் உடன் வந்து கொண்டிருந்தனர். அப்போது 'பட்ட கட்டையில் பகற் குருடு ஏகுது பாரீர்' என்றொரு குரல் கேட்டது. தாம் பல்லக்கில் ஏறிச்செல்வதையும் முன்னால் தீப்பந்தம் ஏந்திச்செல்வதையும் குறித்தே இவ்வாறு கூறப்பட்டது என்பதை அவர் உணர்ந்தார். உண்மையான குருவைத் தேடிக் கொண்டிருந்த உமாபதி, பல்லக்கில் இருந்து குதித்து, அக்குரலுக்குரியவரைத் தேடிச் சென்றார். அவ்வாறு கூறியவர் மறைஞானசம்பந்தராவார். அவர் உமாபதியின் பக்குவத்தைச் சோதிக்க எண்ணி நெசவாளி கள் வாழ்ந்து வந்த ஒரு தெருவில் புகுந்து பாவுக்கு வார்க்கும் கஞ்சியைக் கையில் ஏந்திக் குடித்தார். உமாபதி சிறிதும் தயங்காமல், அவருடைய முழங்கை வழியே ஒழுகிய கஞ்சியைத் தம் கையால் வாங்கிப் பருகினார். மறைஞானசம்பந்தர் அவரைத் தம் சீடராக ஏற்றுக் கொண்டு உபதேசம் வழங்கினார். இதன்பிறகு, தில்லை மூவாயிரவர் அவரைச் சமூகத்தினின்றும், ஊரினின்றும் விலக்கி வைத்தனர். அவர் ஊருக்கு வெளியே இருந்த கொற்றவன்குடி என்னும் கிராமத்தில் ஒரு மடத்தை அமைத்துக் கொண்டு அங்கேயே வாழ்ந்து வரலானார். பின்னர் அவ்வூர் கொற்றங்குடி என வழங்கப்படலாயிற்று.[31]

உமாபதியின் பெருமையை உலகறியச் செய்யத் தில்லை நடராசர் விரும்பினார். அவரது ஒரு திருவிழாவின்போது விழாவிற்கு முன்னதாக ஏற்றப்படும் கொடி ஏறாமல் நின்றது. எந்த முயற்சியும் பயன்தரவில்லை. அனைவரும் கலங்கினர். அப்பொழுது 'உமாபதி வந்தால் கொடியேறும்' என்றோர் ஒலி கேட்டது. அனைவரும் சென்று உமாபதியைத் தக்க மரியாதையுடன் அழைத்து வந்தனர். அப்போது அவர் பாடிய நூல் 'கொடிக்கவி' ஆகும். பின்னர்க் கொடியும் ஏறியது; விழாவும் நடந்தது.

ஒருமுறை தில்லை நடராசர் உமாபதிசிவத்திற்கு ஒரு சீட்டு எழுதினர் :

'அடியார்க் கெளியன்சிற் றம்பலவன் கொற்றங்
குடியார்க் கெழுதியகைத் தீட்டு — படியின்மிசை
பெத்தான் சாம்பனுக்குப் பேதமற தீக்கைசெய்து
முத்தி கொடுக்க முறை.'

பெத்தான் சாம்பன் உமாபதியின் திருமடத்துக்கு விறகு கொடுத்து வந்தவன். உமாபதி அவனை அழைத்து நிர்வாண தீக்கை செய்ய, அவன் உடனே முத்தி பெற்றான். உமாபதி அவனைக் கொன்றுவிட்டதாக அரசனிடம் முறையிடப் பட்டது. அரசன் வந்து இந்த அற்புதத்தை மீண்டும் செய்து காட்டுமாறு கட்டளையிட்டான். முத்திக்குத் தகுதியானவர் யாரும் அக்கூட்டத்தில் இல்லாமையால் அவர் அங்கு அபிடேகநீர் பாய்ந்து அதனால் வளர்ந்திருந்த ஒரு முள்ளிச்செடிக்கு உபதேசம் செய்ய, அது மறைந்தது.

சைவ சந்தானசாரியார் புராணம் போன்ற நூல்களில் உமாபதியைப் பற்றி நாம் அறிய வரும் செய்திகள் இவை; ஆயின் இத்தகைய அற்புத நிகழ்ச்சிகள் பற்றிய குறிப்பு அவருடைய நூல்களில் இல்லை. அதேபோல அவருடைய வரலாற்றைப் பற்றிக்கூறும் நூலுமில்லை. எனவே அவருடைய வரலாற்றைப் பற்றி ஏதும் தெளிவாக அறிய முடியவில்லை. அவருடைய காலத்தைக் கணக்கிடுவதற்கு அவருடைய நூலிலிருந்து ஒரு குறிப்புக் கிடைக்கிறது. சங்கற்ப நிராகரணத்தில் 'ஏழஞ் சிறுநூ றெடுத்த ஆயிரம் வாழுநற் சகனம் மருவா நிற்ப .......... நவிற்றுவனே' என்பதிலிருந்து அந்நூல் இயற்றப்பட்ட ஆண்டு சாலிவாகனசகம் (கி. பி. 1313) என்று தெரிய வருகிறது. அதாவது உமாபதிசிவம் 13, 14-ஆம் நூற்றாண்டுகளில் வாழ்ந்தார் என்று உறுதியாகக் கூறலாம்.[32] இந்த ஆண்டை வைத்துக் கொண்டு பிற சாத்திர நூல்களின் காலத்தை நாம் கணக்கிட முடிகிறது.

## II உமாபதியின் உள்ளங்கவர்ந்த நூல்கள்

உமாபதிசிவம் ஒரு பெரும்புலவர். வடமொழி தென் மொழிகளில் வல்லவர். கோவிலில் பூசை செய்யும் உரிமை பெற்ற குடும்பத்தில் பிறந்தவராதலால் வேதங்களிலும், வேதாங்கங்களிலும், சைவாகமங்களிலும் பயிற்சி மிகுந்தவர். அவருடைய குருவாகிய மறைஞானசம்பந்தரும் வேத நூலறிஞர். 'மறை' என்பதே அவருக்கு அடையாக வழங்கியது. உமாபதிக்கு வேதாகமங்களில் ஆழ்ந்த பற்றும் அவை இறைவன் திருவாக்கு என்னும் நம்பிக்கையும் இருந்தன. வேதங்களை, 'இறைவன் நூல்' (சிவப்பிரகாசம், *11*), 'பெருநூல்' (சிவப்பிரகாசம், *17*), 'மெய்ஞ்ஞானப் புண்ணிய நூல்' (போற்றிப் பஃறொடை, வெண்பா), 'இறைநூல்' (சங்கற்ப நிராகரணம், *7*. அடி *36*) என்று குறிப்பிடுகிறார்.

*13, 14* — ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த உமாபதிக்கு முன்னால் வாழ்ந்த சங்கரரும் இராமாநுசரும் பிரம்ம சூத்திரத்திற்கு எழுதிய உரைகளைப் பயின்றிருந்தார். அதே நூலுக்கு *12* – ஆம் நூற்றாண்டில் ஸ்ரீகண்டர் எழுதிய உரையையும் அவர் கற்றிருக்கக் கூடும். இதனால் அவர் தம்முடைய நூலில் பிறசமயக் கருத்துக்களைத் தெளிவாக எடுத்துக்கூற முடிந்தது.

அவர் ஒரு பெருந்தமிழ்ப் புலவர். திருக்குறள் அவர் உள்ளத்தைக் கவர்ந்த ஒரு பெருநூலாகும். எனவே அவர் தமது திருவருட்பயனில் திருக்குறளின் யாப்பு, எண்ணிக்கை அமைப்பு, சொற்செறிவு ஆகியவற்றைப் பயன்படுத்தினார். திருக்குறள் நூல் நாற்பொருள்களில் அறம், பொருள், இன்பம் என்ற மூன்றையும் கூறுகிறது. திருக்குறளை நிறைவு செய்வார் போல, இறைவன் கருணையால் மட்டுமே எய்தக் கூடிய 'வீடு' என்னும் நான்காம் பொருளைப் பற்றித் தமது

திருவருட் பயனில் கூறுகிறார். திருக்குறளை அப்படியே எடுத்தாண்டிருக்கிறார்.[33] திருவள்ளுவரைத் 'தெய்வப் புலவர்' என்றும், அவர் மொழியை 'மெய்வைத்தசொல்' என்றும் கூறுகின்றார்.[34]

உமாபதி திருமுறைகளில் ஆழ்ந்த பயிற்சி உடையவர். எனவே திருமுறைகளின் கருத்தையும் தொடர்களையும் அவ்வாறே தம் நூல்களில் ஆள்கிறார்:

1. நுணுக்கரிய நுண்ணுணர்வே (திருவாசகம், சிவ புராணம்)
   பெருமைக்கும் நுண்மைக்கும் (திருவருட்பயன், 1.3)

2. பிரமன் மால்காணாப் பெரியோன் (திருவாசகம், திருஅண்டப்பகுதி)
   வானுடர் காணாத மன் (திருவருட் பயன், 1.7)

3. நண்ணினார்க் கென்றும் நல்லவன் தன்னை
   (சுந்தரர், 61. 7)
   சலமிலன் சங்கரன் சார்ந்தவர்க் கலால்
   நலமிலன் (அப்பர், 4. 11. 9)
   நலமிலன் நண்ணார்க்கு நண்ணினர்க்கு நல்லன்
   சலமிலன் பேர் சங்கரன் (திருவருட்பயன், 1. 9)

4. பிரான்அருள் உண்டெனில் உண்டுநற் செல்வம்
   பிரான்அருள் உண்டெனில் உண்டுநன் ஞானம்
   (திருமந்திரம், 1618)
   அருளின் பெரியது அகிலத்தில் வேண்டும்
   (திருவருட்பயன், 4.1)

5. வெள்ளத்துள் நாவற்றியாங்கு.........
   கள்ளத்துளேற்கு அருளாய் (திருவாசகம், நீத்தல் விண்ணப்பம்)
   வெள்ளத்துள் நாவற்றி யெங்கும் (திருவருட் பயன், 4.8)

6. சூரிய காந்தமும் சூழ்பஞ்சும் போலவே..........
ஆரியன் தோற்ற முன் அற்ற மலங்களே
(திருமந்திரம், 161.)
ஞானம் இவனொழிய.........நற்கால் அனல் பானு
ஒழியப்படின் (திருவருட்பயன், 5.10)

7. வித்துமேல் விளையாமல் என்வினை ஒத்தபின்
(திருவாசகம், திருக்கழுக்குன்றப் பதிகம் – 1)
இருவினைகள் நேராக நேராதல்கூடும் இறைசக்தி
(திருவருட் பயன், 6.1)

8. அட்டமூர்த்தி அழகன் இன்னமுதாய
ஆனந்த வெள்ளத்தான் (திருவாசகம்,
சென்னிப்பத்து, 2)
இன்பதனை எய்துவார்க்கு ஈயும் அவர்க்குருவம்
இன்பகனம் ஆதலினால் இல் (திருவருட்பயன், 8.3)

9. எண்குணத்தான் தாளை வணங்காத் தலை
(திருக்குறள், 1.9)
தருவாய் எனக்குன் திருவடிக்கீழ்ஓர் தலை மறைவே
(அப்பர், 4.113.2.)
தாடலை போற்கூடி.......... நீஏகமெனக் கொள்
(திருவருட்பயன், 8.4)

[தாளும் தலையும் கூடித் தாடலையாகித் தம் தனித்தன்மையை இழந்து நிற்கின்றன. 'சிவ போக'த்தைக் குறிக்க இத்தொடர் பயன்படுத்தப் படுகிறது.]

10. சிவாய சிவசிவ என்றென்றே சிந்தை.........
ஆனந்த மாமே (திருமந்திரம், 2669)
சிவம்முதலே ஆமாறு சேருமேல் தீரும் பவம்
(திருவருட் பயன், 9.7).

11. நீரின்ப வெள்ளத்து நீந்திக் குளிக்கின்ற.........
பேரின்ப வெள்ளத்துள் (திருவாசகம்,
திருப்பாண்டிப்பதிகம், 3)
கள்ளத் தலைவர் துயர்கருதித் தன்கருணை
வெள்ளத் தலைவர் மிக (திருவருட்பயன், 10. 10)

12. அறிவானும் தானே அறிவிப்பான் தானே
அறிவாய் அறிகின்றான் தானே
அறிகின்ற மெய்ப்பொருளும் தானே
(அற்புதத்திருவந்தாதி, 20)
அறிவோனும் தானும் அகிலமும் அறிஞரை
அறிவிப்போனும்,
அறிஞர்க்கு அறிவாய் அறிகின்றோனும்,
அறிவிற்கு அறிபொருள் ஆவோனும் தானே
(சங்கற்பநிராகரணம், 8. அடி 87 – 91)

13. செய்வினையும் செய்வானும் அதன்பயனும்
கொடுப்பானும்
......... இவ்வியல்பு சைவநெறி அல்லவற்றுக்கில்லை.
(பெரியபுராணம், 34. 5)
செய்வானும் செய்வினையும் சேர்பயனும்
சேர்ப்பவனும்
உய்வான் உளனென் றுணர் (திருவருட்பயன், 6. 3)

உமாபதியின் உள்ளம் பெரியபுராணத்தில் பெரிதும் தோய்ந்தது. அடியார்களின் வாழ்க்கையில் இறைவன் கருணை இடம் பெற்ற பாங்கு அவர் சிந்தையில் ஊறி அவருடைய நூல்களில் அடிமணல் ஊற்றாய்த் திகழ்கிறது. இறைவன் அருளை மையமாகக் கொண்டு இத்துணைச் சிறப்பாகவும் விளக்கமாகவும் வேறெந்தச் சாத்திரப் புலவர்களும் கூறவில்லை எனலாம். பெரியபுராணத்தில் ஊறித் திளைத்த உமாபதி அதன் உட்கருத்தைத் தெரிவிப்பார்

போலத் திருத்தொண்டர் புராண சாரம் இயற்றினர் பெரியபுராண ஆசிரியராகிய சேக்கிழாரைப் போற்றியதன் விளைவாக வெளிவந்த நூல் சேக்கிழார் புராணம்.[35]

தேவாரங்களில் தோய்ந்து எழுந்த உமாபதி, தேவாரங்களில் காணும் திருத்தலங்களைப் பற்றி ஒரு சிறுநூல் எழுதினர். அது 'திருப்பதிக் கோவை' எனப்படும். அவ்வாறே தேவாரங்களில் காணும் பதிகங்களின் தொகுப்பைத் 'திருப்பதிகக் கோவை' என்னும் பெயரில் எடுத்துக் கூறினர். மேலும் திருமுறைகளிலிருந்து சில பதிகங்களைத் தேர்ந்தெடுத்துத் திருவருட்பயனில் காணும் பத்துத் தலைப்புக்களின் கீழ் அவற்றைப் பொருத்தி, விளக்கினர். அந்நூல் 'தேவார அருள்முறைத் திரட்டு' ஆகும்.

உமாபதிசிவம் ஒரே நேரத்தில் தத்துவ அறிஞராகவும் சமயப் புலவராகவும் திகழ்கிருர். வடமொழித் தத்துவ நூல்களும் உரைகளும் அவருடைய தத்துவப் போக்கை உருவாக்கின என்றும், தமிழ்த் திருமுறைகள், குறிப்பாகப் பெரியபுராணம், அவருடைய பக்தி நெறிக்கு வழிகோலியது என்றும் கூறலாம்.

இறுதியாக, மெய்கண்டாரின் சிவஞானபோதமும் அருணந்தியின் சிவஞானசித்தியாரும் உமாபதிக்கு வழி காட்டிகளாய் அமைந்தன. வேதாகம அறிவும் தமிழ்ப் பக்தி இலக்கிய அறிவும் சைவசித்தாந்தத்துக்கு விளக்கம் தருவதற்குப் பயன்பட்டன. எனவேதான் உமாபதியின் எட்டு நூல்களும் சிவஞானபோதத்துக்கும் சிவஞான சித்தியாருக்கும் இணையாகச் சித்தாந்த சாத்திரங்களாக ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளன.

## III உமாபதியின் எட்டுச் சாத்திர நூல்கள்

சித்தாந்த சாத்திரம் பதினான்கனுள் எட்டு உமாபதி இயற்றியவை. அவை: 1. சிவப்பிரகாசம். 2. திருவருட்பயன். 3. வினாவெண்பா. 4. போற்றிப் பஃறொடை. 5. கொடிக்கவி. 6. நெஞ்சுவிடு தூது. 7. உண்மைநெறி விளக்கம். 8. சங்கற்ப நிராகரணம். இவ்வெட்டும் சித்தாந்த அட்டகம் எனப்படும்.[36]

மெய்கண்டாரின் சிவஞானபோதம் முதல் நூலாகவும் அருணந்தியின் சிவஞானசித்தியார் வழி நூலாகவும் கொண்ட உமாபதி, சார்பு நூலாகத் தமது சிவப்பிரகாசத்தை அமைத்தார். சிவப்பிரகாசக் கருத்துக்களை விரித்தும் அணி செய்தும் சுருக்கியும் விளக்கியும் அமைந்துள்ளவை பிற நூல்கள். இவற்றைத் தனித்தனியே காண்டல் பயனுள்ளதாகும்.

1. **சிவப்பிரகாசம்:-**

நூறு விருத்தப்பாக்களைக் கொண்ட இந்நூல் 'பொது', 'உண்மை' என இரண்டு பகுதிகளாக உள்ளது. ஒவ்வொன்றும் 50 பாக்களைக் கொண்டது. பொது, தடத்தம் (தடஸ்தம் — உடம்பொடு கூடிய நிலை) என்பதனையும் உண்மை என்னும் பகுதி சொரூபம் (முத்திநிலை) என்பதனையும் விளக்குகின்றன. சிவப்பிரகாசம் முத்தியின் வகைகள் (செய்யுள் 50), உயிரின் இயல்பு (செய்யுள் 51-59), ஐந்தவத்தைகள் (60), உயிரின் உண்மை (61-64), ஞான வாய்மை (68-70), ஞான வாய்மையின் பயன் (71-79), ஐந்தெழுத்து (90-93), அணைந்தோர் தன்மை (94-97), முதலியவற்றை விளக்குகிறது. ஆன்ம தரிசனம், ஆன்மசுத்தி, ஆன்ம லாபம் என்னும் மூன்று தலைப்புக்களில் தசகாரியங்களை (பத்துச் செயல்களை) நன்கு விளக்குகிறது.

உமாபதிசிவம் ஒருவரே தாம் கூறப்போகும் பொருள் சைவசித்தாந்தம் என்றும் அது 'வேதாந்தத் தெளிவாம் சைவசித்தாந்தம்' என்றும் கூறுகிறார். முன்னதாக, சித்தாந்தத்திற்கும் வேதாந்தத்திற்கும் உள்ள வேறுபாட்டைத் திருமூலர் கூறி இருக்கிறார்.[37] 'சைவ' என்னும் அடைமொழியைச் சேர்க்காமல் ஆகம முறையையே 'சித்தாந்தம்' என்னும் பெயரில் அவர் விளக்கினார்.[38] அதேபோல் அருணந்தியாரும் 'சிவாகமங்கள் சித்தாந்தமாகும்' என்றார். சைவசித்தாந்தம் என்னும் தொடர் இராஜசிம்ம பல்லவன் கல்வெட்டு ஒன்றில் காணப்படுகிறது என்பதையும், அவன் சைவசித்தாந்த நெறியைப் பின்பற்றியவன் என்பதையும் முன்னர்க் கண்டோம். எனினும், சிவப்பிரகாசத்தைத் தவிர, வேறு எந்த நூலிலும் சைவசித்தாந்தத்தைத் தாம் விளக்கப் போவதாக நூலாசிரியர்கள் கூறவில்லை. உமாபதி இந்த நூலில் சைவசித்தாந்தக் கொள்கைகளை மட்டும் கூறவில்லை; பிற சமயத்தினர் இந்நெறியில் உள்ள குறைகளாகக் கூறக் கூடியவற்றிற்கும் விடை தருவதேபோல எழுதியுள்ளார்.

சிவப்பிரகாசத்தின் முக்கிய நோக்கம், மனித அறிவைக் கொண்டு (பசுஞானம், பாசஞானங்களால்) இறைவனை அறிய முடியாது; அவனுடைய கருணையைக் கொண்டே (பதிஞானம்) அவனை அறிய முடியும் என்பதை எடுத்துக் கூறுவதாகும்.[39]

இந்நூலுக்கு உரை எழுதினோர் வருமாறு:

1. இலக்கணம் சிதம்பரநாதர் (K. நாகலிங்க முதலியார் பதிப்பு, 1897)
2. மதுரைச் சிவப்பிரகாசர் (சமாஜம், 1940)
3. சிந்தனை உரை (சமாஜம், 1934)
4. இலங்கை மு. திருவிளங்கம் (முதல் பதிப்பு, 1918, இரண்டாம் பதிப்பு 1933)
5. கா. சுப்பிரமணிய பிள்ளை (பொழிப்புரை, தருமபுரம், 1962)

6. தே. ஆ. சீனிவாசாசாரியர் (சீர்மைக் கட்டுரை, திருவாவடுதுறை ஆதீனம், 1960)

7. த. ச. மீனுட்சி சுந்தரம் பிள்ளை (பொழிப்புரை, திருவாவடுதுறை ஆதீனம், 1967)

8. மதுரை ஞானப்பிரகாசர் (மதுரைச் சிவப்பிரகாசரின் ஆசிரியர் — பார்க்க, சித்தாந்தம் 40.5,1967)

9. திரு உருக மாமலை அடிகள் (1908, 1963)

ஆங்கில மொழிபெயர்ப்புகள்

1. H. R. Hoisington — The Journal of American Oriental Studies, 1854.

2. கா. சுப்பிரமணிய பிள்ளை, தருமபுர ஆதீனம், 1945.

புன்கூர்ச் சிவப்பிரகாசர் என்பவர் 'சிவப்பிரகாசக் கட்டளை' (தருமபுரம், 1930) என்னும் நூலை எழுதியிருக்கிறுர். இது சிவப்பிரகாசத்தில் காணும் கருத்துக்களை விளக்குகிறது.

தருமபுர ஆதீனத்தின் அடியவரும், வெள்ளியம்பலத் தம்பிரானின் மாணவரும் ஆகிய கா. வை. அம்பலவாண முனிவர் சிவப்பிரகாசச் செய்யுட்களுக்குக் கீழே காணப்படும் கொளுக்களை எழுதியுள்ளார். பதி பசு பாசத் தொகையும் திருவருட்பயன் உதாரணக் கலித்துறையும் (தருமபுரம்) என்னும் நூலின் முன்னுரையில் இக்கருத்து காணக் கிடக்கிறது.

சிவப்பிரகாசச் செய்யுள் ஒவ்வொன்றின் கருத்தையும் சூத்திர வடிவில் எடுத்துக் கூறும் நூல் ஒன்று உண்டு; அதன் பெயர் 'சிவப்பிரகாசக் கருத்துரைச் சூத்திரம்'; அதன் ஆசிரியர் காழிப் பழுதை கட்டிச் சிற்றம்பல நாடிகள் — இவ்வாறு மெய்கண்ட சாத்திரம் (இரண்டாம் பதிப்பு, தருமபுரம், 1956, ப. 413) கூறுகிறது.

'திருநெறி விளக்கம்' என்ற நூல் சிவப்பிரகாசத்தை ஒட்டிச் செல்கிறது. அதன் ஆசிரியர் பெயர் தெரியவில்லை. அது 117 செய்யுட்களைக் கொண்டது.[40]

இத்திருநெறி விளக்கம் 'சித்தாந்தம்' இதழில் (1960) முதலில் வெளியிடப்பட்டது.

## 2. திருவருட் பயன்

இந்நூல் பப்பத்துக் குறள்களை உடைய பத்து அதிகாரங்களை உடையது. அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கனுள் நான்காவது இறைவன் அருளினல் அடையப் பெறுவது. திருவருட் பயன் மூலம் இறையருளின் சிறப்பும் இன்றியமையாமையும், திருவருளின் மூலம் பெறும் ஆன்ம விடுதலையும் உமாபதிசிவம் எடுத்து விளக்குகிறார்.

பத்துத் தலைப்புக்களில் சைவசித்தாந்த நெறியின் சாரம் எடுத்துக் கூறப்பட்டுள்ளது. அருள் என்னும் கண்ணோட்டத்தில் அது விளக்கப்பட்டுள்ளது. எனவே சிவப்பிரகாசத்தில் கூறியது இங்கே மீண்டும் கூறப்பட வில்லை.

திருவருட்பயனில் காணும் தலைப்புக்கள் வருமாறு: 1. பதிமுது நிலை. 2. உயிரவை நிலை. 3. இருள்மல நிலை 4. அருளது நிலை. 5. அருளுரு நிலை. 6. அறியும் நெறி. 7. உயிர் விளக்கம். 8. இன்புறு நிலை. 9. அஞ்செழுத்தருள் நிலை. 10. அணைந்தோர் தன்மை.

உயிர்களின் வினைகளுக்கு ஏற்ப அவற்றுக்கு இன்ப துன்ப அனுபவங்களைத் திருவருள் ஊட்டுவிக்கின்றது. இதன் நோக்கம் பாசத்திலிருந்து விடுபடச் செய்வதே ஆகும்.[41] இதனைச் சேக்கிழார் நன்கு விளக்குகிறார் (34.5). உமாபதியும் சேக்கிழார் சொன்ன மொழியையும் பொருளை யும் பொன்னே போன்று எடுத்தாள்கின்றார்.

'செய்வானும் செய்வினையும் சேர்பயனும் சேர்ப்பவனும்
உய்வான் உளனென் றுணர்'.

சைவசித்தாந்தம் உள்பொருள்களாக மூன்றைக் கொண்டுள்ளது. உமாபதி இவற்றை ஆறாக விரிக்கிறார். அவை: 1. தனியொருவனாகிய இறைவன். 2. பலவாகிய உயிர். 3. இருளாகிய ஆணவம். 4. கருமம். 5. சுத்த மாயை. 6. அசுத்த மாயை.

'ஏகன் அநேகன் இருள்கருமம் மாயைஇரண்
டாகஇவை ஆறுதி யில்' (6.2).

சிவஞான முனிவர் இந்த அடிப்படையை ஏற்றுக்கொண்டு, இவற்றை ஏற்றுக் கொள்பவை, அகச்சமயம் என்றும், ஏற்றுக் கொள்ளாதவை புறச்சமயம் என்றும் பிரித்துக் கூறுகிறார்.[42]

சுருங்கக் கூறின், சிவப்பிரகாசத்தில் சுருங்கக் கூறப் பட்ட திருவருள், திருவைந்தெழுத்து ஆகியவற்றின் விளக்கங்களைத் திருவருட்பயனில் காணலாம்.

இந்நூலுக்குக் கிடைத்துள்ள உரைகளாவன:

1. வேலப்ப பண்டாரம்.
2. நிரம்ப அழகியார் (பதிப்பு க. வெள்ளைவாரணர்).
3. நல்லசிவ தேவர் இயற்றிய சிந்தனை உரை — சமாஜம், 1940.
4. கா. சுப்பிரமணிய பிள்ளை (தருமபுரம், 1962).
5. தே. ஆ. சீனிவாசாசாரியர் (திருவாவடுதுறை, 1957).
6. கு. சுந்தரமூர்த்தி (1964).
7. எஸ். சிவபாதசுந்தரம்.
8. க. வச்சிரவேல் முதலியார் (சைவாகம பரிபாலன சங்கம், யாழ்ப்பாணம், 1967).

9. வே. மாணிக்கவாசகம் பிள்ளை (சைவசித்தாந்த கழகம் 1959) — ஆகியோர் இந்நூலுக்கு உரை எழுதியிருக்கிறார்கள்.

10. ஜே. எம். நல்லசாமிப் பிள்ளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வெளியிட்டார் (1896).

11. டாக்டர் ஜி. யூ. போப் தமது திருவாசக மொழி பெயர்ப்பில் — திருவருட்பயன் மொழிபெயர்ப்பையும் இணைத்தார் (1900).

12. J. M. நல்லசாமிப் பிள்ளையின் ஆங்கில மொழி பெயர்ப்பையும், வி. எஸ். ரங்கநாதன் ஆக்கிய இந்தி மொழி பெயர்ப்பையும் திருப்பனந்தாள் காசி மடம் வெளியிட்டு உள்ளது (1966).

3. வினா வெண்பா

இந்நூலில் 13 வெண்பாக்கள் உள்ளன. அவை வினாக்களாகத் தொடுக்கப்பட்டுள்ளன. உமாபதிசிவம் தமது குருவாகிய மறைஞான சம்பந்தரை நோக்கி வினவியதாக அவை அமைக்கப்பட்டுள்ளன. சைவசித்தாந்த நெறியில் காணப்படும் சில சிக்கல்கள், முரண்பாடுகள் ஆகியன வினாவடிவில் தொடுக்கப்பட்டுள்ளன. இதன் நோக்கம் சைவசித்தாந்தம் அச்சிக்கல்களை எவ்வாறு விடுவிக்கிறது முரண்பாடுகளை எவ்வாறு நீக்குகிறது என்பதை விளக்குவதே யாகும்.

இருளும் ஒளியும் ஒன்றுக்கொன்று முரணானவை. அவை இரண்டும் ஓரிடத்தில் இருக்க இயலாது. அவ்வாறாயின் உயிரில் இருளும் இறைவனும் சேர்ந்திருந்த தெங்ஙனம்! (1).

கனவைக் கனவென்று கனவில் காண முடியாது. கனவாயின் அதனைத் தொடர முடியாது. இறைவனருள் அவத்தைக்குட் படாது. ஆயின் நான் அவத்தைப் படுவதேன்? (4).

சிற்றறிவு சிவனருளைச் சேர்வதெவ்வாறு? (6) சிவஞான போதத்தைப் போலவே இதில் உள்ள எட்டாஞ் செய்யுளும் பத்தாஞ் செய்யுளும் முறையே குரு தோன்றுவதைப் பற்றியும் முத்தியைப் பற்றியும் கூறுகின்றன. இந்நூல், இதற்கு முன்னதாகச் சிவஞான போதம், சிவஞான சித்தியார், சிவப்பிரகாசம் ஆகியவற்றைக் கற்றுணர்ந்தார்க் கெனவே இயற்றப்பட்டது எனலாம். இந்நூலை, அறியாதவர்க்கு வேறெந்த நூலும் பயன் தராது. இந்நூலை அருணந்தி சிவம் இயற்றிய இருபா இருபஃதுக்கு ஒப்பிடலாம். அது மெய்கண்டாரை முன்னிலைப் படுத்திக் கூறியது. இது மறைஞான சம்பந்தரை முன்னிலைப் படுத்தியது.

திருவாவடுதுறை ஆதீனத்தைச் சேர்ந்த நமசிவாயத் தம்பிரான் இதற்கு ஓர் உரை எழுதியுள்ளார். கா. சுப்பிரமணிய பிள்ளை (தருமபுரம், 1962), தே. ஆ. சீநிவாசாசாரியர் (திருவாவடுதுறை ஆதீனம் 1956) ஆகியோரும் உரை எழுதியிருக்கிறார்கள்.

ஜே. எம். நல்லசாமி பிள்ளை இதனை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ளார் (தருமபுரம், 1946).

**4. போற்றிப் பஃறொடை**

இது 95 கண்ணிகளையும் இறுதியில் ஒரு வெண்பாவையும் கொண்டது.

சிவபெருமான் அருள் காரணமாக ஐந்தொழில்களை இயற்றுகிறான். உயிர்கள் பாசத்திலிருந்து விடுபடுவதற்காக இறையருள் இன்ப துன்ப அனுபவங்களுக்கு வேண்டியவற்றை உருவாக்கித் தருகிறது. உயிர் அனுபவம் பெற்று முதிர்ச்சி அடைகிறபோது இறையருள் குருவின் மூலமாக இறங்கி வருகிறது (சத்திநிபாதம்). குரு இறைவனே ஆவர். இந்தக் கருத்தை விளக்கும் வகையில் உமாபதிசிவம் போற்றிப் பஃறொடை, நெஞ்சு விடு தூது என்னும் இரு நூல்களை இயற்றியுள்ளார். இரண்டிலுமே சிவனுடைய செயல்கள் மறைஞான சம்பந்தரின் மேல் ஏற்றிச் சொல்லப்படுகின்றன.

போற்றிப் பஃறொடை, அருளைப் பற்றியும் உலகத் தோற்றம் பற்றியும் தத்துவங்களைப் பற்றியும் முத்தியைப் பற்றியும் கூறுகிறது. இறுதி வெண்பா மறைஞான சம்பந்தரைப் போற்றுகிறது. போற்றிப் பஃறொடை திருவாசகத்தில் உள்ள போற்றித் திருஅகவல் என்னும் பகுதியோடு ஒப்பிடக் கூடியது.

இந்நூலுக்குப் பழைய உரை ஒன்று உண்டு எனக் கூறப்படுகிறது. ஆனால், விவரம் ஏதும் கிடைக்கவில்லை.[43] கா. சுப்பிரமணிய பிள்ளை இதனை உரைநடையில் தந்துள்ளார்.

5. கொடிக் கவி

தில்லை நடராசர் கோயில் திருவிழாவில், முதல் நாள் கொடியேற்று விழாவின் போது கொடி ஏறவில்லை என்பதும், உமாபதி வந்து இந்நூலைப் பாடியவுடன் கொடி மேலேறியது என்பதும் முன்பே கூறப்பட்டது. இந்நூலில் நான்கு செய்யுட்கள் உள்ளன. ஒன்று கட்டளைக் கலித்துறையிலும் மற்றவை வெண்பா யாப்பிலும் அமைந்துள்ளன.

கொடியேற்றம் என்பது முக்கியமானதோர் செயலைத் தொடங்குவதைக் குறிக்கும். கொடியேற்றுதல் என்பது பொதுவாக, ஒருவர் ஒரு பொருள்பற்றி முடிவு மேற்கொள்ளுதலையும், அதனை இறுதிவரை கொண்டு செலுத்தி முடிப்பது என்பதனையும் குறிப்பதாகும்.[44] கோவில்களில், கொடி ஏற்றுதல் திருவிழாத் தொடங்குவதைக் குறிக்கும். எந்தச் சடங்காயினும், அது ஞானநெறியில் செல்வதற்கு காரணமாக அமையும்.

'கிரியை யென மருவுமவை யாவும் ஞானம்
கிடைத்தற்கு நிமித்தம்' (சிவப்பிரகாசம், 10)

ஞானம், சத்திநிபாதத்தின் விளைவாகத் தோன்றுவது. ஆகவே கொடியேற்றம் என்பதை இறைவன் அருளுக்கு அடையாளமாகக் கொள்ளலாம்.[45] அடையாளம் என்பது

ஒன்றைக் குறிப்பதோடு அமையாமல், அதற்கு அப்பாலும் சுட்டிக் காட்டுகிறது. ஆகவே, கொடி அடையாளமாயினும், அருளைக் குறிக்கின்றது.

முதல் செய்யுள் உயிரோடு இணைந்திருக்கின்ற அறியாமையைக் குறிப்பிடுகின்றது. ஒளியும் இருளும் ஒரு சேர நில்லா. இருள் ஒளியை விழுங்க முடியாது. ஒளி இருளைக் குவித்து விடும். உயிரோடு, அறிவு உடனிருந்தாலும் மும்மலம் காரணமாக அதனை அறிவதில்லை. இரண்டாஞ் செய்யுள் இறைவன், சக்தி, உயிர் பற்றியும், கேவல சகல அவத்தைகளைப் பற்றியும் கூறுகிறது. மூன்றும் செய்யுள் உயிரும் பதியும் பிரியாதிருக்கின்ற அத்துவைத நிலையை விளக்குகிறது. மனத்துக்கும் வாக்குக்கும் எட்டாத கடவுள் உயிரோடு பிரிவற நிறைந்திருக்கின்றான். நான்காம் செய்யுளில் திருவைந்தெழுத்தின் பல்வேறு வடிவங்கள் எடுத்துக் காட்டப்படுகின்றன.

இந்நூலுக்குப் பழைய உரை ஒன்று உண்டு. ஆயின் நூலாசிரியர் பெயர் தெரியவில்லை. கா. சுப்பிரமணிய பிள்ளை இதனை உரைநடையில் தந்திருக்கிறார் (தருமபுரம், 1962). ஜே. எம். நல்லசாமி பிள்ளை இதனை ஆங்கிலத்தில்மொழி பெயர்த்திருக்கின்றார் (Siddhanta Trayam, 1946).

### 6. நெஞ்சுவிடு தூது

கலிவெண்பா யாப்பில் அமைந்த இந்நூல் ஒரு சீடன் தனது குருவுக்குத் தன் பக்தியை எடுத்துக் கூறி அனுப்பிய தூதாக அமைந்துள்ளது. தூது என்பது தொண்ணூற்றாறு வகை பிரபந்தங்களுள் ஒன்று. காதலி ஒருத்தி தன் காதலனுக்கு, ஏதேனும் ஒருபொருளைத் தேர்ந்தெடுத்துத் தூதாக அனுப்புவது இதன் கருத்தாகும். அன்னம், தென்றல், மயில், வண்டு, கிளி, நெஞ்சு, மேகம், பூவை, தோழி, குயில், நெஞ்சம் முதலியவற்றுள் ஒன்றைத் தூது அனுப்புவ தாகச் சொல்வது கவி வழக்கம். புகையிலை விடு தூது, பண விடு தூது ஆகிய நூல்கள் புகையிலையும் பணமும்

தூதுப் பொருள்களாகப் பயன்பட்டன என்பதனைக் காட்டி நிற்கின்றன. காளிதாசன் இயற்றிய மேக தூதம் வட மொழியிலும் இத்தகைய நூல்கள் இருந்தன என்பதைக் காட்டுகிறது. இந்நூலில் இத்தகையதொரு தலைவன் ஓர் அரசனாகக் கருதப்பட்டு அவனுக்குத் தசாங்கம் — (குடை, கொடி, தேர், யானை முதலிய பத்துப் பொருள்கள்) இருப்பதாகக் கொண்டு போற்றிக் கூறப்படும்.

'நெஞ்சுவிடு தூது' என்ற தம் நூலில் உமாபதி தம் குருவாகிய மறைஞான சம்பந்தரைச் சிவனெனவே கொண்டு போற்றுகிறார். அவர் கூறும் தசாங்கமாவது. நற்குணமே குன்று; இன்பமே ஆறு; ஆகமங்கள் எட்டமுடியாத நாடு; சிவஞானமே ஊர்; அருளே மாலை; சத்தியே குதிரை; ஞானமே யானை; ஆறு சமயங்களும் அடைய முடியாதது அவனுடைய கொடி; நாதமே முரசு; திருமால், பிரம்மா ஆகியவர்களின் உள்ளங்களுக்கு அப்பாலும் செல்லக் கூடிய ஆணை.

கடவுளும் உயிரும் என்றுமுள பொருள்கள், என்றாலும் அவற்றிற்கிடையேயுள்ள வேறுபாடு (கண்ணி 9—16); கடவுள் 'வெளியில் வெளியில் வெளியன் வெளியில்,
ஒளியில் ஒளியில் ஒளியன் — ஒளியில்
அளியில் அளியில் அளியன் அளியில்
அளவில் அளவில் அளவன்'

ஆக நிற்றல் (கண்ணி 33 — 34); மாயையின் விளைவாகிய 36 தத்துவங்கள் (கண்ணி 43 — 53) முதலியவற்றை விளக்குகிறது. 'இலகா இருளலகை போல் இகலே பேசும், உலகா யதன்பால் உறாதே' என்றும், 'நான் பிரம்மம் என்பவர்பால் நண்ணாதே' என்றும், 'புத்தன் பொல்லாத புன்சொல் நிறையே விரும்பி விழாதே' என்றும், 'சமண பாழி மருவாதே' என்றும், 'ஆதிமறையோதி அதன்பயன் ஒன்றும் அறியா, வேதியர்சொல் மெய்யென்று மேவாதே' என்றும், 'உற்ற திருநீறும் சிவாலயமும் உள்ளத்துச், செற்ற புலையர்பாற் செல்லாதே' என்றும் நெஞ்சுக்கு அறிவுரை கூறுகின்றார்.

இந்நூலில் உமாபதி திருவள்ளுவரை 'நிலைத் தமிழின் தெய்வப் புலமைத் திருவள்ளுவர்' என்றும், திருக்குறளைத் 'திருவள்ளுவர் உரைத்த மெய் வைத்த சொல்' என்றும் குறிப்பிடுகிறார்.

'தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர்'

என்னும் திருக்குறளை எழுத்துப் பிறழாமல் இந்நூலில் அமைத்திருக்கிறார் (கண்ணகி 24).

நெஞ்சுவிடு தூது ஓர் உரையைப் பெற்றுள்ளது. எனினும் உரையாசிரியர் பெயர் தெரியவில்லை. கா. சுப்பிரமணிய பிள்ளை இதனை உரைநடையில் தந்திருக்கிறார் (தருமபுரம், 1962).

**7. உண்மை நெறி விளக்கம்**

தத்துவரூபம், தத்துவ தரிசனம், தத்துவசுத்தி; ஆன்மரூபம், ஆன்ம தரிசனம், ஆன்ம சுத்தி, சிவரூபம், சிவ தரிசனம், சிவ யோகம், சிவ லாபம் (சிவ போகம்) என்னும் பத்தும் ஞானப் பாதையின் பத்துப் படிகளாம். இவை 'தசகாரியம்' என வழங்கப்படும். உமாபதி இவற்றை இந்நூலில் விளக்குகிறார்.

உண்மை நெறி விளக்கம் ஆறுசெய்யுட்களைக் கொண்டது. முதற் செய்யுள் தத்துவ ரூபம், தத்துவ தரிசனம், தத்துவ சுத்தி ஆகியவற்றையும், இரண்டாம் செய்யுள் ஆன்ம ரூபம், ஆன்ம தரிசனம், ஆன்ம சுத்தி என்பவற்றையும், மூன்று, நான்கு, ஐந்து, ஆறு செய்யுட்கள் முறையே சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம், சிவபோகம் ஆகியவற்றையும் எடுத்துரைக்கின்றன.

**தத்துவ ரூபம் :—** 36 தத்துவங்களிலிருந்தும் உலகிலிருந்தும் தான் வேறுபட்டது என்பதை உயிர் உணர்தல்.

**தத்துவ தரிசனம் :—** இவ்வேறுபாட்டினை அறியும் அறிவு.

**தத்துவ சுத்தி :—** தத்துவங்களின் தொடர்பிலிருந்து உயிர் விடுபட்டுத் தூய்மை பெறுதல், இது திருவருளாலே நிகழ்கிறது.

**ஆன்ம ரூபம் :—** உயிர் ஆணவத்தை வென்று, அவ்வாறு வெற்றி பெறுவதற்கு அருளே காரணம் என உணர்தல்.

**ஆன்ம தரிசனம் :** யான், எனது என்பவை அற நிற்றல்.

**ஆன்ம சுத்தி :—** உயிர் தன் செயலைச் சிவன் செயலில் இணைத்தல்.

**சிவ ரூபம் :—** பிறப்பு இறப்பு முதலிய எல்லாமே இறைவன் அருளால்தான் நிகழ்கிறது என்பதை உயிர் உணர்தல்.

**சிவ தரிசனம் :—** சிவனில் தோய்ந்து உயிர் தனது தனித்தன்மையை இழத்தல்.

**சிவயோகம் :—** பரையில் (அருளில்) இருத்தல்.

**சிவபோகம் :—** பேரின்பம்.

சித்தாந்த அட்டகம் என்னும் பெயரில் வழங்கும் எட்டுச் சித்தாந்த சாத்திர நூல்களில் உண்மை நெறி விளக்கமும் ஒன்று. இவ்வெட்டும் உமாபதிசிவம் இயற்றியவை. உண்மை நெறி விளக்கம் உமாபதிசிவம் இயற்றியது அன்று; அதனை இயற்றியவர் சீகாழித் தத்துவ நாதர் ஆவர் என்று அறிஞர் சிலர் கருதுகின்றனர்.[46] சீகாழித் தத்துவ நாதர் என்பவர் இந்நூலை இயற்றினார் என்றும் அவர் சீகாழிச் சிற்றம்பல நாடிகளின் மாணவர் என்றும் கூறப்படும் இக்கருத்தை மறுப்பதற்குப் பல காரணங்கள் உள்ளன. முதலாவதாக, வேறொருவர் எழுதிய ஒரு நூலை உமாபதிசிவம் இயற்றிய நெஞ்சுவிடு தூது,

சங்கற்ப நிராகரணம் என்னும் இரண்டுக்குமிடையிலே வைக்கும் ஒரு செயலைத் தொகுப்பாசிரியர் செய்திருக்க மாட்டார்.

இரண்டாவதாக, 14 சாத்திரங்களும் கால முறைப்படி தொகுக்கப்பட்டுள்ளன. மெய்கண்டாருக்கு முற்பட்ட நூல்களாகிய திருவுந்தியாரும் திருக்களிற்றுப்படியாரும் முதலில் வைக்கப்பட்டுள்ளன. பின்னர் மெய்கண்டாரின் சிவஞான போதமும், அடுத்து அவருடைய மாணவராகிய அருணந்தி இயற்றிய சித்தியாரும், இருபா இருபஃதும், பிறகு மெய்கண்டாரின் மற்ருெரு மாணவராகிய மனவாசகங் கடந்தார் இயற்றிய உண்மை விளக்கமும் வைக்கப் பட்டுள்ளன. அருணந்தியின் மாணவர் மறைஞானசம்பந்தர். அவருடைய சீடர் உமாபதி. எனவே, உமாபதியின் நூல்கள் அடுத்து வருகின்றன. சீகாழிச் சிற்றம்பல நாடிகள் மெய்கண்டாரின் மாணவராக இருந்திருக்கலாம் என்று கா. சுப்பிரமணிய பிள்ளை கூறுகிறுர்.[47] இது உண்மை யானல் அவருடைய நூல் உமாபதியின் நூல்களுக்கு முன்னதாக, மனவாசகங் கடந்த்ாரின் உண்மை விளக்கத்தை அடுத்து இடம் பெற்றிருத்தல் வேண்டும். உறுதியாக, உமாபதியின் நூல்களுக்குப் பின்னல் – அதுவும் அவரது இரண்டு நூல்களுக்குமிடையில்–இடம் பெற்றிருக்கமுடியாது.

மறைஞான சம்பந்தரின் மற்ருெரு மாணவர் மச்சுச் செட்டியார். அவருடைய மாணவர் காழிக்கங்கை மெய்கண்டார். அவருடைய சீடர் காழிப் பழுதைகட்டி சிற்றம்பல நாடிப் பண்டாரம்.[48] இவரே துகளறு போதம் எழுதிய சீகாழிச் சிற்றம்பல நாடிகள். இக்கருத்தை ஏற்றுக் கொண்டால் இவ்வாசிரியர் உமாபதியிலிருந்து மூன்ரும் தலைமுறையைச் சேர்ந்தவர். கா. சு. பிள்ளை கூறும் கருத்தை ஏற்றுக் கொண்டால் இவர் நான்காம் தலைமுறையைச் சேர்ந்தவர். இவ்வகையிலும் கூடப் பிற்பட்ட ஒருவரின் நூலை உமாபதியின் நூல்களோடு, குறிப்பாக இரண்டு நூல்களுக்கு இடையில், வைத்தல் இயலாததாகும்.

அனவரத விநாயகம் பிள்ளையவர்கள், உண்மைநெறி விளக்கத்தின் ஆசிரியர் உமாபதி அல்ல என்று கூறியதால் இக்கால ஆசிரியர்கள் பலருக்கும் அதுவே கருத்தாய் அமைந்து விட்டது.

உமாபதி ஒரு தத்துவ அறிஞர் மட்டும் அல்லர். அவர் கைதேர்ந்த ஒரு நூலாசிரியரும் ஆவர். தம் நூல்களை முறைப்படுத்தி அவர் அமைத்துள்ளார். முதலாம் நூலாகிய சிவப்பிரகாசத்தில் கூறிய கருத்துக்களைப் பின் வந்த நூல்களில் விரிவாக்கிக் கூறினர். அவர் திருவருளைப் பற்றியும் (செய்யுள் 18), திருவைந்தெழுத்தைப் பற்றியும் (90—92) சிவப்பிரகாசத்தில் கூறினர். அவை திருவருட் பயனில் விரித்தோதப்பட்டன. குருவருளும் குருவின் பெருமையும் (68) முதல் நூலில் கூறப்பட்டன. அவை போற்றிப் பஃறொடையிலும் நெஞ்சுவிடுதூதிலும் விரித்துரைக்கப்பட்டன. அவர் தசகாரியத்தைச் சிவப்பிரகாசத்தில் சுருக்கிச் சொன்னர். சிவப்பிரகாசத்தில் ஆன்ம தரிசனம், ஆன்மசுத்தி, ஆன்ம லாபம் (71-83) என்னும் மூன்று தலைப்புக்களில் தசகாரியத்தைக் கூறினர். உண்மை நெறி விளக்கத்தில் தசகாரியங்களைப் பத்துத் தலைப்புக்களில் விரித்தார். எனவே உண்மை நெறி விளக்கத்தின் ஆசிரியர் உமாபதி என்றும், அது உமாபதி யின் எட்டு நூல்களுள் ஒன்று என்றும், 14 சாத்திரங்களில் எட்டு உமாபதியால் இயற்றப்பட்டவை என்றும் இப் பதினன்கு நூல்களும் காலவரையறைப்படி தொகுக்கப் பட்டன என்றும் மரபு வழியே கூறப்படும் செய்தி உண்மையே ஆகும்.[49]

உண்மை நெறி விளக்கம் இரண்டு உரைகளைப் பெற்றிருக்கிறது. ஒன்று 'சிந்தனை உரை' என்ற பெயர் உடையது. இரண்டாவதன் ஆசிரியர் பெயர் தெரியவில்லை. கா. சுப்பிரமணியபிள்ளை இதனை உரைநடையில் தந்திருக் கிருர். (தருமபுர ஆதீனம், 1962). ஜே. எம். நல்லசாமி பிள்ளை இதனை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்திருக்கிருர்.

(Siddhanta Trayam, முற்கூறிய நூல்). கீ. இராமலிங்க முதலியார் இந்நூலை ஒட்டி உண்மை நெறி விளக்க ஆராய்ச்சி உரை ஒன்று வெளியிட்டிருக்கிருர் (மெய்கண்டார் கழகம், காஞ்சிபுரம், 1948).

8. சங்கற்ப நிராகரணம் (கி. பி. 1313)

அகவற்பாவிலமைந்துள்ள இந்நூல் 20 பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. முதற்பகுதி காப்பு. இரண்டாம் பகுதி பாயிரம். அடுத்து வருவன ஒன்பது சமயங்களின் வாதமும் மறுதலையுமாக மாறிமாறி வருகின்றன. இதில் குறிக்கப் பட்டுள்ள சமயங்கள் முறையே வருமாறு; 1. மாயாவாதம், 2. ஐக்கியவாதம், 3. பாடாணவாதம், 4. பேதவாதம், 5. சிவசமவாதம், 6. சங்கிராந்தவாதம், 7. ஈசுர அவிகாரவாதம், 8. நிமித்தகாரண பரிணம வாதம், 9. சைவ வாதம்.

கை தேர்ந்த சிற்பி நுட்பமாகச் செதுக்கிய சிலையைப் போல இந்நூல் பாங்குற அமைந்துள்ளது. உமாபதி இந் நூலில் தமது திறமையையெல்லாம் காட்டி இருக்கிருர். இதில் வரும் சமயங்களில் ஒவ்வொன்றும் தன் முன்னதைக் கண்டிப்பதோடு மட்டுமன்றி அதைவிடச் சிறந்ததாகவும் அமைந்துள்ளது. கடைசியாக வரும் சைவ வாதம் 'நுட்பப் பொருளுணராமை மாத்திரையே பற்றி வேறு வைக்கப் பட்டதன்றிக் கருத்து வகையாற் சித்தாந்த சைவத்தின் வேறன்மையிற் சுத்த சைவஞ் சித்தாந்தசைவத்துள் அடங்கும்' என்றுணர்க.[50] பின்னர் சித்தாந்தி சைவ வாதக் கொள்கையை மறுத்துச் சித்தாந்த நெறியின் தெளிவைச் சிவப்பிரகாசத்தில் கண்டு கொள்க' என்று கூறுகிருர்.[51]

இந்நூலுக்கு இரண்டு உரைகள் உண்டு. ஒன்று பழைய உரை. அதன் ஆசிரியர் பெயர் தெரியவில்லை. மற்றையது ஞானப்பிரகாச தேசிகர் இயற்றிய உரை.

## IV பிறநூல்கள்

சந்தான குரவராகிய உமாபதி சிவம் இயற்றிய எட்டு நூல்கள் சித்தாந்த சாத்திரத்தில் இடம் பெற்றுள்ளதை முன்னர்க் கண்டோம். வடமொழி ஆகம அறிவும் தமிழ்த் திருமுறை அறிவும் ஒருசேரப் பெற்றிருந்த உமாபதி சிவம் சித்தாந்தக் கொள்கைகளை எடுத்தோதும் வகையிலே வேறு சில நூல்களையும் இயற்றினர். அவற்றுள் சில வடமொழியிலும் அமைந்தன. 1. பௌஷ்கர பாஷ்யம். இது பௌஷ்கர ஆகமத்துக்கு உமாபதி இயற்றிய உரையாகும். பின்னல் வந்த வடமொழி உரைகளுக்கு இது வழிகாட்டியாய் அமைந்தது. சிவப்பிரகாசத்தில் உள்ள கருத்துக்களை இந்த உரையில் காணலாம்.

அவர், நடராஜர் சஹஸ்ரநாமம், ஸ்ரீருத்ரம், சமகம், வாயுசம்ஹிதை ஆகியவற்றுக்கு உரையும் யந்த்ர விதானம் என்னும் நூலுக்கு ஒரு சிற்றுரையும் எழுதி இருப்பதாகத் தெரிகிறது.[52] சதரத்ன சங்கிரகம் — ஆகமப் பகுதிகளின் தொகுப்பே இந்தநூல். இதற்கு சதரத்னேல் லேகினி என்ற பெயரில் ஓர் உரையும் அவர் இயற்றியதாகத் தெரிகிறது.[53] உமாபதியால் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள இந்த நூலின் பகுதிகள் ஆகமங்களின் முக்கிய கருத்துக்களை எடுத்துக் கூறுகின்றன.

3. குஞ்சிதாங்கிரிஸ்தவம்:- இறைவனின் தூக்கிய திருவடியின் பெருமையை இது பேசுகிறது. நடராஜர் என்னும் சொல்லின் பெருமையை விளக்கும் வகையில் நடராஜத்வனிமந்த்ரஸ்தவம் என்னும் நூலையும் அவர் எழுதியதாகத் தெரிகிறது.

இதைத்தவிர, உமாபதி தமிழில் இயற்றிய வேறு பல நூல்களும் காணக்கிடைக்கின்றன. பொதுமக்களின் தேவைகளை நன்குணர்ந்த உமாபதி அவர்களுக்கெனத் தமிழில் பல

இலக்கியங்களை இயற்றி இருக்கின்றார். அவை: 1. கோயிற் புராணம், 2. திருப்பதிக்கோவை, 3. திருப்பதிகக்கோவை, 4. சேக்கிழார் புராணம், 5. திருமுறைகண்ட புராணம், 6. திருத்தொண்டர் புராணசாரம், 7. தேவாரஅருள்முறைத் திரட்டு, 8. ஞானசாரசாஸ்திரபஞ்சகம் அல்லது ஞான சரிதை.

## 1. கோயிற்புராணம்

தில்லையின் வரலாற்றையும், சிறப்பையும் நடராஜரின் பெருமையையும், அவரது அருளின் பெருமையையும் இந் நூல் எடுத்துக் கூறுகிறது. ஐந்து சருக்கங்களைக் கொண்ட இந்நூல் சரியை, கிரியை, யோகம், ஞானம், இறைவனின் ஆனந்த நடனம், ஐந்தொழில்கள், இறைவன் ஆடிய பல்வேறு நடனங்கள் முதலிய பலவற்றை எடுத்துக் கூறு கிறது.

## 2. திருப்பதிக்கோவை

சம்பந்தர், அப்பர், சுந்தரர் ஆகிய மூன்று சமயாச்சாரி யார்களும் திருத்தல யாத்திரை சென்று தேவாரம் பாடிச் சிறப்பித்த பல்வேறு கோயில்களையும் இந்நூல் குறிப்பிடு கிறது. 'மூர்த்தி, தலம், தீர்த்தம் முறையால் தொடங்கினர்க்கோர் வார்த்தை சொலச் சற்குருவும் வாய்க் கும் பராபரமே' என்பது தாயுமானவர் வாக்கு. தீர்த்த யாத்திரையும், தலயாத்திரையும் சென்றால் குருவருள் கிடைக்கும். எனவே அவ்வாறுள்ள தலங்களை இந்நூல் தொகுத்துத்தருகிறது. இதில் குறிப்பிட்டுள்ள தலங்கள் 274 ஆகும். இந்நூல் பதினான்கு செய்யுட்களைக்கொண்டது.

## 3. திருப்பதிகக்கோவை

பதினான்கு செய்யுட்களைக் கொண்ட இந்நூல் தேவார முதலிகள் பாடியிருக்கிற பதிகங்களை எண்ணிச் சொல்கிறது. நம்பியாண்டார் நம்பி திருமுறைகளைக் கண்டெடுத்து

அவற்றைத் தொகுத்தளித்தார். சேக்கிழார் காலத்திலேயே சில பதிகங்கள் கிடைக்காமற் போயின. எனவே, உமாபதி சிவம் அடுத்துவரும் தலைமுறையினர்க்காகத் திருப்பதிகங்களைத் தொகுத்துத் தந்தார்.

4. சேக்கிழார்புராணம்[54]

தொண்டர்களின் வரலாற்றைக் கூறும் பெரியபுராணம் தோன்றிய வரலாற்றைச் சொல்வதனால் இந்நூல் திருத்தொண்டர் புராண வரலாறு எனவும் அழைக்கப்படும். தமிழிலக்கியத்தின் மிகப்பெரிய வரலாற்றுப் புலவரும் பெரியபுராண ஆசிரியருமான சேக்கிழாரின் வாழ்க்கையையும் அவர் இயற்றிய நூலின் வரலாற்றையும் இந்நூல் மொழிகிறது. இந்நூலில் 103 செய்யுட்கள் உள்ளன. இந்நூல் உமாபதிசிவம் இயற்றியது அன்று என்று கூறுவோரும் உண்டு. சேக்கிழாருக்கும், சந்தான குரவராகிய உமாபதி சிவத்திற்கும் இடையிலே வாழ்ந்த உமாபதி என்னும் புலவர் இதை இயற்றியிருக்கலாம் என்பது அவர்கள் கருத்து. எனினும், பெரியபுராணத்தின் சில பதிப்புக்களில் மெய்கண்டதேவர் வழிவந்த உமாபதிசிவமே இந்நூலை இயற்றியதாகக் காணப்படுகிறது.[55]

5. திருமுறைகண்டபுராணம்

45 செய்யட்களைக் கொண்ட இந்நூல் திருமுறைகளின் வரலாற்றையும் அபயகுலசேகரசோழன் கேட்டுக் கொண்டதற்கிணங்க நம்பியாண்டார்நம்பி அவற்றைத் தொகுத்துத் தந்ததையும் கூறுகிறது. இந்த நூலும் உமாபதிசிவம் இயற்றியது அன்று என்றும், இதில் வரலாற்றுக் கருத்துக்கள் பிறழக் கூறப்பட்டிருக்கின்றன என்றும் கூறப்படுகிறது. இந்நூலாசிரியர் திருமுறைகண்ட வரலாற்றைக் கூறவந்தாரே தவிர, சோழர்கள் வரலாற்றையோ, தமிழக வரலாற்றையோ கூறவில்லை.

எனவே, இந்நூலின் ஆசிரியர் உமாபதிசிவாசாரியர் என்னும் வழிவழ வந்த கருத்தை நாம் மறுக்க வேண்டுவ தில்லை.

பதினொரு திருமுறைகளும் தொகுக்கப்பட்டமுறையை யும், பன்னிரண்டாந் திருமுறை அவற்றோடு சேர்க்கப்பட்டதை யும் முதன் முதலாக இந்நூலிலிருந்தே அறிகிறோம். தேவாரப் பதிகங்களின் பண் அமைப்புக்களைப் பற்றியும் வகைகளைப் பற்றியும் குறிப்பிடுவது இந்நூலேயாகும்.

திருமுறைகண்டபுராணம் வரலாற்றுக்கு உதவாவிட்டா லும் திருமுறைகள் பன்னிரண்டு என்பதையும் அவை எவ்வெவை என்பதையும் அவற்றின் முறைவைப்பு என்ன என்பதையும், முதலில் குறிக்கும் நூல் இதுவேயாகும். எனவே சைவ இலக்கிய வரலாற்றில் இதற்கொரு தனியிட முண்டு.

இந்நூலின் கடைசிச் செய்யுள் 'திருத்தொண்டர் பதம் துதிப்பாம்' என முடிகிறது. இது அடுத்த நூலாகிய திருத்தொண்டர் புராண சாரத்துக்கு அடியெடுத்துக் கொடுத்ததுபோல் அமைகிறது.

6. திருத்தொண்டர்புராணசாரம்:

இந்நூல் 76 செய்யுட்களைக் கொண்டது.

சுந்தரமூர்த்தி நாயனர் அருளிய திருத்தொண்டத் தொகையும், நம்பியாண்டார் நம்பி அருளிய திருத்தொண்டர் திருவந்தாதியும், 'தொண்டர் சீர் பரவுவார்' அருளிய திருத்தொண்டர் புராணமும் இந்நூலின் முதல் நூல்கள் என்று முதற்செய்யுள் குறிக்கிறது.

பெரியபுராணத்தில் வரும் 63 நாயன்மார்கள், ஒன்பது தொகையடியார்கள், ஆகியவர்களின் வாழ்க்கையின் தனிச் சிறப்பை இந்நூல் எடுத்துக் கூறுகிறது.

'மாலற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயந் தானும் அரனெனத் தொழுமே'

என்று சிவஞான போதம் கூறுகிறது. சிவனடியார்களைச் சிவனாகவே கொண்டு வழிபடல் வேண்டும் என்பது இதன் கருத்து. இதை விளக்குவதற்காகவே உமாபதிசிவம் இந்நூலை இயற்றினார். திருவருட்பயனுக்கு இந்நூல் நல்லதொரு விளக்கமாக அமைந்துள்ளது.

7. தேவார அருள்முறைத் திரட்டு:

உமாபதிசிவம் முதல் ஏழு திருமுறைகளிலிருந்து 99 பாடல்களைத் தேர்ந்தெடுத்து, அவற்றைத் திருவருட்பயனில் காணும் 10 தலைப்புக்களில் அமைத்துத் தொகுத்து இருக்கிறார்.

வடமொழி வேதாகமங்களும் தமிழ்த் திருமுறைகளும் சைவசித்தாந்தத்தின் அடிப்படைகளாகக் கொள்ளப் பட்டுள்ளன. திருமுறைகள் — குறிப்பாகத் தேவாரம் — சைவசித்தாந்தக் கருத்துக்களை நேர்முகமாக இல்லா விட்டாலும் குறிப்பாகவேனும் எடுத்துக்காட்டுகின்றன என்பதை உமாபதிசிவம் இந்நூலில் விளக்கியுள்ளார்.

திருவருட் பயன் 10 அதிகாரங்களைக் கொண்டது என்பதையும், அவையாவை என்பதையும் முன்னரே பார்த்தோம். ஒவ்வோர் அதிகாரத் தலைப்பையும் எடுத்துக் கொண்டு அதனைப் பல உட்பிரிவுகளாக்கி, ஒவ்வொன்றும் கூறும் இலக்கணத்துக்கு இலக்கியமாகத் தேவாரங்களையே எடுத்துக்காட்டி, மிக அழகாக அமைத்திருக்கிறார் உமாபதிசிவம். தேவார அருள் முறைத் திரட்டு என்னும் இந்நூல் திருமுறைகளில் மறைந்து கிடக்கும் சைவ சித்தாந்தக் கருத்துக்களை வெளிக் கொணரவே வெளிப் போந்தது எனலாம்.

**8. ஞானாசார சாத்திர பஞ்சகம் அல்லது ஞான சரிதை:—**

(1) ஞான பூஜாகரணம், (2) ஞான பூஜை, (3) ஞான தீட்சை அல்லது ஞான தீட்சா விதி, (4) ஞானந்தியேட்டி, (5) போஜன விதி என்னும் ஐந்து சிறு நூல்களைக் கொண்டது இந்தப் பஞ்சகம். இதனைத் தருமபுர ஆதீனம் வெளியிட்டுள்ளது. (1934).

இதனை உமாபதிசிவம் இயற்றவில்லை என்பாருமுண்டு.[56] தருமபுர ஆதீனத்தைச் சேர்ந்த வெள்ளியம்பல வாணத் தம்பிரான் முத்தி நிச்சயம், ஞானவரண விளக்கம் என்னும் நூல்களுக்குத் தாம் எழுதிய உரையில் இந்தப் பஞ்சகத்தைப் பல இடங்களில் மேற்கோளாகக் காட்டியிருக்கிறார். அவர் இந்நூலின் ஆசிரியர் உமாபதி சிவாச்சாரியர் என்று தெளிவாகக் குறிப்பிடுகிறார்.[57] மதுரைச் சிவப்பிரகாசர் தாம் சிவப்பிரகாசத்துக்கு எழுதிய உரையில் இவ்வைந்து நூல்களையும் மேற்கோளாக எடுத்தாள்கிறார்.[58]

(i) **ஞான பூஜாகரணம்:** சிவஞானத்தை எய்திய ஒருவர் கிரியைகளை ஏன் செய்ய வேண்டும் என்னும் வினவுக்கு விடையளிக்கிறது. இதில் 30 செய்யுட்கள் உள்ளன.

(ii) **ஞான பூஜை:** 18 செய்யுட்களைக் கொண்ட இந்நூல் சீவன் முத்தர்கள் மேற்கொள்ளும் வழிபாடுகளைப் பற்றிச் சொல்கிறது. இது ஞான பூஜா விதி எனவும் அழைக்கப் படுகிறது.

(iii) **ஞான தீட்சாவிதி:** எட்டுச் செய்யுட்களைக் கொண்டது. தீட்சையினுடைய விளக்கங்களைத் தருகிறது இந்நூல். இது ஞானதீக்கைத் திருவிருத்தம் எனவும் வழங்கப்படும்.

(iv) **ஞானந்தியேட்டி:** இரண்டே செய்யுட்களைக் கொண்ட இந்நூல் சீவன் முத்தனாகிய இல்லறத்தானுக்கு உரியது.

(v) போஜனவிதி: நான்கு செய்யுட்களைக் கொண்ட இந்நூல் பிட்சை ஏற்பதைப் பற்றியும், தியானம் செய்வதைப் பற்றியும் கூறுகிறது.[59]

தருமபுரம் மடத்தைச் சேர்ந்த சட்டைநாதத் தம்பிரான் இந்நூலுக்கு உரை எழுதியுள்ளார்.

# V உமாபதிக்குப்பின்

வரலாற்றுக்கு முற்பட்ட காலத்திலிருந்து தமிழகத்தில் சிவ வழிபாடு இருந்து வந்தது. இதைப் பற்றிய குறிப்பு இலக்கியங்களிலும் இடம் பெற்றுள்ளது. சிவபெருமான் முழு முதற்கடவுளாக ஏற்றுக்கொள்ளப்பட்டார். அவருடைய பல்வகைத் தோற்றங்கள், ஆலமர் கடவுள், முக்கட் செல்வன், மழுவாள் நெடியோன் எனப்பலவாறு குறிக்கப்பட்டன. அவருடைய இறைத்தன்மையையும், தனித்தன்மையையும் குறிக்கும் வகையில் 'பிறவா யாக்கைப் பெரியோன்' என்று இலக்கியம் குறித்தது. இச்சிவ வழிபாடு சிவநெறியாகச் (சைவமாக) சங்கம் மருவிய காலத்தில் (காப்பியங்களில்) இடம் பெற்றது. அதன் கொள்கைகள் சித்தாந்தமாகத் திருமூலர் காலத்தில் மலர்ந்தன. பல்லவர்கள் காலத்தில் சைவம் அரசாங்கச் சமயமாக அரியாசனம் கொண்டது. இலக்கியங்களிலும், கல்வெட்டிலும் சிவநெறியும் அதன் தத்துவமாகிய சித்தாந்தமும் இடம் பெற்றன. சைவ பக்தி இலக்கியங்களாகிய திருமுறைகளில் சைவம் மிக விரிவாகப் பேசப்பட்டது. அருள் வடிவினனாகிய இறைவன் ஆணவத்தால் கட்டுண்டு கிடக்கும் ஆன்மாவுக்கு விடுதலை தரும் பொருட்டு உடலைத் தந்து, வினையை ஊட்டுகிறான். இதனைத் திருமுறைகள் தெளிவாக எடுத்துக் கூறுகின்றன. எனவே, இறைவழிபாடு தேவை என்பதனையும், வழிபாட்டு முறைகளையும் அவை விளக்கின. இறைவன் இடங்கொண்ட தலங்களுக்குச் சென்று வழிபடுதல், அவனைப் பாடுதல், அவன் திருக்கோயில்களைத் தூய்மைப் படுத்துதல், அவனடியார்களைச் சிவனெனவே கொண்டு வழிபடுதல், பிற உயிர்களில் இறைவனைக் காணல் முதலிய பல்வேறு கருத்துக்களை அவை பேசின.

அடுத்து வந்த மெய்கண்டார் தத்துவங்களைத் தொகுத்து வேதங்களில் காணும் மகா வாக்கியங்களுக்குப் புதுப்

பொருள் காணும், சைவசித்தாந்தத் தத்துவநெறியை உருவாக்கினர். அவர் மாணவராகிய அருணந்தி சிவாசாரியர் தமது வேதாகம அறிவைப் பயன்படுத்திச் சித்தாந்த நெறிகளை விளக்கி, புறச்சமயங்களின் குறைகளை எடுத்துக் கூறி அவற்றை மறுத்தார். பின் வந்த உமாபதிசிவம் வேதாந்த சமயங்கள் பலவற்றையும் கற்றுணர்ந்தார். வேதாந்தத்தின் தெளிவு சைவ சித்தாந்தமே என்று நிறுவினர். ஆன்மா கட்டுப்பட்ட நிலை பற்றிக் கூறும் இலக்கணம் 'பொது' என்றும், முத்தியில் நின்ற நிலைபற்றிக் கூறும் இலக்கணம் 'சிறப்பு' என்றும் கொண்டு, இந்த நெறியைப் பொது என்றும் உண்மை என்றும் (சிவப்பிரகாசத்தில்) வகுத்தார். சித்தாந்தத்துக்கு அடிப்படையாய் விளங்கும் ஆறு பொருள்கள் குறித்தும் அருளை நன்கு விளக்கியும் தசகாரியங்களை எடுத்துக் கூறியும் சைவ சித்தாந்தத்தின் தனிச் சிறப்பை நிறுவினர்.

உமாபதிக்குப் பின்னல் சைவ சித்தாந்தத் தத்துவ நூல்கள் தனியாக வளரவில்லை என்று கூறல் தவருகாது. உமாபதிசிவம் மிக விரிவாக வளர்த்துவிட்ட சைவ சித்தாந்தம் சிறு சிறு பகுதிகளாக எடுத்துக் கொள்ளப் பட்டுப் பின்வந்தோரால் விளக்கப்பட்டன. உமாபதி சிவத்தின் வழி வந்த ஒரு மாணவர் திருவாவடுதுறை மடத்தை நிறுவினர். உமாபதியின் குருவாகிய மறைஞான சம்பந்தரின் மற்ருெரு மாணவர் வழி வந்த ஒரு சீடர் தருமபுர மடத்தை நிறுவினர். இவ்விரு மடங்களும் தனித் தனியே சைவ மரபைப் போற்றுவதில் ஈடுபட்டன. இம் மடங்களின் குருபீடத்தில் அமர்ந்த துறவியர் பெருமக்கள் நூல்கள் இயற்றுவதிலும் வல்லவராக விளங்கினர். அவ்வாறு எழுந்த நூல்கள் பண்டார சாத்திரங்கள் எனப் பட்டன. திருவாவடுதுறை மடத்துக்கென ஒரு பண்டார சாத்திரமும், தருமபுர மடத்துக்கென ஒரு பண்டார சாத்திரமும் உண்டு. அவை நூற்கொத்து ஆகும். ஒவ்வொன்றிலும் 14 நூல்கள் உண்டு.

இத்திருமடங்களில் வந்த ஞானச் செல்வர்கள் சித்தாந்த நூல்களுக்கு விளக்கம் தந்திருக்கிறார்கள். அவை சித்தாந்த நூல்களின் உரைகளாக வெளி வந்துள்ளன. இவ்விரு மடங்களும் மட்டுமன்றி, திருப்பனந்தாள் காசிமடம் போன்றவையும் சித்தாந்த நெறியைப் பரப்புவதில் ஈடுபட்டன. தோத்திர நூல்களை யும் சாத்திர நூல்களையும் மூல வடிவிலும் உரையோடும் வெளியிடுதல், திருமுறைகளிலிருந்து தேர்ந்தெடுத்த பாராயணத் தொகுப்புக்கள், வழிபாட்டு முறைகள், திருமுருகாற்றுப்படை போன்ற வழிபாட்டு நூல்கள் முதலியவற்றை அச்சிட்டு வெளியிடுதல், திருக்கோயில் களில் திருவிழாக் காலங்களிலும் பிற நேரங்களிலும் திருமுறைப் பாராயணங்களுக்கும், சமயச் சொற்பொழிவு களுக்கும் ஏற்பாடு செய்தல் முதலிய திருத்தொண்டுகளின் மூலம் சைவ சமய மரபும் சைவசித்தாந்தத் தத்துவ மரபும் இடையறாமல் பேணிப் பாதுகாக்கப்படுகின்றன.

உலகின் மிகப் பழைய நெறியாகிய சைவ சமயம் எத்தனையோ நூற்றாண்டுகளாக எத்தனையோ இடர்ப் பாடுகளுக்கும் எதிர்ப்புகளுக்கும் இடையில் நின்று நிலவி இன்றுவரை வந்துள்ளது. இது தொடர்ந்து செல்லும் என்பதில் ஐயமில்லை. தலைசிறந்த இந்நெறியின் மரபையும், தத்துவத்தையும் அனைவரும் அறிந்து பயன் பெறுவார்களாக!

"மேன்மைகொள் சைவ நீதி விளங்குக உலகமெல்லாம்"!!
(கந்தபுராணம்)

## அடிக்குறிப்புகள்

12. பார்க்க, சைவ சித்தாந்த வரலாறு, பக்கம், 9.

13. 'என்னறிவு சென்றளவில் யாவின்று அறிந்தபடி
என்னறிவி லாரறிக என்றொருவன் — சொன்னபடி
சொல்லக்கேள் என்றொருவன் சொன்னான் எனக்கதனைச்
சொல்லக்கேள் யானுனக்குஅச் சொல்'
— திருக்களிற்றுப்படியார், 3.

12. எடுத்துக்காட்டாக,
சம்பந்தர், 1. 98. 8; 2. 56. 1; 3. 112. 8.
அப்பர், 4. 22. 5; 5. 46. 6; 6. 78. 4.
சுந்தரர், 7. 84. 8; 7. 15. 6; 7. 91. 6.
மாணிக்கவாசகர், கீர்த்தித் திருவகவல், அடி 10, 20
திருமூலர், 14, 62, 66, 68.
பதினோராந்திருமுறை, 5. 29; 6. 28; 10. 22.
சேக்கிழார், 5. 70; 28. 79. 592; 24. 18.
அருணந்தி, சித்தியார் சுபக்கம் 267.

13. 'மயர்வற நந்தி முனிகணத் தளித்த
உயர்சிவ ஞான போதம்'—சிவஞான போதம், பாயிரம், அடி-6. 7;
'இறைவனரு ணந்திதனக் கியம்ப நந்தி
கோதிலருட் சனற்குமா ரற்குக் கூறக்குவலயத்தின் அவ்வழியெம்
குருநாதன் கொண்டு தீதகல எமக்களித்த ஞானநூல்'
— சிவஞான சித்தியார், பரபக்கம், 10;

'தேவர்பிரான் வளர்கயிலைக் காவல்பூண்ட திருநந்தி
அவர்கணத்தோர்
செல்வர் பாரிற், பாவியசத் தியஞான தரிசனிகள் அடிசேர்
பரஞ்சோதி மாமுனிகள்......மெய்கண்ட திறலார் மாரு
விரவுபுகழ் அருணந்தி......மறைஞான சம்பந்தர் இவரிச்
சந்தானத் தெமையாளும் தன்மை யோரே' — சிவப்பிரகாசம், 5.

14. சைவத்தின் மறுமலர்ச்சி, பக்கம் 40ஐ அடுத்துள்ளபட்டியல்;
சித்தாந்தம், தொகுதி 36, இதழ் 8, பக்கம் 243.

15. சைவத்தின் மறுமலர்ச்சி, பக்கம் 40.

16. சிவப்பிரகாசம், 6; அதற்கு மதுரைச் சிவப்பிரகாசர் எழுதிய உரையும் காண்க.

17. சைவ சந்தானுசாரியர் புராணம், செய்யுள் 60.

18. சிவப்பிரகாசம், 6.

19. சைவசந்தானுசாரியர் புராணம், 62.

20. சிவப்பிரகாசம், 5; சைவசந்தானுசாரியர் புராணம் 63.

21. சிவப்பிரகாசம், 6; மதுரைச் சிவப்பிரகாசர் உரை.

22. சைவசந்தானுசாரியர் புராணம், 64, 65.

23. மேற்படி நூல், 65; சிவப்பிரகாசம் 6.

24. சிவப்பிரகாசம் 6.

25. போற்றிப் பஃறொடை, கண்ணி 70.

26. மேற்படி நூல், வெண்பா; நெஞ்சுவிடுதூது, கண்ணி 84.

27. மேற்படி.

28. நெஞ்சுவிடுதூது, கண்ணி 120; போற்றிப்பஃறொடை, வெண் பா.

29. சங்கற்பநிராகரணம், வெண்பா.

30. உமாபதியின் தந்தையார் பெயர் நடராஜ தீக்ஷிதர் என்பதாக இராசேந்திரபுர மான்மியம் கூறுகிறது — பார்க்க, சிவப்பிரகாசம் (ஆங்கில மொழிபெயர்ப்பு), தருமபுர வெளியீடு, 1945, முன்னுரை, ப. ii.

31. தாயுமானவர் அவரைக் 'கொற்றங் குடியார்' என்றே குறிக்கிறார் — எந்நாட்கண்ணி. அந்த ஊரின் இப்போதைய பெயர் 'கொத்தங்குடி' ஆகும்.

32. கொற்றவன்குடி உமாபதி சிவாசாரியார் — கி. பி. 1290 - 1340, J. M. சோமசுந்தரம் பிள்ளை, The University Environs, 1957, ப. 132. T. V. சதாசிவ பண்டாரத்தார், தமிழிலக்கிய வரலாறு, (13, 14 - ஆம் நூற்றாண்டுகள்), 1963, ப. 54.

33. 'தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர்' — 35. 8.
நெஞ்சுவிடுதூது, கண்ணி, 24.

34. நெஞ்சுவிடுதூது, கண்ணி 25.

35. இதன் மற்றொரு பெயர் 'திருத்தொண்டர் புராண வரலாறு, இந்நூலின் ஆசிரியர், சித்தாந்த சாத்திர ஆசிரியராகிய உமாபதிசிவமா? என்று ஐயுறுவோரும் உண்டு.

36. கடந்த நூற்றாண்டில் முதன் முதலாகச் சித்தாந்த சாத்திரங்களை அச்சிட்ட கொ. சண்முக சுந்தர முதலியார் இவ்வெட்டையும் 'சித்தாந்த அஷ்டகம்' என்னும் பெயரால் பதிப்பித்தார். பார்க்க, சித்தாந்த சாத்திரம், சமாஜம், 1940, ப. 1160.

37. திருமந்திரம், 2329 — 2331.
'அன்னது சித்தாந்த மாமறையாய்ப் பொருள்
துன்னிய ஆகம நூலெனத் தோற்றுமே' — செய்யுள் 23—24;

38. 'அரன்உரை செய்தருள் ஆகமந் தன்னில் — உருவிய
வேதாந்த சித்தாந்த உண்மையே' — 2344.

39. J. H. Piet, A Logical Presentation of the Saiva Siddhanta Philosophy, 1952, ப. 12.

40. பார்க்க — மதுரைச் சிவப்பிரகாசர் உரை, மெய்கண்டசாத்திரம். ப. 805.

41. பொதுவாகக் கருணை அல்லது அருள் என்னும் சொல்லுக்கான பொருளுக்கும், சைவசித்தாந்தத்தில் ஆளப்படும் கருணை அல்லது அருளுக்கும் உள்ள வேறுபாட்டினை மிக அழகாகவும் ஆணித்தரமாகவும் தாஸ்குப்தா தமது நூலில் விளக்கி இருக்கின்றார் — A History of Indian Philosophy, VOL V, Page 4.

42. மாபாடியம், ப. 45.

43. ஸ்ரீ வேலப்ப தேசிகரும் அவர் மாணவராகிய நமச்சிவாயத் தம்பிரானும் எல்லா மெய்கண்ட நூலுக்கும் உரை செய்துள்ளனர் என்று கூறப்படுகிறது — பார்க்க, த. ச. மீனாட்சிசுந்தரம்பிள்ளை, திருவாவடுதுறை ஆதீன வரலாறு, 1950, ப. 37.

44. J. M. நல்லசாமிபிள்ளை, Siddhanta Trayam, 1946, P. 19

45. 'குறிக்கும் அருள் நல்கக் கொடி' — கொடிக்கவி, 2; மாணவனை ஞானநெறியிலே செலுத்துவதனைக் கொடியேற்றம் குறிப்பிடுகிறது. சைவ சாத்திரங்களில் இந்நிகழ்ச்சி நிர்வாண தீட்சை அல்லது ஞான தீட்சை எனப்படுகிறது. இதன்மூலம் சஞ்சிதம் ஒழிக்கப் படுகிறது. கொடியேற்றத்தை அடுத்துவரும் விழாக்கள், தசகாரியம், திருவைந்தெழுத்தை ஓதுதல், இறுதியில் முத்திநிலையை எட்டுதல், மீண்டும் அதிலிருந்து வழுவிப் பிறப்பிறப்பில் வீழாது இருத்தல் ஆகியவற்றைக் குறிக்கின்றன — பார்க்க, J. M. நல்லசாமி பிள்ளை, Siddhanta Trayam, முன்னுரை, ப. (ii)

46. இக்கருத்தை முதலில் வெளியிட்டவர் காலஞ்சென்ற எஸ். அனவரதவிநாயகம் பிள்ளை ஆவர் (சித்தாந்த சாத்திரம், இரண்டாம் பதிப்பு, சமாஜம், 1940, ப. 1161). இதில் அவர் பல்வேறு காரணங்களைக் குறிக்கிறார்.

47. சைவசித்தாந்த சந்தானுசாரியர் சரித்திரமும் அவர்களது அருள் நூல்களும், ப. 17; பிள்ளையவர்கள் பின்னர் தமது கருத்தை மாற்றிக் கொண்டார். இலக்கிய வரலாறு (பகுதி 2, 1949) என்னும் நூலில், சீகாழிச் சிற்றம்பல நாடிகள் கங்கை மெய்கண்டாரின் மாணவர் என்றும், அவர் மச்சுச்செட்டியாரின் மாணவர் என்றும், மச்சுச்செட்டியார் உமாபதியின் மாணவர்களுள் ஒருவர் என்றும் கூறியிருக்கிறார் — (ப. 394)

48. சைவத்தின் மறுமலர்ச்சி, ப. 40.

49. பார்க்க — தி. வை. சதாசிவ பண்டாரத்தார், தமிழ் இலக்கிய வரலாறு, ப. 59.

50. மாபாடியம் — ப. 44.

51. சைவவாதி நிராகரணம், அடி 66—74.

52. சிவப்பிரகாசம் (ஆங்கில மொழிபெயர்ப்பு, தருமபுரம், 1945) முன்னுரை, ப. ii

53. Saiva Siddhanta, VOL I, No. 2 (1966), ப. 143.

54. இது சேக்கிழார் நாயனர் புராணம் எனவும் வழங்கப்படும். பார்க்க — பெரியபுராணம், ஆறுமுக நாவலர் பதிப்பு, ப. 41.

55. ஆறுமுக நாவலர் பதிப்பு, ப. 52; திருப்பனந்தாள்பதிப்பு, ப. 708

'திருக்கிளருங் கயிலைமலைக் காவல் பூண்ட
செல்வமலி திருநந்தி மரபில் வந்து,
கருக்குழியில் எமை வீழாதெடுத்தாட் கொள்ளுங்
கருணைமிகு மெய்கண்ட தேவர்தூய,
மருக்கிளர்தாள் பரவும்அரு ணந்திதேவர்
மகிழும் மறை ஞானதே வருக்கன் பாகி,
இருக்கும்உமா பதிதேவர் சேக்கிழார்தம்
இசைப்புரா ணம்உரைத்தார் என்பமாதோ'

— சேக்கிழார் புராணம்.

56. உமாபதியின் மாணவராகிய அருள் நமசிவாய தேசிகர் இதனை இயற்றியதாக மு. அருணசலம் கூறுகிறார் (பார்க்க) சைவசித்தாந்தச் சிறு நூல்கள், 1966, ப. 20; ஞானசரிதை (தருமபுரம் வெளியீடு, 1934, ப. 8), தருமபுரஆதீன மரபுப்படி வாதுளாகமும் உமாபதியின் ஞானசரிதையும் ஞான பாதத்துக்காகப் பின்பற்றப் படுகின்றன என்று கூறுகிறது. எனவே, மரபுவழிப்படியான இக்கருத்தையே கொள்ளல் பொருந்தும்.

57. முத்திநிச்சயப் பேருரை, தருமபுரம் வெளியீடு, 1946. ப. 6

58. சித்தாந்த சாத்திரம், முற்கூறியநூல், 711, 742, 751, 762, 792, 1024, 1028, 1033, 1038.

59. வறியவர்கள் ஏற்பது பிச்சை; துறவிகளுக்கு இடுவது பிட்சை

# இந்நூலில் கையாளப் பெற்றுள்ள சைவசித்தாந்தச் சொற்களின் விளக்கம்

அ

அசுத்த மாயை – ஆன்மாவின் பிணிப்பு நீங்குவதற்காக இறைவன் இதனை உயிரொடுபுணர்த்துகிறான். இதுவே உடம்பு, பொறிகள், உலகம், இன்ப துன்ப நுகர்ச்சிகளாக உருப்பெறுவது.

அட்ட மூர்த்தம் – எட்டு வடிவங்கள். நிலம், நீர், தீ, வளி, வான், கதிரவன், நிலா, உயிர் ஆகிய எட்டுருவாய் இறைவன் விளங்குதல்.

அத்துவாக்கள் – எழுத்து, சொல், மந்திரம் என்னும் உலகம் மூன்றும், தத்துவம், புவனம், கலை என்னும் பொருள் வடிவ உலகம் மூன்றும் ஆக ஆறும் அத்துவா எனப்படும். உயிர்கள் முதல்வனை அடைவதற்குப் படிவழி போன்று இருத்தலின் அத்துவா எனப்பட்டது. அத்துவா – வழி (வடமொழி.)

அத்துவிதம் – இருதிறன் அன்மை; கடவுளும் உயிர்களும் பிரிப்பின்றி உள்ளன என்னும் சம்பந்தத்தைக் குறிக்கும் சொல்.

அயன் – பிரமன்; படைத்தற் கடவுள்

அரன் – உருத்திரன்; அழித்தற் கடவுள்

அரி – திருமால்; காத்தற் கடவுள்

அவத்தை: நிலை: இரண்டு. 1. காரண அவத்தை
2. காரிய அவத்தை.

ஆ

ஆணவம் – ஆன்மாவோடு தொடக்கமின்றி இணைந்திருப்பது; அறியாமையைவிளை விப்பது. இது சகஜமலம், மூலமலம் எனவும் வழங்கப்படும்.

ஆன்மா – உயிர்; சிறப்புச்சொல். ஆத்மா என்பது வடமொழி வடிவம். இதனை விரிவாக்கி, இறைவனைக் குறிக்கப் பரமாத்மா என்றும், உயிரைக் குறிக்கச் சீவாத்மா என்றும் கூறுவதுண்டு.

இ

இருவினையொப்பு – நல்வினை, தீவினைகளையும் அவற்றின் பயன்களாகிய இன்ப துன்பங்களையும் ஒப்பக் கருதி விடுத்தல்.

இறை
இறைவன். } எங்கும் விரவி நிற்கும் பொருள் (Immanent)

உ

உயிர் – உடலில் விரவியிருந்து உடலை இயக்குவது; பொதுச் சொல்.

ஐ

ஐந்து மலங்கள் – ஆணவம், கன்மம், மாயை, திரோதாயி, மாயேயம்.

ஐந்தெழுத்து – நமசிவாய என்னும் மந்திரம்.

ஐந்தொழில்கள் – படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல். (பஞ்சகிருத்தியங்கள்–வடமொழி).

க

கடவுள் — எல்லாவற்றையும் கடந்து நிற்கும் பொருள் (Transcendent)

கன்மம் — வினை; உயிரின் செயல்களுக் கேற்ற பயன்களை (நல்லவை தீயவை இரண்டையும்) ஊட்டுவிப்பது.

கா

காரண அவத்தை — மூன்று; 1. கேவலம் 2. சகலம் 3. சுத்தம்

காரிய அவத்தை — ஒவ்வொரு காரண அவத்தையிலும் இது ஐயைந்து வகைப்படும். அவை நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம் உயிர்ப்படக்கம். சாக்கிரம் (ஜாக்கிரம்), சொப்பனம் (ஸ்வப்னம்), சுழுத்தி (ஸுஷுப்தி), துரியம், துரியாதீதம் – வடமொழி

கே

கேவலம் — காரண அவத்தைகள் மூன்றனுள் ஒன்று: ஆன்மா ஆணவத்தோடு மட்டும் கலந்திருந்து, செயலற்று நிற்கும் நிலை.

ச

சகலம் — காரண அவத்தைகள் மூன்றனுள் ஒன்று; ஆன்மா உடம்பை மேற் கொண்டு செயல்பட்டு நிற்கும் நிலை

சதாசிவன் — முழுமுதற் கடவுள்.

சத்தி நிபாதம் — (சக்தி இறங்கி வருதல்) அருள் மலர்தல்: ஆணவத்தின் பிடியிலிருந்து

விலகும் பக்குவம் பெற்ற ஆன்மாவுக்கு இறைவன் அருள் புரிதல்.

சி

சிவபெருமான் } முழுமுதற் கடவுள்
சிவன்

சீ

சீவன் } ஆன்மா
சீவாத்மா

சு

சுத்த மாயை — இறைவனின் அருள் (சக்தி); ஆணவம் கன்மம் என்பவற்ருேடு கலவாது இன்பம் மட்டும் கொடுக்கும் மாயை. இறைவன் இடம் கொண்டு தன் செயல் நடத்துவதற்குச் சார்பாக உள்ளது.

சுத்தம் — காரண அவத்தைகள் மூன்றனுள் ஒன்று. ஆன்மா, ஆணவம் மாயை என்பவற்றி லிருந்து நீங்கி (பாசம் நீங்கி) இறை யநுபவத்தில் திளைக்கும் நிலை, இதுவே வீட்டுநிலை.

ஞா

ஞானம் — உண்மையறிவு.

த

தசகாரியம் — பத்துச் செயல்கள்: 1 தத்துவ ரூபம், 2 தத்துவ தரிசனம், 3 தத்துவ சுத்தி, 4 ஆன்ம ரூபம், 5 ஆன்ம தரிசனம்,

6 ஆன்ம சுத்தி, 7 சிவ ரூபம், 8 சிவ தரிசனம், 9 சிவ யோகம், 10 சிவ போகம்.

தத்துவம் – படைப்புக் காலம் தொட்டு, உயிர் முத்தி அடையும் வரை தன் தன்மை மாருது இருக்கும் கருவிகள். இவை முப்பத்தாருக வகுக்கப்படும்.

து

துரியம் – கேவலத்தில் துரியம், சகலத்தில் துரியம், சுத்தத்தில் துரியம் என மூவகைப்படும். கேவலத்தில் துரியம்: பிராண வாயுவின் செயல் ஒன்றே உள்ள பேருறக்க நிலை.
சகலத்தில் துரியம்: உலகப் பொருள்களில் அழுந்தி, இது இன்பம், இது துன்பம், இது மயக்கம் என நிற்கும்நிலை.
சுத்தத்தில் துரியம்: இறைவன் திருவருளோடு ஒன்றி அதன் வழி நிற்றல்.

துரியாதீதம் – கேவலத்தில் துரியாதீதம். உயிர்ப்பும் அடங்கி, உணர்வும் செயலும் அற்றிருத்தல்.
சகலத்தில் துரியாதீதம்: இன்பதுன்ப மயக்கம் என்பவற்றுள் ஒன்றில் அதுவேயாக அழுந்தி நிற்றல்.
சுத்தத்தில் துரியாதீதம்: பேரின்பமயமாகிய பரம்பொருளில் அழுந்தி அதுவேயாக நிற்றல்.

ப

பசு – பாசத்தால் பிணிக்கப்பட்டது, உயிர் (பச்........வடமொழி)

பதி – பசுபதி என்பதன் சுருக்கம்; உயிர்களின் தலைவன்.

பத்தி – பக்தி

பந்தம் – கட்டு

பா

பாசம் – (உயிரைப்) பிணிப்பது; மலம் எனவும் வழங்கப்படும்.

பூ

பூதங்கள் – ஐந்து; நிலம், நீர், தீ, வளி, வான்.

ம

மலம் – அழுக்கு; பாசம்; கட்டு; தளை.

மலபரிபாகம் – ஆணவம் பழுத்து உதிர்தல்; ஆன்மாவைக் கட்டிய பாசம் தன் பிடிப்பு நீங்கல்.

மா

மாயேயம் – மாயையின் திரிபுகள்; உடல், பொறிகள், உலகம், நுகர்ச்சி (தநு, கரண, புவன போகம்–வடமொழி).

மாயை – இருவகை: 1 சுத்தமாயை 2. அசுத்த மாயை

மு

மும்மலம் – மூன்று மலங்கள்: 1 ஆணவம் 2 கன்மம் 3 மாயை.

# BIBLIOGRAPHY

(English)

1. *Arokiasamy, A. P.,* –

The Doctrine of Grace in Saiva Siddhanta, Trichinopoly, 1935.

2. *Basham, Dr. A. L.,* –

History and Doctrine of Ajivakas, London, 1951.

3. *Choudhuri. Dr. (Mrs) Roma.* –

Doctrine of Srikantha, Vol II and Vol I, Calcutta, 1959, 1960.

4. *Dasgupta, S. N.,* –

A History of Indian Philosophy, Cambridge University Press, 1962, Vol. V.

5. *Devasenapathi, Dr. V. A.,* –

Saiva Siddhanta, University of Madras, 1960.

6. *Devasenapathi, Dr. V. A.,* –

Of Human bondage and Divine Grace, Annamalai University, 1963.

7. *Dorai Rangaswami, Dr. M. A.,* –

The Religion and Philosopy of Tevaram, 2 Vols., University of Madras, 1959.

8. *Hoisington, H. R.,* –

Sivaprakasam (Light of Siva-English Translation) The Journal of American Oriental Studies, 1854.

9. *Kantimatinatha Pillai, V. P.*, –
The Cult of Siva or Lessons in Sivagnanabotham, Kazhagam, Madras, 1961.

10. *Mahadevan, Dr. T. M. P.*, –
The Philosophy of Advaita, Madras, 1957.

11. *Mahadevan, Dr. T.* M. *P.*, –
Religion and Philosophy of Saivism (article) in The History and Culture of the Indian People, Bharatiya Vidya Bhavan, Bombay, 1960.

12. *Maraimalai Adigal* –
The Saiva Siddhanta as Philosophy of Practical Knowledge, Kazhagam, Madras, 1966.

13. *Marshall, Sir John.*, –
Mohenjadaro and the Indus Civilization London 1931.

14. *Murugesa* Mudaliar, *N.*, –
The Relevence of Saiva Siddhanta Philosophy, Annamalai University, 1968.

15. *Murugesa Mudaliar, N.*, –
Collected Lectures on Saiva Siddhanta (1946–1954 Annamalai University. 1965.

16 *Nallaswami Pillai, J.* M., –
Studies in Saiva Siddhanta, Dharmapuram Adinam, 1962.

17. *Nallaswami Pillai, J.* M., –
Siddhanta Trayam, Dharmapuram Adinam, 1946

18. *Nallaswami Pillai, J.* M., -

Tiruvarutpayan of Umapati (English Translation), 1896.

19. *Nallaswami Pillai, J.* M., -

Sivagnana Botham of Meykanda Deva.(Translation) Madras, 1895.

20. *Narayana Iyer, C. V.*, -

Origin and History of Saivism in South India, University of Madras, 1936.

21. *Navaratnam, Ratna* -

Tiruvachakam, The Hindu Treatment of Love, Bharatiya Vidya Bhavan, Bombay, 1963.

22. *Nilakanta Sastri, K. A.*, -

A Historical Introduction to Saivism (article) in the Cultural Heritage of India, Vol IV, Calcutta, 1956.

23. *Nilakanta Sastri, K. A.*, -

Development of Religion in South India, Madras, 1963.

24. *Paranjoti, Dr. V.*, -

Saiva Siddhanta (2nd Edition) London, 1954.

25. *Piet, J. H.*, -

A Logical Presentation of Saiva Siddhanta Philosophy, Madras, 1952.

26. *Ponnaiah, Dr. V.,* –

The Saiva Siddhanta Theory of Knowledge. Annamalai University, 1952.

27. *Pope, Dr. G. U.,* –

Tiruvacagam (Translation) Reprint, University of Madras 1959.

28. *Rajamanikkam, Dr.* M, –

Development of Saivism in South India, Dharmapuram Adinam, 1964.

29. *Sivaraman, K.,* –

Sivagnana Siddhiyar (English Translation) Tiruppanandal, 1949.

30. *Somasundaram Pillai, J. M.,* –

University Environs, Annamalai University, 1957.

31. *Srinivasa Iyengar, M.,* –

Tamil Studies, Madras, 1914.

32. *Subramania Pillai, K.,* –

Sivaprakasam (Translation), Dharmapuram Adinam, 1945.

33. *Subramania Pillai, K.,* –

The Metaphysics of the Saiva Siddanta System, Kazhagam, Madras, 1958.

34. *Suryanarayana Sastri, S. S.,* –

Collected Papers, University of Madras, 1961.

35. *Venkataramanayya, Dr. N.,* –

Rudra-Siva, University of Madras, 1941.

36. Mutt and Temples, Dharmapuram Publication, 19(0.

*Souvenir*

1. *Essays in Philosophy* –

Presented to Dr. T. M. P. Mahadevan on his fiftieth birthday, Ganesh & Co., Madras, 1962.

*Theses* *(Manuscript)*

1. *Sivaraman, Dr. K.,* –

The Saiva Siddhanta Philosophy (Its formative Concepts, Methods and Problems), Doctoral Thesis Banaras Hindu University, 1962.

2. *Isaac Jesudoss, D.,* –

The Schools of Saivism, M. Litt. Thesis, Annamalai University, 1947.

3. *Suvarnakhandi, M. R.,* –

The Philosophy of Veerashaivism, – M. A. Thesis – Banaras Hindu University, 1953.

# மேற்கோள் நூல்கள் (தமிழ்)

1. அம்பலவாண தேசிகர்
பூப்பிள்ளை அட்டவணை, கழகம், சென்னை, 1954.

2. அரங்கசாமி பிள்ளை, எஸ்., –
மெய்கண்டார் வரலாறு, விருத்தாசலம், 1958.

3. அருணாசலம், மு., –
சித்தாந்தச் சிறு நூல்கள், சென்னை 1966

4. அருணைவடிவேல் முதலியார், சி., –
சித்தாந்தத் தெளிவியல், தருமையாதீனப், 1968.

5. அனவரதவிநாயகம் பிள்ளை, எஸ்., –
சைவ சித்தாந்த வரலாறு, சென்னை, 1966.

6. இரட்டைப் புலவர்கள். –
ஏகாம்பரநாதர் உலா.

7. இராசமாணிக்கம், டாக்டர், மா., –
சைவசமயம், காரைக்குடி, 1959.

8. இராசமாணிக்கம், டாக்டர், மா., –
சைவ சமயவளர்ச்சி, சென்னை, 1958

9. இராசமணிக்கம், டாக்டர், மா., –
பெரியபுராண ஆராய்ச்சி, சென்னை, 1960.

10. இராமச்சந்திரன் செட்டியார், சி. எம்., –
சமயங்கள், கழகம், சென்னை, 1940.

11. இராமநாத பிள்ளை ப, –
(பதிப்பாசிரியர்) தேவார அருள் முறைத்திரட்டு (உமாபதி) – உரையுடன், கழகம், சென்னை, 1961

12. உமாபதி –
கோயிற்புராணம், உரையுடன் – ஆறுமுகநாவலர் பதிப்பு, சிதம்பரம், 1952.

13. உமாபதி –
சிவப்பிரகாசம், சிந்தனையுரையுடன், சைவசித்தாந்த மகாசமாஜம், சென்னை, 1934.

14. உமாபதி –
சிவப்பிரகாசம், ப. இராமநாத பிள்ளை உரையுடன் (மெய்கண்டசாத்திரம், பகுதி II), கழகம், 1968.

15. உமாபதி தேவநாயனர். –
ஞானசார சாஸ்திர பஞ்சகம், தருமபுரம் ஆதீனம், 1934.

16. ஔவையார். –
வாக்குண்டாம்.

17. கம்பர் –
இராமாயணம் (பாலகாண்டம்) எஸ். ராஜம் கம்பெனி, சென்னை, 1958.

18. காவை அம்பலவாண முனிவர். –
திருவருட்பயன் உதாரணக் கலித்துறை, தருமபுரம் ஆதீனம், 1940.

19. குமரகுருபர சுவாமிகள். –
கந்தர் கலிவெண்பா.

20. குருஞானசம்பந்த சுவாமிகள். –
சிவபோக சாரமும், சொக்கநாத வெண்பாவும் – தருமபுரம் ஆதீனம், 1956.

21. குலசேகர ஆழ்வார்., –
பெருமாள் திருமொழி.

22. குறுந்தொகை –
(பதிப்பு) எஸ். ராஜம் கம்பெனி, சென்னை, 1957.

23. கோவிந்தன், ப., –
தமிழர் சமயம் அல்லது சைவ சமயம், கழகம், சென்னை, 1967.

24. சதாசிவபண்டாரத்தார், டி. வி., –
தமிழ் இலக்கிய வரலாறு (13, 14, 15 நூற்றுண்டுகள்) அண்ணமலைப் பல்கலைக் கழகம், 1963.

25. சாமிநாதையர், டாக்டர், உ. வே., –
(பதிப்பு) பதிற்றுப்பத்து, பழைய உரையுடன், 1957.

26. சாமிநாதையர், டாக்டர், உ. வே., –
(பதிப்பு) – பரிபாடல், பரிமேலழகர் உரையுடன், 1956.

27. சாமிநாதையர், டாக்டர், உ. வே., –
(பதிப்பு) ஐங்குறு நூறு, பழைய உரையுடன், 1957.

28. சாமிநாதையர், டாக்டர், உ. வே., –
(பதிப்பு) புறநானூறு, உரையுடன், 1956.

29. சாமிநாதையர், டாக்டர், உ. வே., –
(பதிப்பு) பத்துப்பாட்டு, நச்சினார்க்கினியர் உரையுடன் 1956.

30. சாமிநாதையர், டாக்டர் உ. வே., –
(பதிப்பு) சிலப்பதிகாரம், அரும்பதவுரை – அடியார்க்கு நல்லார் உரையுடன், 1950.

31. சித்தாந்த சாத்திரம். –
சைவசித்தாந்த மகாசமாஜம் (பதிப்பு). சென்னை, 1940.

1) சிவஞானபோதம் (மெய்கண்டார்) சிவஞான சுவாமிகளின் சிற்றுரை.

2) சிவஞான சித்தியார், பர பக்கம் (அருள்நந்தி)– தத்துவப் பிரகாசர் உரை.

3) சிவஞான சித்தியார், சுபக்கம் (அருள்நந்தி)– சிவஞான முனிவர் உரை.

4) இருபா இருபஃது (அருள்நந்தி) சீகாழித்தத்துவ நாதர் உரை.

5) உண்மை விளக்கம் (மனவாசகம் கடந்தார்)– உரையுடன்.

6) திருவுந்தியார் – (திருவியலூர் உய்யவந்த தேவ நாயனர்) – பழைய உரையுடன்.

7) திருக்களிற்றுப் படியார் – (திருக்கடவூர் உய்ய வந்த தேவ நாயனர்)– பழைய உரையுடன்.

8) சிவப்பிரகாசம் – (உமாபதி) மதுரைச் சிவப்பிரகாசர் உரை.

9) திருவருட்பயன் – (உமாபதி) சிந்தனையுரை.

10) வினா வெண்பா – (உமாபதி) நமச்சிவாயத் தம்பிரான் உரை.

11) போற்றிப்பஃறொடை – (உமாபதி) – பழைய உரையுடன்.

12) கொடிக்கவி – (உமாபதி) – பழையஉரையுடன்.

13) நெஞ்சுவிடுதூது – (உமாபதி) – பழைய உரையுடன்.

14) உண்மைநெறி விளக்கம் (உமாபதி) – சீகாழித் தத்துவ நாதர் – சிந்தனையுரை.

15) சங்கற்ப நிராகரணம் (உமாபதி) – ஞானப்பிரகாச தேசிகர் உரை.

32. **சிவகுருநாத பிள்ளை, ந.,** –
*சிவஞான சித்தியார் ஆராய்ச்சி,* திருவாவடுதுறை ஆதீனம், *1949.*

33. **சிவஞான முனிவர்.** –
*சிவஞான சித்தியார் சுபக்கம்,* உரை – திருவாவடு துறை ஆதீனம், *1954.*

34. **சிவஞான முனிவர்.** –
*சிவஞான மாபாடியம் (மாபாடியம்),* கழகம், சென்னை, *1936.*

35. **சிவஞான முனிவர்.** –
*சிவசமவாத உரை மறுப்பு* – கழகம், சென்னை, *1920.*

36. **சிவஞான முனிவர்.** –
உரைச்செய்யுள், கழகம், சென்னை, *1920.*

37. **சிவஞான முனிவர்.** –
தொல்காப்பிய முதற் சூத்திர விருத்தி.

38. சிவப்பிரகாச சுவாமிகள்., –
நால்வர் நான்மணிமாலை, சிதம்பரம், 1962.

39. சிவப்பிரகாசர், புன்கூர்., –
சிவப்பிரகாசக் கட்டளை, தருமபுரம் ஆதீனம் 1932.

40. சீகாழிச் சிற்றம்பல நாடிகள்., –
துகளறு போதம் (ஈசான சிவன் உரையுடன்) 1950.

41. சீநிவாச பிள்ளை, கா., –
தமிழ் இலக்கிய வரலாறு, தஞ்சை, 1922.

42. சீநிவாஸாச்சாரியார், தே. ஆ., –
1.) போற்றிப்பஃறொடை-ஏற்புக்சட்டுரை, 1956.
2.) கொடிக்கவி, உண்மைநெறி விளக்கம் – குறிப்பு விளக்கக் கட்டுரை, 1956.
3.) சிவஞான போதமும் பன்னிருதிருமுறையும், 1959.
4.) சங்கற்ப நிராகரணம் – சார்புக்கட்டுரை, 1958.
5.) திருவருட்பயன் – தெரிவுக்கட்டுரை, 1957.
6.) சிவப்பிரகாசம் – சீர்மைக் கட்டுரை (4 பகுதிகள்), 1960.

அனைத்தும் திருவாவடுதுறை ஆதீன வெளியீடுகள்.

43. சுந்தரமூர்த்தி, கு., –
(பதிப்பு) தொல்காப்பியம் எழுத்ததிகாரம் – நச்சினார்க்கினியம் – 1965.

44. சுப்பிரமணியபிள்ளை, கா., –
இலக்கிய வரலாறு (இரண்டு பாகங்கள்) சென்னை 1949.

45. சுப்பிரமணியபிள்ளை, கா., –
சைவ சித்தாந்த சந்தானசாரியர் சரித்திரமும் அவர்களது அருள் நூல்களும், சென்னை.

46. சுப்பிரமணியபிள்ளை, கா., –
திருக்களிற்றுப்படியார் (உரை நடை) *1961.*

47. சுப்பிரமணியபிள்ளை, கா., –
திருவுந்தியாரும் இருபா இருபஃதும் (உரைநடை) *1963.*

48. சுப்பிரமணியபிள்ளை, கா., –
சிவஞான போதம் (உரை நடை) *1962.*

49. சுப்பிரமணியபிள்ளை, கா., –
சிவஞான சித்தியார், சுபக்கம் (உரை நடை), *1962.*

50. சுப்பிரமணியபிள்ளை, கா., –
உண்மை விளக்கம் (உரை நடை), *1961.*

51. சுப்பிரமணியபிள்ளை, கா., –
சிவப்பிரகாசம் (உரை நடை), *1962.*

52. சுப்பிரமணியபிள்ளை, கா., –
திருவருட்பயன், வினா வெண்பா, போற்றிப் பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சுவிடுதூது, உண்மை நெறி விளக்கம் (உரை நடை), *1962.*

53. சுப்பிரமணியபிள்ளை, கா., –
சங்கற்ப நிராகரணம் (உரை நடை), *1963.*
அனைத்தும் தருமபுர ஆதீன வெளியீடுகள்.

54. சுவாமிநாத தேசிகர். –
சைவ சந்தானசாரியர் புராணம், காஞ்சீபுரம், *1940.*

55. தண்டபாணி தேசிகர், ச., –
சைவத்தின் மறுமலர்ச்சி, தருமபுரம் ஆதீனம், 1950.

56. தாயுமானவ சுவாமிகள். –
தாயுமானவ சுவாமிகள் பாடல், தருமபுரம் ஆதீனம், 1965.

57. திருமங்கை ஆழ்வார். –
பெரிய திருமொழி.

58. திருமுறைகள்

1.) சம்பந்தர் – தேவாரம் (முதல் திருமுறை)– உரையுடன், தருமபுரம் ஆதீனம், 1953.

2.) சம்பந்தர் – தேவாரம் (இரண்டாம் திருமுறை) – உரையுடன், தருமபுரம் ஆதீனம், 1954.

3.) சம்பந்தர் – தேவாரம் (மூன்றும் திருமுறை) – உரையுடன், தருமபுரம் ஆதீனம், 1955.

4.) அப்பர் – தேவாரம் (நாலாந் திருமுறை) – உரையுடன், தருமபுரம் ஆதீனம், 1957.

5.) அப்பர் – தேவாரம் (ஐந்தாம் திருமுறை) – உரையுடன், தருமபுரம் ஆதீனம், 1961.

6.) அப்பர் – தேவாரம் (ஆறும் திருமுறை) – உரையுடன், தருமபுரம் ஆதீனம், 1963.

7.) சுந்தரர்– தேவாரம் ( ஏழாம்திருமுறை ) – உரையுடன், தருமபுரம் ஆதீனம், 1964.

8.) மாணிக்கவாசகர் – திருவாசகம் (எட்டாம் திருமுறை), கழகம் சென்னை, 1948.
திருக்கோவையார், திருப்பனந்தாள், 1960.

9.) ........................ – திருவிசைப்பா–திருப் பல்லாண்டு (ஒன்பதாம் திருமுறை), திருப் பனந்தாள், 1949.

10.) திருமூலர்–திருமந்திரம் (பத்தாம் திருமுறை)– கழகம், சென்னை, 1942.

11.) .................... – பதினோராம் திருமுறை – சைவ சித்தாந்த மகா சமாஜம், சென்னை, 1940.

12.) சேக்கிழார்–பெரியபுராணம் (பன்னிரண்டாம் திருமுறை), திருப்பனந்தாள், 1950. ஆறுமுகநாவலர் பதிப்பு, சென்னை, 1928.

59. திருவள்ளுவர். –
திருக்குறள், பரிமேலழகர் உரையுடன், திருப்பனந்தாள், 1968.

60 நாலடியார்.

61. பாலசுப்பிரமணியன், சி., –
தமிழ் இலக்கிய வரலாறு, சென்னை, 1964.

62. பிங்கல முனிவர். –
பிங்கலந்தை, கழகம், 1968.

63. புலியூர்க் கேசிகன். –
(பதிப்பு) தொல்காப்பியம், சென்னை, 1967.

64. புலியூர்க் கேசிகன். –
(பதிப்பு) மணிமேகலை, சென்னை, 1965.

65. போற்றிப் பஃறொடை, வினாவெண்பா. –
ஆ. ஈசுரமூர்த்திப் பிள்ளை உரையுடன், சென்னை, 1928.

66. மறைஞானசம்பந்த நாயனுர் –
சைவ சமய நெறி (ஆறுமுகநாவலர் உரை), சென்னை, *1955*.

67. மறைஞான தேசிகர் –
பதிபசுபாசத் தொகை, தருமபுரம் ஆதீனம், *1940*.

68. மறைமலையடிகள் –
மாணிக்கவாசகர் வரலாறும் காலமும், கழகம், சென்னை, *1957*.

69. மறைமலையடிகள் –
(பதிப்பு) சதமணிக்கோவை, *1898*.

70. மறைமலையடிகள் –
(பதிப்பு) பஞ்சாக்கரமாலை, *1898*.

71. மறைமலையடிகள் –
(பதிப்பு) ஞான சாகர வெண்பா, *1898*.

72. மாணிக்கவாசக முதலியார், முத்து, சு., –
சிவப்பிரகாசம் – புத்துரையும் திருந்திய பாடங்களும்-கட்டுரைகள், சித்தாந்தம், *1950-51*.

73. மீனுட்சிசுந்தரம் பிள்ளை, த.ச., –
திருவாவடுதுறை ஆதீன வரலாறு, திருவாவடுதுறை ஆதீனம், *1950*.

74. மீனுட்சிசுந்தரம் பிள்ளை, த. ச., –
(பதிப்பு) சிவப்பிரகாசம் (உரையுடன்) திருவாவடுதுறை ஆதீனம், *1967*.

75. மீனுட்சிசுந்தரம் பிள்ளை, த. ச., –
(பதிப்பு) -சதமணிக்கோவை, திருவாவடுதுறை ஆதீனம், *1949*.

76. **மீனாட்சிசுந்தரம் பிள்ளை, தி. ச., –**
(பதிப்பு) திருஞானசாகரம், திருவாவடுதுறை ஆதீனம், *1952.*

77. **மீனாட்சிசுந்தரம் பிள்ளை, தி. ச., –**
(பதிப்பு) சங்கற்பநிராகரணம், திருவாவடுதுறை ஆதீனம், *1953.*

78. **மெய்கண்ட சாத்திரம் –**
தருமபுர ஆதீனம், *1942.*

79. **வாகீசமுனிவர் –**
ஞானமிர்தம் (பதிப்பாசிரியர் ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை.) அண்ணமலைப் பல்கலைக் கழகம், *1954.*

80. **வெள்ளியம்பலவாண சுவாமிகள் –**
முத்தி நிச்சயப் பேருரை, தருமபுரம் ஆதீனம், *1946.*

81. **வெள்ளைவாரணம், க., –**
பன்னிருதிருமுறை வரலாறு, பகுதிI, அண்ணமலைப் பல்கலைக் கழகம், *1962.*

82. **வேங்கடசாமி, மயிலை. சீனி., –**
இறைவன் ஆடிய எழுவகைத் தாண்டவம், மலரகம், சென்னை, *1948.*

## மலர்கள்

1. **கரந்தைக் கட்டுரை –**
கரந்தைத் தமிழ்ச்சங்க வெள்ளிவிழா வெளியீடு, *1938.*

2 தருமைக் கனகாபிஷேக விழா மலர் –
தருமபுரம் ஆதீனம், 1961.

3. பத்தாண்டு ஆட்சி மலர் –
தருமபுரம் ஆதீனம், 1943.

4. பொன் விழா மலர் –
சைவசித்தாந்த மகாசமாஜம், சென்னை, 1955.

5. மெய்கண்டான் சித்தாந்த மாநாடு –
தருமபுர ஆதீனம், 1944.

6. ஸ்ரீ கம்பஹரேசுவரசுவாமி மகாகும்பாபிஷேக மலர் – தருமபுரம் ஆதீனம், 1963.



# சைவ சமயத் தோற்றமும் வளர்ச்சியும்

## பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 23 | 19 | முற் | முற்கூறிய |
| 28 | 3 | 9-ஆம் | 8-ஆம் |
| | 13 | 8-ஆம் | 9-ஆம் |
| 32 | 26 | அமைந்திருந்தது. | அமைந்திருக்கின்றது. |
| 42 | அடிக்குறிப்பு | | |
| | 33 | ஏழையடியார்கள் | ஏழையடியாரவர்கள் |
| 55 | 5 | விஞ்ஞானக் கலர் | விஞ்ஞான கலர் |
| | 28 | துறவி | துறவு |
| 56 | 22 | அனேந் | அணேத் |
| 64 | அடிக்குறிப்பு | | |
| | 7 | கண்ணுதலேநீ | கண்ணுதலாய்க் |
| 67 | 10 | மன்னுமாமலே சொன்ன | மன்னுமாமலே மகேந்திர மதனுல் சொன்ன |
| 68 | 1 | தழைத்துக் குழைத்து அவையல்லவாய் | தழைத்துப் பிழைத்தவை அல்லேயாய் |
| 89 | 1 | காலத்தடல் | காலத்தால் |
| 105 | 20 | உள்ளது. | உள்ளன. |
| 106 | 22 | வேதனேப்படும் | மற்றைத் தெய்வங்கள் வேதனேப்படும் |
| 112 | 3 | விளக்கினர் | விளக்கினர். |
| 121 | 24 | அவரது | தமது |
| 138 | 8 | கண்ணகி | கண்ணி |
| 146 | 2 | வழி வழ | வழி வழி |
| 165 | 17 | relevence | relevance |

## ஆசிரியருடைய பிற நூல்கள்:

### தமிழில்

1. வழிகாட்டி — நியூ செஞ்சரி புக்ஹவுஸ், சென்னை.
2. நாமிருக்கும் நாடு — ,,

### மொழிபெயர்ப்பில்

1. மண்ணும் மனிதரும் — சாகித்திய அக்காதெமி, சென்னை.
2. கன்னடக் கட்டுரைத் திரட்டு — ,,
3. வசவண்ணர் வாக்கமுது — ,,
4. அழிந்த பிறகு — நேஷனல் புக் டிரஸ்ட், தில்லி.
5 புரந்தர தாசர் — ,, (அச்சில்)

### ஆங்கிலத்தில்

1. ABC of Tamil — விற்பனை: பாரி நிலையம் சென்னை.
2. Hymns And Proverbs — ஸ்ரீகாசிமடம், திருப்பனந்தாள்.

சுந்தரத் தமிழில் சுவைகுன்ருது நூல்களைத் தரும்

# சோமு நூலகத்தின் வெளியீடுகள்

1. அமெரிக்காவைப் பார்!

– சோமலெ.

விரிவான புதிய பதிப்பு விலை ரூ. 8—50.

2. சைவ சமயத் தோற்றமும் வளர்ச்சியும்

– டாக்டர். டி. பி. சித்தலிங்கம். விலை ரூ. 8—00

3. அலைகடலுக்கு அப்பாலும் நகரத்தார்களின் ஆலயப்பணிகள்

– சோமலெ.

4. சிதம்பரம் மூலட்டான ஈசுவரர்

– பதிப்பாசிரியர்: சோமலெ.

5. மதுரை மாவட்டம்

– சோமலெ.

## எங்களிடம் கிடைக்கும் பிற நூல்கள்

EUROPEAN IMPACT ON MODERN TAMIL WRITING AND LITERATURE

– SOMALAY.

இந்நூலாசிரியர் டாக்டர் டி. பி. சித்தலிங்கம் (பி. காஞ்சிபுரம்) சென்னைப் பல்கலைக்கழகத்தில் தமிழ் எம். ஏ. பட்டமும், உமாபதிசிவாசாரியருடைய சித்தாந்த அஷ்டகம் பற்றிய ஆராய்ச்சிக் கட்டுரை எழுதிக் காசி இந்துப் பல்கலைக்கழகத்தில் பிஎச். டி. பட்டமும் பெற்றவர். கல்கத்தாவில் இந்திய அரசின் மானிட இயல்துறையிலும், புது தில்லியில் அனைத்திந்திய வானொலியிலும், யூனியன் பப்ளிக் சர்விஸ் கமிஷனிலும், காசி இந்துப் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையிலும் பணியாற்றியவர். 1971 முதல் 1979 மார்ச்சு வரை எட்டு ஆண்டுகள் மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் அஞ்சல் வழிக் கல்வித்துறை நெறியாளராக இருந்திருக்கிறார்.

தமிழில் பல சிறுகதைகளும், கட்டுரைகளும், கவிதைகளும் எழுதியுள்ளார். சைவசித்தாந்தத்தில் இவருக்குள்ள புலமை இந்நூலாலும் தொடர்ந்து வெளிவர இருக்கும் நூல்களாலும் தெரியவரும். ஆங்கிலத்திலும் இவர் சில நூல்களைப் படைத்துள்ளார். கன்னட மொழியில் புகழ் பெற்றுள்ள நூல்கள் சிலவற்றைத் தமிழில் மிக அழகாக மொழி பெயர்த்துள்ளார். இவர் இப்போது கல்கத்தா பல்கலைக் கழகத்துத் தமிழ்த்துறைத் தலைவராகவும், பேராசிரியராகவும் இருந்து வருகிறார்.